# நாட்டுக்கோட்டை நகரத்தார் வரலாறு



உ
மரகத விநாயகர் துணை

# நாட்டுக்கோட்டை நகரத்தார் வரலாறு

வித்துவான்

வயிநாகரம் அ. இராமநாதன் செட்டியார் அவர்கள்

தொகுத்தது

மகாமகோபாத்யாய, முதுபெரும் புலவர்,
சைவசித்தாந்த வித்தகர்,
பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார் அவர்களால்
திருத்தி விளக்கி அமைக்கப்பெற்று

சென்னை நகர முன்னாள் மேயர்
திரு. R. இராமநாதன் செட்டியார் அவர்களால்
வெளியிடப் பெற்றது.




1953
விஜய ஆண்டு

முதற் பதிப்பு : 1953,



விலை ரூ. 4-8-0

புத்தகம் கிடைக்குமிடம் :

திரு. கு. பள. சித. சுப்பய்யா செட்டியார்
மு. ராம. ராம. வீடு
கானாடுகாத்தான் (ராமநாதபுரம் ஜில்லா)

&

கமர்ஷியல் பிரிண்டிங் அன் பப்ளிஷிங் ஹவுஸ்,
46, அரண்மனைக்காரத் தெரு, சென்னை-1.

---

அச்சிட்டோர் : கமர்ஷியல் பிரிண்டிங் அன் பப்ளிஷிங் ஹவுஸ்,
46, அரண்மனைக்காரத் தெரு, சென்னை-1.

3614

பொருளீட்டி அறம் பேணிப் புகழ் வளர்த்து நெறி நின்றுங்

பொருளீட்டி அறம்பேணிப் புகழ்வளர்த்து
நெறிநின்று பொருவில் ஈசன்
அருளீட்டி வாழ்ந்துவரும் தனவணிகர்
வரலாறும் ஆழிக் கண்ணே
இருளோட்டும் பொருண்மணிகள் பலவுளமற்
றிவைகாண எழுமின் சான்றீர்
தெருளீட்டும் கருவியெனத் திகழ்தருமிந்
நூல்நீடு சிறக்க நன்றே.

# பதிப்புரை

நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் தொன்று தொட்டுப் பர்மா, மலேயா, இந்தோ சைனு, இலங்கை முதலிய அயல்நாடுகளுக்குப் போய், அங்கே பெரும்பொருள் தேடி, அதை நம் இந்திய நாட்டில் பல தரும வழிகளில் செலவு செய்திருக்கிருர்கள். ஆனுல், நம் நல்லூழ் இன்மை காரணமாக அண்மையில் நடந்த உலகப் பெரும் போரினுல் கிழக்கு ஆசிய நாடுகள் சீர்குலைந்து போனதாலும், இந்தியாவுக்கும் பர்மா முதலிய அயல்நாடுகளுக்கும் போக்கு வரவு சில ஆண்டுகளுக்குத் தொடர்ந்து இல்லாமையாலும், நகரத்தார்களில் பெரும்பாலோருக்குத் தாய் நாட்டில் தொழில்துறை இல்லாததாலும் நகரத்தார்களின் பொருள் நிலை மிகவும் கீழ்நிலைக்கு வந்துவிட்டது. ஆதலால் முன்போல் உயர்நிலை அடையவேண்டும் என்னும் கருத்தும் கவலையும் நகரத்தார்களில் ஒருவனுகிய எனக்கு எப்போதும் இருக்கிறது. நம் முன்னேர்கள் அரும்பாடுபட்டுப் பொருள்தேடி அறஞ்செய்த வரலாற்றைத் தெரிந்து கொண்டால், நாமும், நம் பின்னேர்களும் இப்போதுள்ள தளர்நிலைக்கு மனங் கலங்காமல், நம் முன்னேர்களைப் பின்பற்றி ஊக்கமாக முயற்சிகள் செய்வதற்கு உதவியாக இருக்குமென்றும், மற்றவர்களுக்கும் இது ஒரு எடுத்துக்காட்டாக இருக்குமென்றும் நினைத்து, நகரத்தார் வரலாற்றை ஒரு நூலாக வெளியிட விரும்பினேன்.

இவ்விருப்ப மிகுதியால், சில இடங்களுக்குத் தேடிச் சென்று இவ்வரலாறு பற்றிய பழைய நூல்கள் சிலவற்

றைப் பார்த்தேன். அவைகளில் ஒன்றேனும் முழு வரலா றுக இல்லையாதலால், இவ் விவரங்கள் எங்கிருந்தாலும், எவ்வளவு சிரமப்பட்டாலும், எப்படியாவது வாங்கி எல்லாவற்றையும் தொகுத்து ஒரு முழு வரலாற்று நூலாக வெளியிட வேண்டும் என்று நினைத்தேன். கடந்த ஓராண் டாக நான் தொடர்ந்து செய்த முயற்சியின் பயனுகப் பல நண்பர்களின் உதவியால், இவ்வரலாறு பற்றிய செய்தி களைச் சேர்க்க முடிந்தது. தேவகோட்டை திரு. டி. ஆர். அருணசலம் அவர்கள், தம்முடைய பெரு முயற்சியாலும், அன்பினுலும் பெருமை பொருந்திய வைநாகரம் குடும்பத் தாரிடமிருந்து பல குறிப்புக்களை வாங்கித் தந்து உதவியது சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது.

சேர்க்கப் பெற்ற குறிப்புக்களுடன் என் நண்பர் பலவான்குடி திரு. கும. சு. சுப்பிரமணியன் செட்டியார், எம். ஏ., அவர்களை அழைத்துக்கொண்டு, மகாமகோ பாத் தியாய, முதுபெரும் புலவர், சைவசித்தாந்த வித்தகர். பண்டிதமணி திரு. மு. கதிரேசச் செட்டியார் அவர்களி டம் போய், அவர்களின் உதவியை வேண்டினேம். அவர் கள் தம் உடல் தளர்ச்சியையும் பொருட்படுத்தாமல், தம் மால் இயல்வதைச் செய்வதாக உடனே உடன்பட்டார் கள். அது எங்கள் பெரும் பேறுகும். அன்று (9-2-51) ஒரு நல்ல நாள் ஆதலால், பண்டிதமணி அவர்கள் அன்றே இவ்வரலாற்றை எழுதத் தொடங்கினர்கள். அவர்களின் உடல்நிலை சில நேரங்களில் மிகச் சோர்வுற்றிருந்தும் அவர் கள் இப்பணியை நிறைவேற்ற வேண்டும் என்ற ஒரே நோக்கத்துடன் திரு. கும. சு. சுப்பிரமணியன் செட்டி யார் அவர்களையும், வித்துவான் திரு. முத்துவேங்கடாசல மையர் அவர்களையும் உடன் வைத்துக்கொண்டு இந்நூலை எழுதிமுடித்து உதவினர்கள். பண்டிதமணி அவர்களின்

பேருதவி இல்லையேல் இந்நூல் வெளிவந்திருக்கமுடியாது. அவர்களுக்கு நான்மட்டுமன்று; நகரத்தார் எல்லோரும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறார்கள்.

இந்நூலின் அச்சு வேலைகளைத் தொடர்ந்து பொறுப்பாகப் பார்த்து உதவியவர், திரு. கும. சு. சுப்பிரமணியன் செட்டியார் அவர்களாவர். அவர்களுக்கும், மேற்குறிப்பிட்ட திரு. முத்துவேங்கடாசலமையர் அவர்களுக்கும் என் நன்றி உரியதாகும்.

நகரத்தார்கள் அயல்நாடுகளில் தொழில் துறைகளைச் சிறப்பாகவும் வெற்றியாகவும் எவ்வாறு நடத்தினார்களோ அவ்வாறே இனி நம் தாய்நாட்டிலும் செம்மையாகச் செய்து, "செல்வத்துப் பயனே ஈதல்" என்னும் பெரியோர் வாக்கிற்கேற்பப் பல அறங்களை வழக்கம்போல் புரிந்து, நம் நாட்டின் வளத்தை உயர்த்துவார்களென்று நம்புகிறேன். நகரத்தார்கள் எல்லா நலங்களும் பெற்று நீடூழி தழைத்து வாழும்வண்ணம் இறைவனை வேண்டுகிறேன்.

கானாடுகாத்தான்
தற்சமயம் சென்னை
25—3—53

ராம. இராமநாதன் செட்டியார்.

# முன்னுரை

"நாட்டுக்கோட்டை நகரத்தார் வரலாறு" என்னும் இந் நூல், பூங்குன்ற நாட்டு வேலன்குடிச் சிவாலயத்தில் உள்ள கல்வெட்டினையும் அதற்கேற்ப எழுதப்பட்டுத் துளாவூர் மடத்தில் இருந்த செப்பேட்டினையும் ஆதார மாகக் கொண்டு தேவகோட்டை வித்துவச்சிகாமணி வீர. லெ. சின்னையச் செட்டியார் திருத்தமாக எழுதி வைத்திருந்தபடிக்கு ஏற்பப் பலராலும் அச்சிடப்பட்ட "நாட்டுக்கோட்டை நகரத்தார் சரித்திரம்" என்னும் நூலை ஆராய்ந்து எழுதப் பெற்றதாகும்.

இந் நாட்டுக்கோட்டை நகரத்தார், ஆதியில் நாக நாட்டில் சாந்தியாபுரி என்னும் நகரத்திலே சைவ ஒழுக்க முடையராய், பெரும் செல்வமும் மன்னிணை மரியாதையும் பெற்று வாழ்ந்து வந்தார்கள் என்பதும், பின்னர் தென் னாட்டு வாழ்க்கையை விரும்பிக் காஞ்சீபுரத்திற் குடி யேறிப் பன்னூறாண்டுகள் வாழ்ந்தார்கள் என்பதும், அதன்பின் சோணாட்டை யடைந்து அதன் தலைநகராகிய காவிரிப்பூம்பட்டினத்தில் பல்லாண்டுகள் வாழ்ந்து வந் தனர் என்பதும், அங்கு அரசுபுரிந்து வந்த சோழ மன்ன ருள் ஒருவன் செய்த பெருங் கொடுமையால் பலர் உயிர் துறக்க நேர்ந்தது என்பதும், எஞ்சிய ஆண்மக்கள் அற நூல் விதிப்படி வேளாளர் குலத்துப் பெண்களை மணந்து வாழும் நாளில் பாண்டிய மன்னனால் வரவேற்கப்பட்டுப் பாண்டி நாட்டை யடைந்தனர் என்பதும் பிறவும் இச் சரித்திரத்திற் குறிக்கப்பட்டனவாம்.

வேளாளர் குலத்துப் பெண்களை மணந்தமையால் ஆண்மக்களுக்குப் பரம்பரையாகவுள்ள அந்தணர் குலத்துச் சிவாசாரியரும், பெண்மக்களுக்குச் சைவ வேளாள குலத்துச் சிவாசாரியரும், குருக்களாக ஏற்பட்டனர் என்பதும், பாண்டிய மன்னர்களால் கொடுக்கப்பட்ட இளையாத்தன்குடி முதலிய ஒன்பது சிவாலயங்களையும் தமக்கு உரிமையாகக் கொண்டு ஒன்பது கோயில் வகுப்பாக வாழ்க்கை நடத்தினர் என்பதும், கலாமடம், பாதரக்குடி மடம் ஏற்பட்டமைக்குக் காரணம் இன்னதென்பதும் இச் சரித்திரக் குறிப்பில் உள்ளன.

இவ்வாறுள்ள சரித்திரத்தைப் பல கல்வெட்டுக்களையும் வேறு பல சான்றுகளையும் கொண்டு ஆராய்ந்து திருத்தமாக வெளியிடவேண்டும் என்று அமராவதிபுதூர் வித்துவானும் சிறந்த கவிஞரும் ஆகிய **வயிநாகரம் அ. இராமநாதன் செட்டியார்** அவர்கள் விரும்பி முயன்று தொகுத்து வைத்திருந்த குறிப்புக்களைக் கொண்டு அந்நூல் எழுதப்பட்டதாகும்.

இது **வரலாற்றுப் பகுதி**, **வாழ்க்கை நிலைப்பகுதி**, **அறச்செயற் பகுதி**, என்னும் மூன்று பிரிவுகளாக அமைக்கப்பெற்றது. **வரலாற்றுப் பகுதியில்** முன்னைச் சரித்திரத்தில் பிறழ்ந்து கிடந்தன வெல்லாம் திருத்தியமைக்கப்பெற்றன. **வாழ்க்கை நிலைப் பகுதியில்** ஒன்பது கோவில்கள் இன்னவென்பதும், அவற்றைப் புதுக்கியமைத்ததில் இவ்வளவு பொருள் செலவாயின வென்பதும், ஒவ்வொரு கோயிலையும் சார்ந்த புள்ளிகள் இவ்வளவென்பதும், இப்பொழுது நகரத்தார்கள் குடியிருந்து வாழ்ந்துவரும் 78 ஊர்கள் இன்ன என்பதும், ஒவ்வோர் ஊரிலும் இன்னஇன்ன கோயில் புள்ளிகள் இத்துணையர் என்பதும், அவ்வவ்வூரிலும் அவரவர்கள்

செய்த அறச் செயல்கள் இன்ன என்பதும், அவற்றிற்குச் செலவான பொருள் இவ்வளவென்பதும் பிறவும் விளக்கப் பட்டுள்ளன. அறச்செயற் பகுதியில் சோழநாடு முதலிய பிறநாடுகளில் உள்ள தேவாரம் பெற்ற சிவதலங்களைப் புதுக்கி யமைத்ததில் நகரத்தார் இன்ன இன்ன தலத்தில் இவ்வளவு இவ்வளவு தொகை செலவிட்டுத் திருப்பணி முதலியன செய்து கும்பாபிடேகம் நடத்தினர் என்பதும், பல்கலைக்கழகம், கல்லூரி, உயர்நிலைப்பள்ளி, மருத்துவ நிலையம் முதலிய பெரிய அறச் செயல்களை எவ்வெவ்விடங் களில் எவ்வளவு எவ்வளவு தொகை செலவிட்டு யார் யார் செய்தனர் என்பதும் பிறவும் விளக்கமாக எழுதப்பட் டுள்ளன.

நகரத்தார்கள் செய்த அறங்களுள் இதன்கட் குறிக் கப்பட்ட பெரிய அறச் செயல்களுக்குச் செலவிட்ட தொகை பதினொரு கோடி ரூபாய் வரையில் ஆகும். இதன் கட் குறிக்கப்படாமல் ஆங்காங்கு அவ்வப்போது செய்து வந்த சிறிய சிறிய அறங்களும் மிகப் பலவாம். சோழ நாடு முதலியவற்றிலுள்ள சில தலங்களில் செய்யப்பட்ட சிவாலயத் திருப்பணி முதலியவற்றிற்குச் செலவிடப்பட்ட தொகை இவ்வளவென்று தெரியக்கூடாமையால் சேர்க் கப்படவில்லை.

நாட்டுக்கோட்டை நகரத்தாருள் சைவசமயத்தை யன்றி வேற்று மதத்தை அடைந்தவர்கள் யாரும் இல்லை. இந்நாட்டில் உள்ள வகுப்பினருள் ஒருவரேனும் கிரித்த தவம் முதலிய பிற மதங்களைத் தழுவாத நிலையிலுள்ள மர பினர் யாரென நினைக்குங்கால் இந் நாட்டுக்கோட்டை நகரத்தார் மரபினரே முன்னிற்பவர் ஆவர். ஆகவே இவர்கள் பால் சமயப் பிறழ்ச்சி ஒரு சிறிதும் இல்லை.

இவர்கள் முன்னர்ச் செய்த அறங்கள் பெரும்பாலும் சிவாலயத் திருப்பணிகளும் தேவார திருவாசக வேதாகம பாடசாலைகளும் பசுமடம் முதலியனவும் ஆகிய தருமங்களே. பின்னர்ச் செய்தன பல்கலைக் கழகம் கல்லூரிகள் மருத்துவ நிலையங்கள் முதலிய மக்களுக்கு இன்றியமையாத அறங்களாகும்.

வாணிகத் துறையில் தாய் நாடேயன்றி அயல் நாடுகள் பலவற்றிலும் கடல்வழி வான்வழி இவற்றின் மூலம் சென்று சிறந்த முறையில் வாணிகம் புரிந்து பெரும் பொருள் படைத்து அவ்வவ்விடங்களிலும் சிவதருமங்கள் பல இயற்றினர். அத்தருமங்களுக்காகச் செலவிட்ட தொகை ஒரு கோடி ரூபாய்க்கு மேலாகும்.

தற்காலம் தமிழிலும் ஆங்கிலத்திலும் சிறந்த பயிற்சியுடையவர்களாய்ப் பட்டங்கள் பெற்ருர் இம்மரபிற் பலர் உளர். பல்கலைக் கழகம் கல்லூரிகள், முதலியவற்றில் ஆசிரியர்களாகவும் பத்திராதிபர்களாகவும் வழக்கறிஞர்களாகவும், சிறந்த மருத்துவர்களாகவும் பெரிய வங்கிகளை நடத்துபவர்களாகவும் பொறிக்கலை வல்லுநர்களாகவும் காரியாலயங்களில் இருந்து அவ்வச் செயல்களைத் திறமையுடன் ஆற்றிப் புகழ்பெற்று வருவோரும் பலராவர்.

வித்துவான் அ. இராமநாதன் செட்டியார் இவ்வரலாறு பற்றித் தொகுத்து வைத்திருந்த குறிப்புக்கள் பலவாயினும் வேண்டாதனவும் இடையிடையே விரவி ஒழுங்கு படுத்தப் படாமல் இருந்தன. அவற்றை அவர் குடும்பத்தாரிடமிருந்து கானடுகாத்தான் **திரு. சா. ராம. மு. ராம. இராமநாதன் செட்டியார்** அவர்கள் வாங்கியும், தாமே பல குறிப்புக்களை விசாரித்துத் தொகுத்தும் என்னிடம் தந்து ஒழுங்கு

படுத்தி அச்சிடுதற்கேற்ற முறையில் எழுதித்தர வேண்டு மென்று விரும்பினார்கள்.

வித்துவான் அ. இராமநாதச் செட்டியார் இக் குறிப் புக்களைத் தொகுத்துப் பதினைந்து ஆண்டுகள் ஆயின. அக் காலத்தின்பின் வளர்ச்சியடைந்த புள்ளி விளக்கங்களையும் அறச் செயல்கள் முதலியனவற்றையும் மு. ராம. அவர்கள் தம் அலுவலகத்தாரைக் கொண்டு விசாரித்துத் தரச் செய் தனர். மேற்கண்ட குறிப்புக்களைக் கொண்டே இஃது எழுதப்பட்டது. அக்குறிப்புக்களிற் காணப்படாமல் யானாக எதுவும் செய்யவில்லை.

இதனை அச்சிட்டு வெளியிடுவதற்கு விரும்பி முன் வந் தவர் **திரு. சா. ராம. மு. ராம. இராமநாதன் செட்டியாரவர்கள்.** இவர்கள் மேல்நாடுகள் பலவற்றிற்கும் வாணிக முறை கருதிச் சென்று ஆங்காங்குள்ள நிகழ்ச்சிகளை நன்கு அறிந்தவர்; இனிய குணங்களும், பிறர்க்கு உதவி செய் யும் விருப்பமும், எக்காரியத்திலும் தளராத ஊக்கமும் உடையவர்: இந்திய அரசாங்க வங்கியில் நிருவாக ஆலோ சனைக் குழுவினருள் ஒருவராக உள்ளார். சென்னை நக ராண்மைக் கழகத்தில் மேயராக இருந்து நகர்மக்களுக்குச் சிறந்த தொண்டாற்றியவர். இத்தகைய குணஞ் செயல் கள் வாய்ந்த இவர்கள் விருப்பத்தை நிறைவேற்றுவது நல்லது என்று எனக்குத் தோன்றியது.

தொன்று தொட்டுச் செல்வமும் சிறப்பும் புண்ணிய மும் புகழும் பெற்றுச் சைவ சீலர்களாக வாழ்ந்து வரும் நாட்டுக்கோட்டை நகரத்தார்களின் சரித்திரத்தை உல கறிய வெளிப்படுத்தி உபகரிக்க முன்வந்த திரு. இராம நாதன் செட்டியாரவர்களின் உபகாரச் செயல் பெரிதும்

போற்றத்தக்கதாகும். இச் சரித்திரத்தை ஒழுங்குபடுத்திப் பிரதிஎழுதுதற்கு உடனிருந்து உதவியவர்கள் பள்ளத்தூர் உயர்நிலைப்பள்ளித் தமிழாசிரியரும் திருவண்ணமலை ஆதீன வித்துவானும் ஆகிய பண்டிதர் திரு. மு. முத்து வேங்கடாசலம் ஐயரவர்களும், பலவான்குடி திருவாளர் குமட. சு. சுப்பரமணியன் செட்டியார் M.A. அவர்களும் ஆவர். இவர்கள் நன்றி பெரிதும் பாராட்டத்தக்கது.

இதனை அழகான முறையில் அச்சிட்டு முடித்த சென்னை கமர்ஷியல் பிரிண்டிங் அச்சகத்தார்க்கும், அச்சிடுங்கால் அவ்வப்போது அச்சுப் பிரதிகளைத் திருத்தி உதவிய திரு. குமட. சு. சுப்பிரமணியன் செட்டியார் M.A. அவர்களுக்கும் நன்றியறிவைப் புலப்படுத்திக் கொள்ளு வோமாக.

மகிபாலன்பட்டி
6-10-1952.

மு. கதிரேசன்

# உள்ளுறை

உ

மரகதவிநாயகர் துணை

# நாட்டுக்கோட்டை நகரத்தார் வரலாறு

## தோற்றுவாய்

இவர்களைப் பற்றிய வரலாறு நாட்டுக்கோட்டை நகரத்தார் சரித்திரம் எனப் பெயர் பெற்று விளங்குகின்றது.

இவ்வரலாறு பூங்குன்றநாட்டு வேலன்குடிக் கோவில் சிலாசாசனத்திலும், துளாவூர் மடத்தில் செப்பேட்டிலுமிருப்பதாக எழுதப் பெற்றிருக்கின்றதென்றும், அவற்றை அனுசரித்துத் தேவகோட்டை மேலைவீட்டுச் சின்னையா செட்டியாரவர்கள் எழுதி வைத்திருந்த பிரதிக் கிணங்க, தஞ்சை சதாவதானம் சுப்பிரமணிய ஐயரவர்கள் 1904-ம் வருடம் ஒரு புத்தகமும், 1911-ம் வருடம் இரண்டாவதாக மகிபாலன்பட்டி, பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியாரவர்கள் 'நாட்டுக்கோட்டை நகரத்தாரின் சீர்திருத்தம்' என்று ஒரு புத்தகமும், 1919-ம் வருடம் காரைக்குடி சொக்கலிங்க ஐயா அவர்கள் 'நாட்டுக்கோட்டை நகரத்தார் மரபு விளக்கம்' என்று ஒரு புத்தகமும் எழுதி அச்சிட்டு வெளிப்படுத்தி யிருக்கின்றார்கள்.

இந்நாட்டுக்கோட்டை நகரத்தார்களின் வரலாற்றிற்கு ஆதாரமாயுள்ளவைகள், இப்பொழுது கண்ணுக்குக் காணப்படாத செப்பேடும் சிலாசாசனமும் நிற்க, இம்மூன்று புத்தகங்களேயாகும்.

பாதரக்குடியிலிருந்த 'நகரத்தார் சரித்திர'த்திற்கும், கர்னபரம்பரைக்கும், சரித்திர ஆராய்ச்சிக்காரர்களின் கருத்துக்களுக்கும், சரித்திரங்கள் நிகழ்ந்த இடங்கள் முதலியவை கூட மிகவும் மாறுபட்டும் முன்னுக்குப் பின் விரோதமாகவும் இருந்தது பற்றி, இரணியூர், இளையாத்தன்குடி, எம்பெருமான் விண்ணகரத் திருக்கோவில் முதலிய கல்வெட்டுக்களை ஆராய்ச்சி செய்தும், கீழச்சிவற்பட்டி பாடுவார் முத்தப்ப செட்டியார் 'திருமுகவிலாசம்', பாதரக்குடியிலிருந்த சில செய்யுட்கள் இவைகளை ஆதாரமாக வைத்தும் இந்த நகரத்தார் வரலாற்றை எழுதியுள்ளேன்.

இந்நாட்டுக்கோட்டை நகரத்தார்கள், முதலாவது நாகநாட்டில் "சாந்தியாபுரி" என்னும் நகரத்தில் நெடுங்காலம் வாழ்ந்து வந்தார்களென்றும், அவ்வூர் அரசன் கொடுமையால் கலியுகம் 204-வது ஆண்டில் காஞ்சீபுரத்துக்கு வந்து குடியேறினர்கள் என்றும், அவ்வூரில் "2108" ஆண்டுகள் வாழ்ந்திருந்தவர்களை அவ்வூரரசன் கொடுமை செய்ததால், கலியுகம் 2312-ம் ஆண்டு சோழ தேசத்திற்கு வந்து காவிரிப்பூம்பட்டினத்தில் குடியேறினர்கள் என்றும், கலியுகம் 3775-ம் வருடம்வரை (அதாவது 1463 ஆண்டுகள்) அங்கே வாழ்ந்துகொண்டிருந்தவர்களைச் செய்த கொடுமையால் 8000 குடியினரும் மனைவியர்களுடன் மானத்தைக் காக்கும் பொருட்டு உயிர் நீத்தனர் என்றும், எஞ்சியிருந்த பள்ளிக்கூடத்துப் பிள்ளைகள் ஒன்

பது ஆண்டுகள் சென்று (அதாவது கலியுகம் 3784-ம் ஆண்டில்) அவ்வணிகர்க்குக் கொடுந் துன்பஞ் செய்த பூவந்திச் சோழன் உயிரோடிருக்கையிலேயே அவன் மகன் இராஜபூஷண சோழன் என்பவனல், அவனுக்கு முடிசூட்டும் நிமித்தமாக வேளாள மரபுப் பெண்களைத் திருமணம் செய்து கொண்டார்களென்றும், சௌந்தர பாண்டியன் என்ற மன்னனல் அவ்விராஜபூஷண சோழனைக் கேட்டுக், கலியுகம் 3808-வது ஆண்டில் சோழ நாட்டிலிருந்து அழைக்கப்பட்டு வந்து இளையாத்தன்குடியில் குடியேறினர்கள் என்றும், அப்பாண்டிய மன்னன் கலியுகம் 3813-ம் வருடம் (அதாவது கி. பி. 712-ம் ஆண்டில்) மாற்றூர்க் கோவிலையும் வயிரவன்பட்டிக் கோவிலையும் கலியுகம் 3815-ம் வருடம் (கி. பி. 714-ம் ஆண்டு) இரணியூர்க் கோவிலையும், பிள்ளையார்பட்டிக் கோவிலையும், நேமம் கோவிலையும், இலுப்பைக்குடிக் கோவிலையும், கலியுகம் 3819-ம் வருடம் (கி. பி. 718-ம் ஆண்டு) சூரைக்குடிக் கோவிலையும் வேலன்குடிக் கோவிலையும் விட்டுக் கொடுத்தான் என்றும், இளையாத்தன்குடிக் கோவிலை இளையாத்தன்குடிக் கோவிலார்களே வைத்துக் கொண்டார்களென்றும் கலியுகம் 4262-ம் ஆண்டு (கி. பி. 1161) பூங்குன்ற நாட்டு வேலன்குடியில் வசித்துக்கொண்டிருந்த நேமம் கோவில் அருணசலம் என்பவன் மகள் 5-வயதுள்ள முத்து மீனட்சி என்பவளைக் 'காருண்ய பாண்டியராசன்' என்பவன் தூக்கிச் சென்றமையான் அவ்வூரை விட்டு விட்டு மாற்றூர் முதலிய இடங்களில் வந்து குடியேறினர்கள் என்றும் கலியுகம் 4389-ம் வருடம் (கி. பி. 1288) அரியூர்ப் பட்டணம் எடுபட்டுப் போனதால், அவ்வகையார் மலையாளத்தைச் சேர்ந்த கோட்டாற்றுக்குப் போய்விட்டார்கள் என்றும், கலியுகம்

4644-ம் வருடம் (கி. பி. 1543) நாட்டரசன்கோட்டையில் குடியிருக்கையில் கொள்ளை கலகங்களேற்பட்டனவென்றும், கலியுகம் 4666-ம் ஆண்டில் (கி. பி. 1565) பாதரக்குடி மடம் ஏற்பட்ட தென்றும் பலவாறு எழுதப்பட்டிருக்கின்றது.

# நகரத்தார் வரலாறு

சோழ நாட்டின் தலைமை நகரமாகிய காவிரிப்பூம் பட்டினம், பட்டினம், புகார் என்று பல பெயர்களைப் பெற்று, முன்னொரு காலத்து உலகமெல்லாம் புகழப் பெற்றிருந்தது. அக் காலத்துத் தன வைசியர்கள் குபேரனும் பொறாமை கொள்ளத்தக்க பெருஞ் செல்வ வளத்துடன் சிவ பக்தி, அடியார் பக்திகளிற் சிறந்து அறத்தின் வழியே பொருளீட்டி ஒரு குறைவுமின்றி வாழ்ந்து வந்தார்கள்.

அக் காலத்தில் காவிரிப்பூம்பட்டினமானது, இப்போது கடற்கரைப் பட்டினமாயும் மாகாணத் தலைநகராயுமிருக்கின்ற சென்னை போன்று பிரபலமாய்ப் பிரசித்தி பெற்றிருந்தது. இப் புகார்ச் சிறப்பைச் சிலப்பதிகாரம், பெரிய புராணம் முதலிய பெரு நூல்களிற் பரக்கக் காணலாம். அறுபத்து மூன்று நாயன்மார்களில் ஒருவராம் இல்லையே யென்னாத இயற்பகையாரும், கைலை மலைக்குத் தலையால் நடந்து சென்று இறைவனால் 'அம்மையே' என்று அழைக்கப்பெற்ற பெருமை வாய்ந்த காரைக்காலம்மையாரும், பெருஞ் சிவ ஞானியாகிய பட்டினத் தடிகளும், வெட்டுண் டிறந்த கணவனை யெழுப்பிய கற்புடைப் பெருந் தெய்வமாகிய கண்ணகி யம்மையாரும் இந் நகர்ப் பெருங்குடி வணிக மரபில் அவதரித்தவர்க ளென்றால் இந் நகர்ப் பெருமையும் இக் குலத்தவர் பெருமையும் எங்ஙனம் எடுத்துரைக்க இயலும்.

## முற்கால வாழ்க்கை நலம்

இப் புகார் நகரில் தன வைசியர்கள் *வளைவு கட்டி, அதனுள் ஒவ்வொரு வீதிக்கும் ஒவ்வொரு ஊர்ப் பெயர்

---

* பல இல்லங்களைத் தன்னுட் கொண்ட இருப்பிடம்.

வைத்து வாழ்ந்து கொண்டிருந்தார்கள். இங்குக் கோட்டைகள், திருநெல்வேலி மாவட்டத்தைச் சார்ந்த ஸ்ரீ வைகுண்டத்தில் தற்போதுள்ள கோட்டை போல் மண்ணூற் கட்டப் பெற்றிருந்தன. சோழ மன்னனுக்கு நகரத்தில் கோட்டையும் இவர்களுக்கு அவ்வரசன் ஆட்சியுட்பட்ட நாட்டிற் கோட்டையுமாக விருந்ததால் நாட்டுக் கோட்டையார் என்றும், புகார் நகரத்தில் நெடு நாள் தனவணிகர் நிலைபெற்றிருந்ததால், பாண்டி நாட்டிற்கு வந்தபின் அதன் அறிகுறியாக 'நகரத்தார்' எனவும் பெயர் பெற்றனர்.

அந் நகரில் ஒரு பிரிவினரான 1. ஒக்கூருடையார், 2. அரும்பூர்க்கிழார், 3. பெருமருதூருடையார், 4. கழனிவாசற்குடியார், 5. கிண்கிணிக்கூருடையார், 6. பேரசெந்தூருடையார், 7. சிறுசேற்றூருடையார் என்ற எழு வகுப்பினரும், திருவேட்பூருடையார் என்ற இரண்டு சகோதரர்களும் வாழ்ந்து வந்தார்கள்.

மேலே இரண்டாவதாகக் குறிப்பிடும் அரும்பூர்க்கிழார் என்பவர் பின்னர் 'பட்டண சாமியார்' எனப் பெயர் பெற்றிருக்கின்றனர்; அதை நோக்குமிடத்து, சிவயோக சிவானுபூதிப் பெருஞ் செல்வரான திருவெண்காடர் என்பார் திருவவதாரஞ் செய்த பின் அவர்கள் பெயரை அக் குலத்தினோர் அடைந்திருக்கின்றனர் என்று விளங்குகின்றது.

மற்றொரு பிரிவினரான 1. உறையூருடையார், 2. அரும்பாக்கூருடையார், 3. மணலூருடையார், 4. மண்ணூருடையார், 5. கண்ணூருடையார், 6. கருப்பூருடையார், 7. குளத்தூருடையார் என்ற எழு பிரிவினரும்,

மற்ெறாரு பிரிவினரான சிறுகுளத்தூருடையார் என்ற 1. பெரிய வகுப்பினர், 2. தெய்வநாயகர் வகுப்பினர், 3. பிள்ளையார் வகுப்பினர் என்ற சகோதரர்களும், அடுத்த படியான கழனிவாச லுடையார், மருதேந்திரபுர முடையார் என்ற இரண்டு பிரிவினரும் ஆக மூன்று பிரிவினரும்,

மற்ெறாரு பிரிவினரான ஊர்ப்பெயர் அறியப்படாத ஒரு வகுப்பினரும்,

மற்ெறாரு பிரிவினரான சூடாமணி புரமுடையார் என்ற ஒரு வகுப்பினரும்,

மற்ெறாரு பிரிவினரான கழனி நல்லூருடையார் என்ற ஒரு வகுப்பினரும்,

மற்ெறாரு பிரிவினரான புகழ் வேண்டிய பாக்கமுடையார் என்ற ஒரு வகுப்பினரும் ஆக ஏழு பிரிவினரும் தனித்தனியே வாழ்ந்து கொண்டு வந்தார்கள்.

"ஏழுநீள் நிலைகொள் மாடத்து இரவியின் புரவி யேழும்
தாழுவ இருபத் தேழு மாதருந் தானுந் தாண்டி
வீழுவன் இந்து இந்த விதமுயர் மனையில் நன்கு
வாழுவர் வணிகர் வீதி வளஞ்சொல வல்லார் யாரே"

இவ்வாறு மேன்மை பொருந்திய பெருந் தெருவில்,

"செம்பொனி லுருக்கி வார்த்த சிறுகட்டி அடுப்புக் கூட்டி
நம்பிய குளியல் போந்த குடச்சங்கு நடுவி லேற்றிப்
பம்புதேன் உலைநீர் பெய்து பவளத்தீ விறகு மூட்டி
அம்பொனின் மகளிர் வெண்முத் தரிசிச்சோறு ஆக்கு
[வாரால்."

"ஊழிற் பெருவலி யாவுள மற்ெறான்று,
சூழினுந் தான்முந் துறும்"

என்றபடிக்கும்,

" ஆனை வரும் பின்னே, மணி ஓசை வரும் முன்னே "

என்றபடிக்கும், இவர்களின் நிகரற்ற 'வாழ்க்கை நலத்திற்கு ஒரு பெருங் குறை நேர்வதன் அறிகுறியாக, மேற்கூறிய வளமிக்க வற்ருச் செல்வப் பெருக்குடைய நெடுந்தெருவில் ஒரு நாள் சோழ மன்னன் பல்லக்கேறிச் சென்று கொண்டிருக்கையில் தனவணிகர் குலத்திலுதித்த சிறு பெண்கள் சிற்றிலமைத்துச் சிறு சோருக்கி விளையாடிக் கொண்டிருக்க அவ் விளையாட்டு மகளிரில் கண்கவர் வனப்பின் மிக்க ஐந்து வயதுள்ள ஒரு சிறு பெண்ணைக் கண்டு, மன்னன் பெரிதும் ஆசையுற்று, அப் பெண்ணை எடுத்து வரச்செய்து தன் பல்லக்கில் வைத்துக்கொண்டு அரண்மனை போய்ச் சேர்ந்தான்.

அது தெரிந்த வணிகர்கள் உடனே அரண்மனைக்குச் சென்று பெண்ணை விடும்படி கேட்டனர்; மன்னன் அரண்மனையிலுள்ளாரால் விவரமெல்லாங் கேட்டறிந்து, அவர்களை நோக்கி "நீங்கள் இவ் விளங் குழந்தையை விலக்கி யொழித்து விடுவீர்கள் என்று அறிகின்றேன்; அங்ஙனம் செய்வீராகில் உங்களிற் பலர் தலைகளையும் வாங்கி எண்ணுயிரம் பொன் தெண்டமும் வாங்குவேன்" என்று வற்புறுத்திப் பெண்ணைத் திருப்பிக் கொடுத்து விட்டான்.

வணிகர்கள் அப் பெண்ணை அக்காலச் சாதி முறைப்படி விலக்கி யொழித்துவிட்டு, வீடு வந்து சேர்ந்து அரசனுணைப்படி எழு பிரிவினர் எழு தலைகளைக் கொடுக்கவும், ஒக்கூரார் வாக்குறுதி வியன் தலையைக் கொடுக்கவுமிசைந்து எண்ணுயிரம் பொன்னுடன் மிக்க தைரியமாய் அரண்மனைக்குச் சென்று அரசனுக்கு அறிவித்தனர்.

அரசன் இவர்கள் மனத் துணிவையும் குலச் செருக்கையும் நோக்கித் தன் மனத்தில் வேறு வகையான பெரும் பழி வாங்கவேண்டும் என்ற கெட்ட எண்ணங்கொண்டு "நீங்கள் போகலாம்; ஒரு பழி போதும்; மன்னித்தேன்" என்று அனுப்பி விட்டான்.

சிலநாட் சென்று காவிரி பெருக்கெடுத்து ஊரெங்கும் அழிக்கத் தலைப்பட்டது. அதுகண்ட அரசன் ஊரிற் குடியிருப்பவர்க் கெல்லாம் கூறுகூறாய் அளந்து விட்டு, மண்வெட்டியுங் கூடையுங் கொண்டு வந்து, வெட்டித் தலைச் சுமையாக அடைக்க வேண்டுமென்று தன் குடி மக்களுக்குப் பொதுவாணை யிட்டான். தன வைசியர்கள் அரசன் ஆணைப்படி நடவாமல் தங்கள் வியாபாரப் பண்ட சாலைகளிலுள்ள பஞ்சுப் பொதிகளால் தண்ணீரை யடைத்துத் தங்கள் கூறுகளைப் பூர்த்தி செய்து விட்டனர்.

அதுகண்ட அரசன் பெருங் கோபமும் பொறாமையுமடைந்தான். அப் பொறாமை காரணமாக ஒரு நாள் வணிகர்களை அரண்மனைக் கழைத்துத், தன்னுடைய பட்டத்து யானையை நிறுத்து நிறை சொல்லுங்கள் பார்ப்போம் என்றும், மோசமான தங்கத் தகட்டை மாற்றுச் சொல்லுங்கள் என்றும் கேட்க, அவர்கள் அவ்வாறே யானையை மதித்து நிறுத்தும், மேற்பூச்சுத் தங்கத்தை மாற்றுச் சொல்லியும், அரண்மனையை விட்டுத் தப்பித்து வெளிவந்தனர். மேலுஞ் சினங்கொண்ட சோழன் நீளம் போதாத கயிற்றைக் கொடுத்து, அவர்கள் கோட்டைக்குள்ளிருக்கும் ஒரு கிணற்றில் தண்ணீர் இறைக்கும்படி ஆணையிட்டான். அதுகண்ட வணிகர்கள் பொற்பணிகளை முடிந்து கிணற்று நீரை இறைத்தனர். அப்பால் வெள்ளியாற் போடப்பெற்றிருந்த தெருவாசற் கதவுகளை யெல்லாம்

ஒரே படியாய்ப் பிடுங்கி, மன்னன் அரண்மனைக்குக் கொண்டுபோய்விட, அன்று இரவு வருவதற்குள் பத்தரை மாற்றுத் தங்கத்தால் கதவுகள் அமைத்து விட்டனர்.

இவைகளையெல்லாம் அறிந்த சோழன் பெருஞ் சினங் கொண்டு ஒரே படியாய்ப் பெண் மக்களைச் சிறையிடச் சூழ்ச்சி செய்திருந்ததை அறிந்த வணிகர்கள்,

"மயிர்நீப்பின் வாழாக் கவரிமா வன்னார்
உயிர்நீப்பர் மானம் வரின்"

என்ற திருக்குறளை நன்கறிந்தவராதலின், தங்கள் தங்கள் கற்புடைப் பெருந் தேவியாரோடு எண்ணாயிரங் குடியினரும், (சுமார் ஆண் மக்கள் 8000; பெண் மக்கள் 8000; குழந்தைகள் 4000; ஆக 20,000 பேர்கள்) தற்கொலை புரிந்து கொண்டனர்.

சில சரித்திர ஆராய்ச்சியாளர் அக் கொடுங்கோலரசனாலேயே கொலையுண்டிருத்தல் வேண்டும் என்று ஊகிக்கின்றனர்; ஒன்பதாண்டுகள் எவ்வாறு அத்தனை பிள்ளைகளும் அந்தப் படுகொலைக் களத்தில் உயிர் வாழ்ந்திருக்கக் கூடும்? எவ்வாறாயினும் ஆகுக! "யார் வைத்த நெருப்பானாலும் வீடு வெந்ததில் ஐயமில்லை" என்ற பழமொழிக்குப் பொருத்தமாயிற்று.

"குடிகள் அஞ்சத்தக்க செயல்களைச் செய்த கொடுங் கோலரசன் உறுதியாய் விரைவில் கெட்டொழிவான்" என்னுங் கருத்தமைந்த,

"வெருவந்த செய்தொழுகும் வெங்கோல னாயின்
ஒருவந்த மொல்லை கெடும்"

என்னும் வள்ளுவர் வாய்மொழிப்படி அம்மன்னன் அழிந்தே போயிருத்தல் வேண்டும். இஃது "அவ்வரசு அழிந்துவிடும்" என்பதன் பொருளைப் பற்றி நிற்கின்றது.

ஒரு நகரத்தில் ஒருவன் அல்லது ஒருத்தி தற்கொலை செய்து கொண்டாலும், அன்றிக் கொலை செய்யப்பட்டாலும் அத் தெருவிற்குப் பகலிலும் இரவிலும் யாரும் போக அஞ்சுகின்றனர்; லெட்சக்கணக்கான மக்கள் நெருங்கிய இக் காவிரிப்பூம் பட்டினத்தில் இக் கொடுஞ்செயல் கேட்ட ஒவ்வொருவரும் அஞ்சிப் பிற ஊர்களில் ஓடிப் போய்க் குடியேறத் தலைப்பட்டார்கள்.

ஆகவே இந்நகரம் பாழாயிற்று; குடியிருந்த வீடுகள் மனிதர் பழக்கமின்றி நாளடைவில் இடிந்து விழுந்து மேடு பட்டு எங்கும் பொட்டல்களாயின; எத்தனையோ கோவில்கள் பாழாயின; கட்டிடங்கள் பலவற்றைக் கடல் கொண்டு போயின. 'பல்லவனீச்சுரம்' கோவிலைத் திருஞான சம்பந்தர் "பட்டினத்துறை பல்லவனீச்சுரம்" என்று பாடல்கள் தோறும் வற்புறுத்தி யிருக்கின்றார். தர்ம கர்த்தா அமுதலிங்கம் பிள்ளை காலத்தில், 1869-ம் ஆண்டிலும் 1897-ம் ஆண்டிலும் ஷை கோவிலுக்குச் சொந்தமான புன்செய்களைச் சமப்படுத்தி, ஒரு தோப்பு உண்டாக்க முயற்சி செய்ததில் அநேக உற்சவ மூர்த்திகளும், சிலா மூர்த்திகளும் ஆலயத்திற்கு வேண்டிய திருவிளக்குகளும், வீட்டிற்கு வேண்டிய மனிதர்களாண்ட பண்டம் பாத்திரங்களும், அம்மி, திரிகை முதலிய எண்ணிறந்த பொருள்களும் வெளிப்பட்டன.

1900-ம் ஆண்டில் கடல் அலைகள் பள்ளமாக்கிய இடத்து, கோவிலைக் கடல் கொண்டு போய்ப் பாழான

பகுதியில், ஒரு கருங்கற் கட்டிடம் தகர்க்கப்பட்டு, அதி லிருந்த ஒரு பெருமாள்கோவிலில் மகாலெட்சுமி விக்கிரகம் ஒன்று, தாசீல்தார் முத்துச் சிதம்பர முதலியார் அவர்க ளால் எடுக்கப்பெற்று அரசியலாருக்கு அனுப்பப் பெற் றிருக்கிறது. இப்பொழுதும் எங்கே தோண்டினும் உறை கிணறுகள் பல அகப்படுகின்றன.

சிலப் பரிசோதகர்கள் இக் காவிரிப்பூம் பட்டினம் அழிந்து 800 ஆண்டுகளுக்கு மேற் போகாதென்று மதிக் கின்றார்கள்.

இளையாத்தன்குடி எம்பெருமான் விண்ணகரத் திருக் கோவில் கல்வெட்டுகளிலும், இரணியூர்க் கோவில் கல் வெட்டுகளிலும், காணப்படும் வருடங்களைக் கணக்கிடும் பொழுது இவர்கள் பாண்டி நாட்டிற்கு வந்ததற்குப் பெரிதும் ஒற்றுமைப்படுகின்றன. அச் சாசனங்கள் தனியே அச்சிடப் பெற்றிருக்கின்றன.

இத் தனவணிக ரெல்லாம் ஒருங்கே இறந்த பின்பு, பள்ளிக்கூடத்துக்குச் சென்றிருந்த பிள்ளைகள் உபாத்தி யாயரையும் அழைத்துக்கொண்டு,

“ இன்மையி னின்னா துடைமை முறைசெய்யா
மன்னவன் கோற்கீழ்ப் படின் ”

என்பதை நன்குணர்ந்து பாண்டி நாட்டிற்கு வந்து விட் டார்கள்.

“திரஸ்ட்டன், நெல்ஸன்” முதலிய சரித்திர ஆராய்ச்சி யாளர்கள், சோழ மன்னனே இப் பிள்ளைகளையும் தேசப் பிரஷ்டம் செய்து வெருட்டி ஓட்டியிருக்க வேண்டு மென்று இந்நிகழ்ச்சியில் அபிப்பிராயப் படுகின்றனர்.

தனவணிகப் பெருமக்கள் அச் சோழ மன்னன் துன்புறுத்தலினின்றும் தங்கள் அறிவுத் திறனால் தப்பித்துப் புகழ் படைத்தனர்; இவர்கள் பெரும் புகழுக்குக் காரணமாயிருந்த சோழன் கொடுமைகளைக், கீழைச்சிவற்பட்டி அருட்கவி "பாடுவார் முத்தப்ப செட்டியார் அவர்கள்" தாம் பாடிய 'திருமுக விலாச'த்தில்,

"அன்னை தந்தை தெய்வமுத லாசானைப் போற்றுதலால்
மன்னவரைக் கூட வணங்காதார்—முன்னுயர்ந்த
மேரு கிரியுரைத்தும் வேழந் தனை நிறுத்தும்
பேருலகின் மிக்கான பேராளர்—யாரும்
அதிசயிக்கக் காவேரி யாறுதனைப் பஞ்சுப்
பொதியா லடைத்த புகழாளர்—மதியாற்
கடலி லெறிந்தபொன்னைக் காசினியோர் தான்மெய்த்
திடவழைத்த வேலேல சிங்கம்—நெடுங்கிணற்றில்
வீம்புக்குத் தம்வீட்டின் வெள்ளாட் டியர்சவடித்
தாம்பிட்டு நீரிறைத்த தாட்டிகர்கள்—தேம்பவே
கல்யாண வாயிலிலே காவணக்கா லுக்குயர்ந்த
நற்ப வளக்காலை நாட்டிவைத்தார்—வல்லிரவில்
வற்கதவு வெள்ளிதனை வாங்கிவிட வக்கணமே
பொற்கதவு நாட்டிப் புகழ்படைத்தோர்"

என்று குறிப்பிட்டிருக்கின்றார்.

ஏழு நகரத்தார் "பள்" என்னும் பிரபந்தத்தில்,

1. "பஞ்சுப் பொதிகொண்டு காவேரி யூரைப்
பரவா தடைத்த வணிகேசர்

2. பட்டத்து யானைக்குக் கிட்டத்திற் போகாமல்
பார்த்து நிறுத்த வணிகேசர்

3. பகட்டான தங்கத்தகட்டைக்கிள்ளி மாற்றுப்
பார்த்துரை சொல்லும் வணிகேசர்

4. பற்ருக் கிணற்றுக் கயிற்றுக்குப் பொற்பணி
பாய்ச்சி இறைச்ச வணிகேசர்

5. பாங்கான வெள்ளிக் கதவுபிடுங் கப்பின்
பைம்பொன் ஞலிட்ட வணிகேசர்

6. பாண்டிய நாட்டிற் குடியேறும் ஏழ்நகர்ப்
பார்த்திப ராம்வணி கேசர்களே"

என்று கூறப்பட்டிருப்பதாக நம் பாதரக்குடி மடாதிபதி ஸ்ரீமத் வெங்கடாசலபதி குருசுவாமி யவர்கள் சொல்லி யிருப்பதாலும்,

முத்துக்குட்டிப் புலவர் அவர்கள் இயற்றிய "கண்ணுடையம்மன் பள்" என்னும் பிரபந்தத்தில்,

"கண்ணிஞல் மதயானை நிறுத்துங்
கடலில் விட்ட கனக மழைத்தும்
பண்ணுகந்தவ்வை பாட்லுக் கீந்துநற்
பந்தற் காக்குப் பவளம் நிரைத்து
விண்ணுயர்ந்த பொன் மேருவுரைத்தும்"

என்று கூறுதலாலும், 'சோழ மன்னனுக்கும் இவர்கட்கும் பல விவாதங்கள் நிகழ்ந்திருக்கின்றன' என்று தெரிகின்றது.

அப்போது சோழ நாட்டின் எல்லையாகவிருந்த வெள்ளாற்றின் தென் கரையில், இனிச் சோழ நாட்டிலே குடியிருப்பதில்லை யென்று வைஷம்யமும் பிடிவாதமுங் கொண்டு, பாண்டி நாட்டின் எல்லையில் குடியேறி யிருத்தலாலும் சோழ நாட்டைட வெறுத்தே வந்திருக்க வேண்டும் என்றும் பலமாக வற்புறுத்தி ஆராய்ச்சிக்காரர் கூறுகின்றனர்.

பாண்டியன் தன்னூருக்கு நற்குடி வேண்டுமென்று வலிந்து அழைத்துக் கொண்டு வந்திருந்தால் தனது நக ராகிய மதுரைமாநகரில் இடம் விட்டுக் கொடுத்திருக்க வேண்டும். "கடற்கரைக்கு மேற்கு, வைகை யாற்றங் கரைக்கு வடக்கு, பிரான் மலையடிவாரத்திற்குக் கிழக்கு, வெள்ளாற்றங் கரைக்குத் தெற்கு" ஆகிய இந்நான் கெல்லை களைக் காட்டி, "இங்கே குடியிருங்கள்" என்று ஆணை யிட்டான் என்று முந்திய சரித்திரத்தில் கூறப்பட்டிருப் பது பொருத்த மில்லாததாகும்.

இவர்களெல்லாம் பாண்டி நாட்டில் இளையாத்தன் குடியில் குடியிருந்து, வயது வந்த பின்பு, "பாண்டு குடி" "திருவெற்றியூர்" முதலான சேர்க்கையிலுள்ள 'அரும்புகுத்தி வேளாள' குலத்துப் பெண்களைத் திரு மணஞ் செய்துகொண்டு இளையாத்தன் குடியிலேயே எழு வழி நகரத்தார்களும் வசித்து வந்தார்கள். இவர்கள் திரு மணக் காலத்திற் பூணும் திருமங்கல நாணுக்கு 'அரும்புக் கழுத்துரு' என்று பெயர் மாருது வழங்குகின்றது.

இவ்வாறு வாழ்ந்து வருங் காலத்து, தங்களுக்குள் ஒற்றுமைப் படாமல் ஒரு வகுப்பினரான

1. 'உறையூருடையார்' முதலிய எழு வகுப்பினர் மாற்றூருக்கும்,
2. 'சிறுகுளத்தூருடையார்' முதலிய மூன்று வகுப் பினர் வைரவன் கோவிலுக்கும்,
3. ஊர்ப்பெயர் அறியப்படாத ஒரு வகுப்பினர் நேமம் கோவிலுக்கும்,
4. 'சூடாமணி புரமுடையார்' இலுப்பைக்குடிக் கோவிலுக்கும்,

5. 'புகழ்வேண்டிய பாக்கமுடையார்' சூரைக்குடிக் கோவிலுக்கும்,

6. 'கழனி நல்லூருடையார்' என்ற வகுப்பினர் வேலன்குடிக் கோவிலுக்கும் சுவாதீனங்களைப்

பெற்றுக்கொண்டு அந்தந்தக் கோவிலிலேயே குடியிருந்து வந்தார்கள்.

இளையாத்தன்குடிக் கோவிலார் எழு வகுப்பினரும், திருவேட்பூருடையார் என்ற இரண்டு சகோதரர்களும், நெடுநாள் இளையாத்தன்குடியிலேயே தங்கள் தங்கள் வகுப்புக்கு ஒவ்வோர் ஊருணியும் விநாயகர் கோவிலும், திருவேட்பூருடையார் தங்கள் வகுப்பின் பேரால் ஓர் ஊருணியும் விநாயகர் கோவிலும் அமைத்துக், கைலாச நாதரையும் சிலாசாசனங்களிற் குறிப்பிட்டிருக்கும் திருக் காமக் கோட்டத்து அம்பிகை (நித்திய கல்யாணி)யை யும், எம்பெருமான் விண்ணகரத்திலுள்ள திருமாலையும் தொழுது வந்தனர்.

நெடுங்காலம் சென்ற பிறகு, மூத்த சகோதரரான திருவேட்பூருடையார், இரணியூர்க் கோவிலுக்கும், இளைய சகோதரரான திருவேட்பூருடையார் பிள்ளையார்பட்டிக் கோவிலுக்கும் ஒற்றுமையை நாடிச் சுவாதீனங்களைப் பெற்றுக்கொண்டு அந்தந்தக் கோவிலிற் குடியேறி னர்கள்.

கி. பி. 1500-ம் ஆண்டு முதல் மகமதியர் கலகங்களும் சிற்றரசர்களின் சண்டைகளும், பாளையக்காரர்களின் கொள்ளைகளும் ஏற்பட்டதால், தங்கள் தங்கள் சுவாதீ னத்திலிருந்த கோவில்களிலுள்ள சிலைகளையும், பண்டம் பாத்திரங்களையும் மண்ணில் புதைத்தும் போக்கில் சேமித்

தும் வெளியேறிச் சிதறி அந்தந்த நாட்டுக் குடிகளுடன் பல ஊர்களில் வசித்து வந்தார்கள். அப்படிப்பட்ட காலத் திற்ருன் (96) 'தொண்ணூற்ருறு ஊர்' என்று கணக்கிட் டிருக்கின்ருர்கள்.

அந்த 96 ஊர்களில் இப்போது தெரிந்த மட்டில் நாளிதுவரை அடியிற்கண்ட ஊர்களிற் குடியிருந்து வேறு வேறு ஊர்களில் போய்ச் சேர்ந்திருக்கிருர்கள் என்று தெரிகிறது.

| முன் இருந்த ஊர் | குடியேறிய ஊர் |
| --- | --- |
| அரணிக்கோட்டை | —— |
| அழகிச்சிபட்டி | சொக்கலிங்கபுரம் |
| ஆலங்குடி | காரைக்குடி |
| ஆய்ங்குடி | கானடுகாத்தான் |
| ஆலம்பட்டு | தேவகோட்டை, காரைக்குடி |
| ஆற்காடு (சேமத்திற்கு அணிமை) | காரைக்குடி |
| ஆத்திக்காடு | தெற்கூர் |
| இடையபட்டி | —— |
| இளையாத்தன்குடி | கீழச்சிவற்பட்டி |
| இலங்குடி | காரைக்குடி, தேவகோட்டை |
| இலுப்பைக்குடி | தேவகோட்டை |
| இரவிசேரி | தேவகோட்டை |
| உடப்பன்பட்டி | தேவகோட்டை |
| உதையாச்சி | தேவகோட்டை |
| உறங்கான்பட்டி | பூங்குடி |
| ஓணன்குடி | இராயபுரம், அரிமளம் |
| ஓலைக்குடிப்பட்டு | தேவகோட்டை |
| கத்தானைப்பட்டு | —— |

| | |
|---|---|
| கருணக்குடி | புதுவயல் |
| கடகம்பட்டி | தேவகோட்டை |
| கடியா வயல் | அரியக்குடி |
| கண்ணன் கோட்டை | தேவகோட்டை |
| கண்ணனூர் | வேகுபட்டி |
| கம்பனூர் | நாச்சியாபுரம் |
| கம்பங்காடு | கண்டனூர் |
| கல்லிவயல் | தேவகோட்டை |
| களபம் | ஆருவயல் |
| கானப்பூர் | கண்டனூர் |
| காவணவயல் | தேவகோட்டை |
| கீழக் கோட்டை | தேவகோட்டை |
| கீரணிப்பட்டி, குருவிக்கிணம்பட்டி | கீழச்சிவற்பட்டி காரைக்குடி |
| குளத்துப்பட்டி | கோட்டையூர் |
| கூத்தலூர் | காரைக்குடி |
| கெவுரிபட்டணம் | சொக்கநாதபுரம் |
| கைக்குளம் | தேவகோட்டை |
| கொல்லன்குடி, அளகாபுரி | தேவகோட்டை |
| கொறட்டி | உ. சிறுவயல், காரைக்குடி |
| சாக்குக் கோட்டை | — |
| சாத்துப்புளி | கொல்லங்குடி அளகாபுரி |
| சாலூர் | பூங்குடி |
| சித்திவயல் | தேவகோட்டை |
| சித்தாட்டிவயல் | கண்டனூர், தேவகோட்டை |
| சிராத்தக்குடி | கோனபட்டு, ஆத்தன்குடி |
| சுண்டைக்காடு | தேவகோட்டை |
| சூரைக்குளம் | நாட்டரசன்கோட்டை |
| செங்கல் கோவில் | தேவகோட்டை |

| | |
|---|---|
| செவர கோட்டை | காரைக்குடி |
| செப்பா வயல் | தேவகோட்டை |
| செஞ்சை | காரைக்குடி |
| செவலூர் | —— |
| செம்பொன்மாரி | தேவகோட்டை |
| சேதுராப்பட்டி | தேவகோட்டை, ஆத்தன் குடி, பலவான்குடி |
| சேந்தணி | தேவகோட்டை |
| தளக்காவூர் | மாநகரி |
| தாஞ்சூர் | அரிமளம் |
| திருக்கோளக்குடி | —— |
| துவார் | —— |
| தெண்ணீர் வயல் | தேவகோட்டை |
| தேக்காட்டூர் | —— |
| நகரம்பட்டி | பாகநேரி |
| * நடுவிற்கோட்டை | காரைக்குடி |
| நெய்க்கோணம் | நெ. இலக்குமிபுரம், விரை யாச் சிலை |
| நெய்வாசல் | காரைக்குடி |
| நெய்வாசல்பட்டி | —— |
| நேமம் | காரைக்குடி |
| பக்கிரிப்பட்டி | தேவகோட்டை |
| பட்டணம் (கல்லுப்பட்டி) | காரைக்குடி |
| பறளிப் பட்டணம் | ஆத்தன்குடி |
| பறியன் வயல் | தேவகோட்டை |
| பழைய ஆத்தன்குடி | ஆத்தன்குடி |
| பாலையப்பட்டி | கண்ட னூர் |
| புலி குத்தி | கல்லுப்பட்டி |
| புலி குளம் | தேவகோட்டை |

| | |
|---|---|
| பெருங்கானூர் | ஆருவயல் |
| பேயன் பட்டி | தேவகோட்டை |
| பொன்னன்குடி | கண்டர மாணிக்கம் |
| புளியன்குடி | —— |
| மலம்பட்டி | —— |
| மல்லா கோட்டை | காரைக்குடி, தேவகோட்டை |
| மல்லுப்பட்டி | கோனபட்டு |
| மாங்குடி | தேவகோட்டை |
| முனையந்தை | இராமச்சந்திரபுரம் (கடியாபட்டி) |
| மேலமங்கலம் | நாட்டரசன் கோட்டை |
| மேல மாகாணம் | காரைக்குடி |
| வடகாட்டுப்பட்டி | கண்டனூர் |
| வயிரவன்பட்டி | சிறுகூடற்பட்டி |
| வாரியப்பட்டி | பலவான்குடி, ஆத்தன்குடி, காரைக்குடி |
| வாணியன்குடி | நாட்டரசன் கோட்டை |
| வித்திரா வயல் | தேவகோட்டை |
| வெளியாரி | கல்லல் |
| வேங்கா வயல் | புதுவயல் |

* மேற்கண்ட நடுவிற்கோட்டை என்பது எழுவன் கோட்டைக்குச் சற்று வடபுற மிருக்கின்றது. இதில் இளையாத்தன்குடிப் பெருமருதூருடையார்களில் வெள்ளையப்ப செட்டியார் மகன் முத்தப்ப செட்டியார், சாத்தப்ப செட்டியார் என்ற இரண்டு சகோதரர்கள் குடியிருந்தார்கள். அவர்கள் பிரதிட்டை செய்த பிள்ளையாரும் ஊருணியும் இன்றும் இருக்கின்றன. முத்தப்ப செட்டியார் குடிவழியினர் பாகம் பிரித்துக் கொள்ளுங் காலத்து

மேற்படி பிள்ளையாரரையும், ஊருணியையும், அம்பலச் செய்யையும், உம்பளச்செய்யையும் பாகம் பிரித்து எடுத்துக் கொண்டார்கள் என்று தெரிகின்றது.

சாத்தப்ப செட்டியாருடைய ஆறு பிள்ளைகள் 1. அரியக்குடி, 2. கல்லுப்பட்டி, 3. தேவகோட்டை, காரைக்குடி, 4. கண்டனூர், 5. கோட்டையூர், 6. ஆ. முத்துப் பட்டணம் இந்த ஊர்களில் தற்காலத்திலுள்ள சகோதரர்கள் எழுவன் கோட்டைச் சிவன் கோவிலுக்கு முன்னிருக்கும் பிள்ளையார் கோவிலையும், ஆறுந் திருநாள் இடப வாகன மண்டபப் படியையும் பாகித்து எடுத்துக் கொண்டனர்.

மாற்றூரில் நேமங் கோவிலார் சிலர் குடியிருந்திருக்கிறார்கள். அவர்கள் பெயரால் ஒரு ஊருணியும், பிள்ளையாரும் இன்றும் இருக்கின்றன.

இவ்வண்ணமே பெரும்பாலும் நெடுநாள் குடியிருந்தவர்கள் அந்தந்த ஊர்களில் பிள்ளையார் கோவிலுங் குளங்களும் உண்டாக்கி யிருக்கின்றார்கள் எனத் தெரிகிறது.

நாட்டுக்கோட்டையார் இந்த நாட்டுக் குடிகளான கள்ளர், மறவர், அகம்படியர், அமராவதி நாட்டு வல்லம்பர், பாலைநாட்டு வல்லம்பர், வலையர் முதலிய பல குடிகள் தொழுது வந்த காளி, பிடாரி, மாரி, கறுப்பர், ஐயனார் முதலிய தெய்வங்களையே தொழுது குலதெய்வமாகக் கொண்டாடினர். இந்நூற்றாண்டிற்கூட அவைகள் போற்றப்பட்டு வருகின்றன.

ஐயனார், கறுப்பர், காளி முதலிய தேவதைகளைப் பெரும்பாலும் மாசி மாதம் சிவராத்திரியிலும், வேறு

வேறு மாதங்களிலும் தவருமல் கூட்டங் கூட்டமாகச் சென்று பிரார்த்தனை புரிந்து காணிக்கை செலுத்தித் தொழுது வருவர்.

இவர்கள் ஆதிமுதல் நிறைய முடிவைத்தும், மாருமல் எப்போதும் தலைப்பாகை கட்டியும், காதுகளை வளர்த்து வண்டிக்கடுக்கனிட்டும், மூன்று விரற்பட அழியாது விபூதி பூசியும், ஆடையைக் கொய்து கட்டி மடிவைத்து அதில் விபூதிப் பையும் செபமாலையும் வைத்திருப்பார்கள். எப்பொழுதேனும் துக்கம் நேர்ந்த காலத்துத் தலைப் பாகையை அவிழ்த்து வைத்து விட்டுத், தீண்டல் கழிந்த பின்பே மீண்டும் அதனைக் கட்டுவார்கள். அத்தலைப்பாகை உள்நாட்டில் நெசவுகாரர்களால் ஒரு சாணகலமும் 18 முதல் 24 முழம் வரை நீளமும் வைத்து வடதேசத்து மார்வாரிகள் கட்டும் பல வர்ணங்களுடன் கூடிய தலைப் பாகை போல் நெய்யப்படுவது. இற்றைக்கும் திருமணம் முதலிய விசேடங்களில் பெரியோரும், சிறப்புப்பெறும் இளைஞரும் தலைப்பாகையணிந்து கொள்ளும் வழக்கம் இருந்து வருகிறது. மேலும் தலைப்பாகை கட்டிக்கொண்டு, 'சாப்பிட வாருங்கள்' என்று தீண்டல் கழிந்த வீட்டில் உரிமைக்காரர் அழைக்கும் வழக்கமும் காணலாம். ஓர் அறநிலையத்தில் அதனை நிறுவிய பெரியார் உருவச் சிலையில் அவர் தலைப்பாகைக் கட்டையும் வண்டிக் கடுக் கனையும் இன்றும் காணலாம்; பண்டைநாளில் புலவர் களைப்பற்றி வருணிக்கும் பிரபந்தங்களில்

"கடுக்கனலைக்குங் கவிப்புலவர்"

என்று கூறியதையுங் காணலாம்.

பெண் மக்கள் விசேட காலங்களில் யாழ்ப்பாணம் மாதர்கள் போன்று காதுக்குக் கொப்பு என்னும் அணி

கலனேயும், 'முடிச்சுக் கடுக்கன்' என்ற சவடியையும், 'பிறைசீதேவி' என்னும் தலையணியையும், தங்கமணியும் பவளமுஞ் சேர்ந்த மணிக் கோவையையும், வெள்ளியாற் செய்த 'இடைச்சூரி'யையும், தங்கமணிகளும் பவளங் களுஞ் சேர்ந்த கைக்கட்டையும், காலிலும் கையிலும் வெள்ளி மோதிரங்களையும், வெள்ளிக் கங்கணக் காப்பு களையும் அணிந்துகொண்டிருந்தார்கள். இவைகளை, திரஸ்ட்டன் தாம் எழுதியுள்ள 'அகில சாதி சரித்திர'ப் புத்தகத்தில் புகைப் படமெடுத்துச் சேர்த்திருக்கின்றார்.

இவர்கள் குடியிருக்கும் கூரை வீடுகளெல்லாம் அந் தந்த நாட்டுக் குடிகள் கட்டியிருக்கும் வீடுகளின் நடுவி லிருக்குமேயன்றித் தனித்திருப்பதேயில்லை. மரக்கால் ஊன்றி நிழல் பரப்பிய ஒரு வைக்கோல் பட்டரையுடைய ஒரு குடும்பத்தாரை ஒரு பெரிய கூடகோபுரமுடையார் போல் எண்ணிப் பாராட்டுவார்கள்.

இவர்கள் சிறுபுதுமை, கார்த்திகைப் புதுமை, திருவா திரைப் புதுமை முதலிய விழாக்களில், மொந்தன் வாழைப் பழங்களை இரண்டு மூன்று நான்கு துண்டங்களாக நறுக்கி நறுக்கித், தையல் இலை, தாமரையிலைகளிலிட்டும், பழனியிலிருந்து தைப்பூசத்திலும் பங்குனியுத்திரத்திலும் பெருமுயற்சியுடன் தருவிக்கப் பெறும் அபிடேக சந்த னத்தைக் கலயத்தில் கரைத்து வைத்துக் கொண்டு, உணவுண்ணும் பந்தியில் பெருவிரலால் தொட்டுப் பொட்டு வைத்துக் கொண்டும் செல்வார்கள். பனையோலையிலேயே கலியாணக் காவணம் அமைப்பார்கள்.

மேற்கண்ட பழக்க வழக்கமுடைய ஊர்கள் வருமாறு

| | |
|---|---|
| அமராவதி | அழகர்கோயில் |
| அரண்மனைச் சிறுவயல் | பதினெட்டாம்படி |

இளங்குடி
கத்தப்பட்டு
கருவக்குறிச்சி
காடணி
காரைக்குடி
கீழக்கோட்டை
கொட்டகுடி
சாத்தான்கோயில்
சுண்டைக்காடு
சூரைக்குளம்
நரியங்குடி
பக்கிரிப்பட்டி
பள்ளத்தூர்
மருதங்குடி
ராங்கியம்
வீளணி
வேலன்குடி

1800-வது ஆண்டின் தொடக்கத்திலேயே பாண்டி நாட்டுப் பாளையப்பட்டுக் கலகங்களெல்லாம் அடியோடு ஒழிந்துபோயின. குடிகளெல்லாம் அச்சம் நீங்கி வாழ்ந்தனர். ஆங்கிலேயர் நேரே அரசாளத் தலைப்பட்டனர். அநேக சட்ட திட்டங்கள் உண்டாக்கப்பெற்றன. நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் ஓர் ஊரிலிருந்து ஓர் ஊருக்குப் பயந்தோடிக் குடியேறும் வழக்கம் அடியோடு தீர்ந்துவிட்டது. இருந்த இருந்த இடத்திலேயே குடி நிலைத்தனர்.

அக்காலத்து விளைவு குறைந்தும், நாடெல்லாஞ் செழிப்பின்றி வறுமை மேலிட்டும், பெரும் பொருள் ஈட்டத்தக்க வருவாயின்றியுமிருந்ததால், அறந்தாங்கி, தாஞ்சூர் முதலிய சந்தைகளுக்குப் பொதிமாடுகள் வைத்துச் சென்று பண்டமாற்றுச் செய்தும், நெல், பஞ்சு, உப்பு வியாபாரஞ் செய்தும்

" உழுதுண்டு வாழ்வதற்கொப்பில்லை கண்டீர்
பழுதுண்டு வேறோர் பணிக்கு "

என்றவாறு சிலர் உழுதுண்டும் வாழ்க்கை நடத்தினர்.

மேலும், உள்நாடுகளில் சோழ நாட்டில்

ஆவுடையாபுரம்
கரம்பைக்குடி
கழுகுமலை
காங்கேயன்பட்டணம்
குத்தாலம்
சிக்கல்
சீர்காழி
திருத்துறைப்பூண்டி
திருமுல்லைவாசல்
நாகபட்டணம்
நாகூர்
பிள்ளையார்பாளையம்
பொருள்வைத்தசேரி (புறவச்சேரி)
மஞ்சட்கொல்லை
மன்னார்கோவில்
மாதேவிபட்டணம்
வெளிப்பாளையம்

முதலிய ஊர்களிலும், பாண்டி நாட்டில்,

அறுப்புக்கோட்டை
ஏழாயிரம்பண்ணை
சங்கரலிங்கபுரம்
சாத்தூர்
ஸ்ரீவில்லிபுத்தூர்
தவளைக்குளம்
திருநெல்வேலி
துலுக்கப்பட்டி
மன்னார்கோட்டை
மதுரை
உத்தமபாளையம்
கொட்டாம்பட்டி
சங்கரநயினார் கோவில்
சின்னக்கரம்பட்டி
சென்னம்பட்டி
திண்டுக்கல்
திருமங்கலம்
நத்தம்
மடவிளாகம்
விருதுபட்டி

முதலிய பல ஊர்களிலும், நூற்புடவைகளும், நெல் முதலிய தானியங்களும் வாங்கிச் சில்லரை வாணிபம் புரிந்தும், மதுரைக்குத் தெற்கே தூற்றுக்குடி வரையில் கரிசற் காடுகளுள்ள ஊர்களில் பஞ்சு வாணிபம் செய்தும், பலசரக்குக் கடைகள் வைத்தும், நாணயமாகக் கொடுக்கல் வாங்கல் செய்தும், தங்கள் மானத்தையும் சைவத்தையும் என்ன ஆபத்து நேரினும் விடாது காப்பாற்றி வந்திருக்கின்றார்கள்.

பஞ்சு வாணிபம் செய்ய ஊரிலிருந்து புறப்படுவோர் யாவரும்; மேலூரிலிருந்து மேற்கே 5-வது மைலிலும், மதுரையிலிருந்து கிழக்கே 13-வது மைலிலும் இருக்கும் 'நரசிங்கன்பட்டி' என்ற ஊரில்135-ஆண்டுகட்கு முன் (கி. பி. 1815; யுவ தை 29) பிரபல அம்பலகாரரான அர்ச்சுனப் பெருமாளம்பலகாரருடைய வீட்டில் வந்து, ஒன்று சேர்ந்தே புறப்படுவார்களென்றும்; வாணிப முடித்துத் திரும்புங்காலத்து, அங்கே வந்து கூடித்தான் அவரவர் ஊருக்குப் பிரிந்து செல்வார்களென்றும், அவ்வம்பலகாரரவர்கள் வீட்டிலிருந்த சில 'பஞ்சு வியாபாரக் கூட்டுறவு முறி'களால் தெரிய வருகின்றது.

அதில் ஒரு வியாபாரக் கூட்டில் இலாபங் கிடைத்த '7433/4' வராகனைக் கொண்டு அந்நரசிங்கன்பட்டியில், ஓர் ஊருணி வெட்டிக் கற்கட்டிடம் கட்டினரென்றும், அன்று முதல் அது 'நகரத்தார் ஊருணி' என்றும் 'பஞ்சுப் பொதி ஊருணி' என்றும் வழங்கப்படுகிறதென்றும், மேலூர் தாலூகா கிராமவாரி நத்தங் கழிவில் தெரிகின்றது.

1788-ம் வருடத்திற்குச் சற்று முன்னே பின்னே உப்பு மாறி விற்று, அதில் கிடைக்கும் சிறு ஊதியத்தைத் தைப்பூசந் தோறும் பழனிக்குச் சென்று, நெற்குப்பை (நேமங்கோவில்) குமரப்ப செட்டியார் மகன் பழனியப்ப செட்டியார், பண்டாரம் வீடுகளில் அரிசி, காய்கறிகள் வாங்கிக் கொடுத்து அன்னமிட்டு வந்தார்.

அப்பால் கண்டனூர் (இரணிக்கோவில்) குட்டையன் செட்டியார் என்ற சண்முகத் தெய்வஞ்சுமந்த பெரியாரால், மனிதர் வாழ்க்கைக்கு வேண்டிய பெரும் பேறுகள் யாவும் நினைத்த நினைத்தபடி வழங்கப்பட்டு வந்ததால்

பெரும் பொருள்கள் குவிந்தன. அப்பொருள்களைக் கொண்டு பழனி போய்ச் சேரும் வரையில் பல தடாகங்கள் வெட்டிக் கல்கட்டியும், ஆங்காங்கு யாத்திரை போய் வருபவர்க்கு மிக வாய்ப்புள்ள கட்டிடங்களும், பழனியம்பதியில் ஒரு பெரிய அன்னதான மடமும் கட்டப் பெற்றன.

அக்காலத்தில் தன்னரசுபுரிந்த மருதுசேர்வைகாரரால், பல சோதனைகள் செய்யப்பெற்று 'உறுதியாகக் கடவுளருள் பெற்றவரே' என்று நன்கு மதிக்கப்பெற்றுக், குன்றக்குடியில் அன்னதான மடத்திற்கு இடம் விட்டுக் கொடுத்து, அதற்குப் பல உதவிகளும் செய்து, பழனிக்குப்போகும் பரிசனங்களுக்கு வேண்டிய துணையும் புரிந்து வந்தார் என்றுந் தெரிகின்றது. குன்றக்குடியில் சித்திரை மாதத்தில் ஐந்து நாள் மகேசுவர பூசை 96 ஊர் நகரத்தார்களின் உதவியால் நடந்து வருகின்றது.

திருவண்ணாமலையில் 'ஓயாமாரிமடம்' என்று ஓர் அன்னதான மடம் கட்டப் பெற்றது.

மேற்கண்ட மூன்று மடங்களுமே நகரத்தார்களின் அன்னதான தருமங்களின் வளர்ச்சிக்கு விளைவித்தாயின.

1805-வது ஆண்டில் கண்டிச் சீமைக்கும் கொழும்பிற்கும், 1824-வது ஆண்டில் சிங்கப்பூருக்கும் பினாங்குக்கும், 1852-வது ஆண்டில் பர்மா நாட்டு மோல்மேனுக்கும், 1854-வது ஆண்டில் ரெங்கோனுக்கும் 1885-வது ஆண்டில் மாந்தளைக்கும் பாய்க் கப்பல்களில் பிரயாணம் சென்று வாணிபஞ் செய்யத் தலைப்பட்டார்கள்.

மேற்கூறிய எல்லா வியாபாரத்தலங்களிலும் அன்ன தானங்களும், அதைச் செவ்வனே செய்யத்தக்க அன்ன தான மடங்களும் எங்கும் உண்டாக்கப் பெற்றன.

இவர்கள் எந்த நாட்டிலும் பெருஞ் செல்வாக்குப் பெற்ருர்கள்; குபேரச் செல்வத்தை யடைந்தார்கள்; குச்சு வீடுகளெல்லாம் பிச்செறியப்பட்டன; பட்டிக்காடுகளெல்லாம் கெட்டி வீடுகள் நிறைந்த நகரங்களாயின.

"அற்கா வியல்பிற்றுச் செல்வம்; அது பெற்ருல்
அற்குப வாங்கே செயல்"

என்னும் திருக்குறளைப் பரம்பரைச் சைவ வாசனையால் அறிந்த நகரத்தார்கள் ஆங்காங்குத் தாங்கள் குடியிருக்கும் நகரங்களிலும், பாடல் பெற்ற தலங்களிலும், எண்ணற்ற பதி தருமங்களையும், பசு தருமங்களையும் புரிந்து நிலைநிறுத்தினர்.

அக்காலத்துப் பள்ளியிற் படிக்குஞ் சிறுவர்கள் தங்கள் தங்கள் ஆடைகளில் ஆறு, கால்வாய் மணல்களைக் கட்டித் தலைச்சுமையாகக் கொண்டு சென்று, பள்ளிக்கூடத்தில் வாரத்திற்கொருதரம் புழுதியாக ஆக, மாற்றி மாற்றிப் பரப்புவார்கள். பள்ளிக்கூடத்தில் தரைகளில் முதலெழுத்துக்கள் சில தோண்டப் பெற்றிருக்கும். படியாத பிள்ளைகளைக் கூரைப் பள்ளிக்கூடத்து முகட்டில் 'கொதண்டம்' என்னுங் கயிற்றில் தூக்கிவிட்டுக் குண்டெழுத்தாணியைக் கீழே பதித்து நிறுத்துவார்கள். கல்வியறிவில்லாத உபாத்தியாயர்கள் தங்கள் வயிற்றுப் பிழைப்புக்காகப், பிள்ளைகளின் உடம்பில் எந்த இடத்திலும் சர்வ சாதாரணமாய் அடிப்பார்கள்.

இப்படிப்பட்ட நிர்ப்பந்தமான கல்விச் சாலையிலி ருந்தே படித்துத்தேறிப், பல தொலைகளுக்குப் பல கப்பல் களேறித், தங்கள் தங்கள் கூரிய அறிவால் மொழி, நாடு, மதம், கொள்கை யிவற்றால் வேறுபட்டவருடனும் நன்கு பழகி, மனைவி மக்கள் உறவினர் எல்லோரையும் விடுத்து, மூன்று ஆண்டுகளுக்குக் குறையாமல், கொடுக்கல் வாங் கல் வியாபாரஞ் செய்து, தக்க இலாபத்துடனும் நல்ல பெயருடனும் தம் தாய் நாட்டிற்குத் திரும்புவார்கள்.

அந்தக் காலத்தில் கப்பல் ஏறிக், கொண்டு விற்கப் போகிறவர்கட்கு 1000 வராகன் (ரூபாய் 3500) முதல் 6000 வராகன் (ரூபாய் 21000) வரை சம்பளம் என்றும், இலாபத்தில் இன்ன பங்கென்றும் கூட்டு நிச்சயஞ்செய்து ஓலைச் சம்பளச் சீட்டு எழுதிக் கொடுத்து முதலாளி வீட் டில் வந்து கும்பிட்டு விழுந்து, வணங்கிச் சொல்லிக் கொண்டு வழிச் செலவுக்கும் வாங்கிக் கொண்டு செல் வார்கள். இதனாற்றான் கொண்டு விற்கப் போகிறவர்களுக் குக் கூட்டாளி யென்னும் பெயர் வந்தது.

மேலாள் (ஏஜண்டு) அடுத்தாள் (அஸிஸ்டெண்டு) ஆகிய இவர்கட்கு இவ்வழக்கம் இன்றுவரை நடைபெற்று வருகின்றது.

## நாட்டுக்கோட்டை நகரத்தார்களின் தற்கால வாழ்க்கை

ஆங்கிலக் கல்வியறிவினாலும், பல தேயத்து நாகரிகப் பழக்கங்களினாலும், நகரத்தார்களிற் பலர், பஞ்சாயத்துக் குழு உறுப்பினர், பஞ்சாயத்துக் குழுவின் தலைவர், நகர சபை உறுப்பினர், நகரசபைத் தலைவர், தாலூகாக் குழு உறுப்பினர், தாலூகாக் குழுவின் தலைவர், ஜில்லாக் குழு

வின் உறுப்பினர், சென்னைச் சட்டசபை உறுப்பினர், மேல்சபை உறுப்பினர், ஷெரீபுகள், கார்ப்பொரேஷன் மேயர்கள், இந்திய யூனியன் மேல்சபை உறுப்பினர், பாங்கு கவர்னர், டைரெக்டர், அட்வொகேட், பாரிஸ்டர், டாக்டர், தேவஸ்தானச் செயற்குழு உறுப்பினர், பரம் பரைக் கமிட்டி உறுப்பினர், டிரஸ்டிகள், பரம்பரை டிரஸ் டிகள், ஜமீந்தார், மிட்டாதார், தமிழ்ப் பேரறிஞர், பெரும் பேராசிரியர், வடமொழிவல்லுநர், மதுர கவிவாணர், வித் தார கவிராசர், பேரவைப் பேச்சாளர், கல்லூரி ஆசிரியர், இதழாசிரியர், மோட்டார் ஓட்டுவோர், வானவூர்தி இயக் குவோர், லெட்சாதிபதிகள், கோடீசுவரர் ஆகி ஆங்காங்கு நிறைந்தார்கள். பல ஊர்களிலும் மன்னர் மாளிகை போன்ற உன்னதப் பிரபல கட்டிடங்கள் லெட்சக் கணக் கில் செலவிட்டுக் கட்டப் பெற்றிருக்கின்றன. நாகரிகம் பெருகப் பெருக ஆண் மக்களும் பெண் மக்களும் மிக்க சீர்திருத்த முற்றனர்.

1. முதலில் ஒரு குடும்பத்தில் பிறக்கிற ஆண் குழந் தைக்கும், பெண் குழந்தைக்கும், பிற மரபினர் பிறப்பு நாளிற் செய்யும் 'ஆண்டு நிறைவு' என்ற விசேடத்தை இவர்கள் 'புதுமை' என்று வைத்துக் கொண்டாடுகின்ற னர். அதற்கு நான்கு நாள் உண்டு களித்து மொய் எழுது வார்கள்.

2. பள்ளிக்கூடத்தில் படிக்கும் ஆண் பிள்ளைகளைக், கார்த்திகைத் திங்கள் திருக்கார்த்திகை நாளில் வீடுகளில் வாழை நட்டுத் திருவிளக்கேற்றி விநாயகர் கோவிலுக்கோ அன்றிச் சிவாலயத்துக்கோ, குதிரையேற்றிச் சென்று (சொக்கப்பான் கொளுத்தி) சோதி தரிசனம் செய்துவரச் செய்வர். இதை 'அரைக் கலியாணம்' என்றும் 'சூள்

பிடி' என்றும் சொல்வார்கள். சூள்பிடி என்பது அணை யாத லாந்தல் (Lantern) விளக்குகள், மெழுகுதிரி விளக் குகள், முதலியன இல்லாத அக்காலத்தில், ஒருவகைக் காட்டு மரத்தில் முழுதும் பிளக்காமல் சிறிது சிறிதாகக் குத்தி வலைஞர்களால் செய்யப்படுவது. இதைக் குதிரைக்கு முன் பிடித்துக் கொண்டு செல்வார்கள். இதனாற்றான் இந்த விசேஷத்திற்கு 'சூள்பிடி' என்று பெயராயிற்று. எத்தனையோ அற்புதமான பேரொளி விளக்குகள் வந்தும், அவற்றை உபயோகித்து வரும் இந் நாகரிக காலத்திற்கூட அந்தச் 'சூள்பிடி' என்ற பெயர் மாறவில்லை-சூள்பிடியை தற்பொழுது வெண்கலத்தால் கோல் வடிவில் செய்து நெருப்புக்கொண்டு சொக்கப்பான் கொளுத்துகின்றனர்.

3. கன்னிப் பெண்களுக்குக் கழுத்துருவின் சில உறுக்களை எடுத்துக் கோத்துக் கட்டி, மார்கழித் திரு வாதிரையில், மணிவாசகர் மார்கழி நீராடல் திருவெம் பாவையை ஆதாரமாக வைத்து இதைப் புதுமையாகச் செய்கிறார்கள். 'அகில ஜாதி விசாரணை' நூலில் திரஸ்ட்டன்

“ஆடி ஆடி வாரோம் அவரைக்காய் போடுங்கள்
பாடிப் பாடி வாரோம் பாடவரங்காய் போடுங்கள்
கூடிக் கூடி வாரோம் கொத்தவரங்காய் போடுங்கள்”

என்று அப் பெண்கள் கூறும் பாட்டுக்களை எடுத்தாளு கிறார்.

ஆனால் இது நாளடைவில் முறை பிறழ்ந்து போய், சைவசம்பந்தஞ் சிறிதுமின்றி, இதுவும் ஒரு புதுமையாய் முடிந்து நான்கு நாள எல்லோரும் கூடியுண்டு மொய் யெழுதும் ஓர் அரைக் கலியாணமாகவுமாயிற்று. ஆனல்

இக் கன்னிப் பெண்கள் திருவாதிரையன்று சிவாலய முள்ள இடங்களில் நடராசப் பெருமானையும், சிவாலய மில்லாத இடங்களில் விநாயகப் பெருமானையும், அணி கலன் பூண்டு சென்று தொழுது வருவார்கள்.

## கலியாணம்

பெண் பிறந்த வீடு சேய்மையிலுள்ள ஊராயிருப் பினும் மாப்பிள்ளை வீட்டுக்காரர் அங்கே சென்று திரு மணஞ் செய்வார்கள். ஆனால் அக்காலத்தில் மாப்பிள்ளை நேரே திருமங்கல நாண் பூட்டுவதில்லை. இச்செய்தியை 'திரஸ்ட்டன்' நிரம்ப எடுத்துரைக்கின்றார். "இவர்கள் பாண்டி நாட்டிற்கு வந்து குடியேறிய பின், 400 ஆண்டு களுக்கு முன் பல சாதியினர் கூட்டுறவால் அவர்கள் வழக்கத்தையொட்டி இவ்வழக்கம் நிலை நாட்டப்பட்டது" என்று பல நூலாராய்ச்சியாளர் கூறுகின்றனர்.

சற்று முன்பின்னாக 19ம் நூற்றாண்டு பிறப்பதற்கு முன்தான் புதுமை, கார்த்திகைப் புதுமை முதலிய சிறப்பு நாட்களில் மாமிச வுணவு அடியோடு விலக்கப்பட்டது.

கழுத்துரு என்னும் திருமங்கலியக் கோவை எல்லா அங்கங்களும் சேர்ந்து இருபத்திரண்டு வராகனெடை (10 பவுன்)யிலேயே முன் அமைந்திருந்தது. எழுபதாண்டு களுக்குள்ளாகத்தான் நூறு பவுன் எடை (ஒன்றுக்குப் பத்துப் பங்கு) பெருக்கப் பட்டது.

ஆனால் இத்திருமங்கலியக் கோவை அக்குடும்பத்திற்கு என்ன ஆபத்து வரினும் கடைசிவரையில் உருவாகவே யிருக்கும். இது, ஒரு குடும்பத்துக்குப் பெரிதான, என் றும் அழியாத முதலாகவிருக்கின்றது.

கழுத்துரு விருத்தியானதைத் தவிர மற்றும் மேற் கூறிய, பெண்கள் அணியும் தங்க நகைகளெல்லாம் அடியோடு கழிக்கப்பட்டு 50 ஆண்டுகளுக்கு முன் சிவப்புக் கற்களாலேயே பலவித ஆபரணங்கள் எங்கும் பரவின. அதுவும் 1910-ம் ஆண்டுக்குச் சற்று முன் பின்னுக அத்தனையுங் கழித்து எளிய விலைக்கு விற்கப்பட்டுப் பெரும் பாலும் வைரங்களாலேயே எல்லா ஆபரணங்களும் கோடிக் கணக்காக மாற்றிச் செய்யப்பட்டன.

'திரஸ்ட்டன்' அவர்கள் ஒரு சிறு ஆண் குழந்தையையும் பெண் குழந்தையையும் புகைப்படம் எடுத்து அக் காலத்து நாகரிகத்திற்குத் தக்கபடி இருந்த ஆபரணங் களுடன் காட்டுகின்றுர்.

தற்கால நாகரிகத்திற்கேற்றவாறு வீடுகள் தோறும் குவிந்திருக்கின்ற கண்ணைப் பறிக்கும் வைரத்தாலாகிய புதுப்புதுப் பெயர்கொண்ட ஆபரணங்களைத், திருவாதிரை முதலிய விசேட நாட்களில் கன்னிப் பெண்கள் உச்சி முதல் உள்ளங்கால் வரை யணிந்து, 'திருமாமகளிரோ' என்று ஐயமுறத்தக்க அலங்காரத்துடன் வரும் காட்சிகளை, இப்போது அவர்களிலிருந்து பார்த்துக் களித்தார் களில்லையே யென்று எண்ண வேண்டியிருக்கிறது.

ஒரு மகள் திருமணத்திற்கு எல்லாச் செலவுமுள்பட ரூபாய் பதினையாயிரத்திலிருந்து (ரூ 15,000) அவரவர் செல்வ வளத்திற்குத் தக்கவாறு லட்சம் ரூபாய் (ரூ 1,00,000) வரை செலவு செய்யப்படுகிறது.

இருபதாண்டுகளுக்கு முன் சோழ நாட்டிலிருந்து வந்த பெரிய கோடீசுவரரான முதலியார் ஒருவர், ஒரு பெண்ணுக்குச் சீர் வைத்த வரிசைகளைப் பார்த்துச்

"சென்னைச் சைனுக்கடைத் தெருவில் தங்கம், வெள்ளி, பித்தளை, பீதாம்பரப்பட்டுப் புடவை, சில்லரைப் பொருள்கள், வேடிக்கைப் பொருள்கள், முதலியன அணியணியாய்ப் பரப்பப் பெற்றிருக்கும் அளவற்ற கடைகளும் இதற்கு ஈடில்லை" என்று வருணித்தார். முன்னர்ப் பெருவிரலால் சந்தனத்தைத் தொட்டுப் பொட்டு வைத்த இவர்களால் இப்போது திருமண வீடுகளிற் கொட்டிக் கவிழ்க்கும் சந்தனங்களே அளவற்ற பணமாகும்.

நான் எழுதியிருக்கும் தருமங்களைப்பற்றித் தொகை கூட்டிக் கணக்குப் பார்த்தேன். அது கணக்கில் அடங்கவில்லையாதலின், இதனைப் படிக்குமன்பர்கள் "யானையைக் கண்ணால் பார்த்து நிறுத்த மரபினோர்" வழியில் வந்த அளவிலா ஆற்றலுடையவராதலின், அதனை அவர்கள் மதிப்பிற்கே விட்டுவிட்டேன்.

அறுபதாண்டுகளுக்கு முன் இருந்த கூரை வீடுகளெல்லாம் மாறி, வானுற ஓங்கி வளர்ந்து, எழுகடல் போல் விரிந்து கிடக்கும் எழ்நிலை மாடங்களை 78 ஊர்களிலும் கணக்கிட்டால் ஏறக்குறைய 78க் கோடி ரூபாய்களாகும் என்று மதிப்பாளர்கள் மதிப்பிடுகின்றனர். சற்று ஏறக்குறைய நூறு ஆண்டுகளுக்குள்ளேயே அறச்செயலால் இத்துணை வளம் பெற்றார்கள் என்று கூசாமற் கூறலாம்.

இத் தனவைசிய மரபினர் பாண்டி நாட்டு ஆசாரியராகிய கலாமடம் ஈசான சிவாசாரியாரிடம் சைவதீட்சையும், திருவைந்தெழுத்து உபதேசமும் பெற்றுக்கொண்டு வந்தனர். பெண் பாலார் வேளாள குலத்திற் பிறந்தமை நோக்கி வேளாள குருவாகிய துளாவூர்

மடத்து நிரம்ப அழகிய தேசிகரிடம் தீட்சையும் உப தேசமும் பெற்று வந்தனர்.

கலாமடத்து ஆசாரியர் காசி யாத்திரை சென்று திரும்பிவரப் பல ஆண்டுகளானமையால், நகரத்தார்களில் ஒரு பகுதியினர் இடைக்காலத்தில் பாதரக் குடிமடத்தின் ஆசாரியரிடம் தீட்சையும் உபதேசமும் பெற நேர்ந்தது.

ஆகவே ஆண் மக்களுக்குக் கலாமடமும், பாதரக்குடி மடமும், குரு நிலையங்களாயின. பெண் மக்களுக்குத் துளாவூர் மடம் ஒன்றே குருநிலைய மாயிற்று.

இவர்கள் செல்வத்திற்கும், செல்வம் வந்தவுடன் செய்த எண்ணில்லாத தருமங்கட்கும் ஒரு சிறிதும் குறைவு வாரா வண்ணம், "இன்னமும் ஆலவாயென் இறையவன் அருளினலே, பன்னரும் நலங்கள் குன்ருப் பாக்கியம் உண்டாகுக" என்ற, பரஞ்சோதியார் திருவாக்கின்படி தம் நாடு செழிப்புற்று மேன்மை பெற்று நீடூழி வாழ்வார்களாக.

# ஒன்பது கோவில்களும், பிரிவுகளும் விவரம்

## இளையாத்தன்குடிக் கோவில்

சுவாமி பெயர்......................கைலாசநாதர்.
அம்மை பெயர்....................நித்திய கல்யாணி.

பிரிவுகள்

(க) கல்வாசனாட்டில் இளையாத்தன் குடியான,
குலசேகர புரத்தில்,
ஒக்கூருடையார்.

(உ) கல்வாசனாட்டில் இளையாத்தன் குடியான,
குலசேகர புரத்தில், அரும்பாற்கிளையாரான,
பட்டணசாமியார்.

(ங) கல்வாசனாட்டில் இளையாத்தன் குடியான,
குலசேகர புரத்தில்,
பெருமருதூருடையார்.

(ச) கல்வாசனாட்டில் இளையாத்தன் குடியான,
குலசேகரபுரத்தில்,
கழனிவாசற் குடியார்.

(ரு) கல்வாசனாட்டில் இளையாத்தன் குடியான,
குலசேகரபுரத்தில்,
கிங்கிணிக் கூருடையார்.

(சு) கல்வாசனாட்டில் இளையாத்தன் குடியான,
குலசேகரபுரத்தில்,
பேரசெந்தூருடையார்.

(எ) *கல்வாசனாட்டில் இளையாத்தன் குடியான,*
*குலசேகரபுரத்தில்,*
*சிறுசேத்தூருடையார்.*

---

## மாற்றூர்க் கோவில்

*சுவாமி பெயர்......................ஐந்நூற்றீசர்.*
*அம்மை பெயர்......................பெரிய நாயகி.*

### பிரிவுகள்

(க) *கேரள சிங்கவள நாடாகிய பிரம்பூர் நாட்டில்,*
*மாற்றூரான வீரபாண்டியபுரத்தில்,*
*உறையூருடையார்.*

(உ) *கேரள சிங்கவள நாடாகிய பிரம்பூர் நாட்டில்,*
*மாற்றூரான வீரபாண்டியபுரத்தில்,*
*அரும்பாக்கூருடையார்.*

(ங) *கேரள சிங்கவள நாடாகிய பிரம்பூர் நாட்டில்,*
*மாற்றூரான வீரபாண்டியபுரத்தில்,*
*மணலூருடையார்.*

(ச) *கேரள சிங்கவள நாடாகிய பிரம்பூர் நாட்டில்,*
*மாற்றூரான வீரபாண்டியபுரத்தில்,*
*மண்ணூருடையார்.*

(ரு) *கேரள சிங்கவள நாடாகிய பிரம்பூர் நாட்டில்,*
*மாற்றூரான வீரபாண்டியபுரத்தில்,*
*கண்ணூருடையார்.*

(சா) *கேரள சிங்கவள நாடாகிய பிரம்பூர் நாட்டில்,*
*மாற்றூரான வீரபாண்டியபுரத்தில்,*
*கருப்பூருடையார்.*

(எ) கேரள சிங்கவள நாடாகிய பிரம்பூர் நாட்டில்,
மாற்றூரான வீரபாண்டியபுரத்தில்,
குளத்தூருடையார்.

---

## வைரவன் கோவில்

சுவாமி பெயர்....................வளரொளி நாதர்.
அம்மை பெயர்......................வடிவுடையம்மை.

### பிரிவுகள்

(க) கேரள சிங்கவள நாடாகிய ஏழகப் பெருந்திருவான,
வீரபாண்டியபுரத்தில்,
சிறுகுளத்தூருடையார்.

#### இதில் உட்பிரிவுகள்

(க) பெரிய வகுப்பு.
(உ) தெய்யனார் வகுப்பு (தெய்வ நாயகர் வகுப்பு).
(ந) பிள்ளையார் வகுப்பு.

(உ) கேரள சிங்கவள நாடாகிய ஏழகப் பெருந்திருவான,
வீரபாண்டியபுரத்தில்,
கழனிவாசலுடையார்.

(ந) கேரள சிங்கவள நாடாகிய ஏழகப் பெருந்திருவான,
வீரபாண்டியபுரத்தில்,
மருதேந்திரபுரமுடையார்.

---

## இரணியூர்க் கோவில்

சுவாமி பெயர்...............ஆட்கொண்ட நாதர்.
அம்மை பெயர்......................சிவபுரந்தேவி.

(க) கல்வாசனாட்டில் இளையாத்தன் குடியான
குலசேகரபுரத்தில், இரணியூர் மருதங்குடியான
இராசநாராயணபுரத்தில்,
இரணியூர்த் திருவேட்பூருடையார்.

---

## பிள்ளையார்பட்டிக் கோவில்

விநாயகர் பெயர்...............கற்பக விநாயகர்.
சுவாமி பெயர்...........................திருவீசர்.
அம்மை பெயர்......................சிவகாமவல்லி.
சுவாமி பெயர்...........................மருதீசர்.
அம்மை பெயர்...............வாடாமலர் மங்கை.

(க) கல்வாசனாட்டில் இளையாத்தன் குடியான
குலசேகரபுரத்தில், இரணியூர் மருதங்குடியான
இராசநாராயணபுரத்தில்,
பிள்ளையார் பட்டியான திருவேட் பூருடையார்.

---

## நேமம் கோவில்

சுவாமி பெயர்......செயங்கொண்ட சோழேசர்.
அம்மை பெயர்......................சவுந்தரநாயகி.

(க) கேரள சிங்கவள நாட்டில் நேமமாகிய
குலசேகரபுரத்தில், தேனாறுபாயும்,
இளநலமுடையார்.

---

## இலுப்பைக்குடிக் கோவில்

சுவாமி பெயர்..................தான்தோன்றீசர்.
அம்மை பெயர்......................சவுந்தரநாயகி.

(க) கேரள சிங்கவள நாடாகிய பிரம்பூர் நாட்டில், இலுப்பைக் குடியான புகழிடங்கொடுத்த பட்டணத்தில், சூடாமணி புரமுடையார்.

---

## சூரைக்குடிக் கோவில்

சுவாமி பெயர்..........................தேசிகநாதர்.
அம்மை பெயர்.....................ஆவுடை நாயகி.

(க) கேரள சிங்கவள நாட்டில், சூரைக் குடியான
தேசிக நாராயணபுரத்தில்,
புகழ்வேண்டிய பாக்கமுடையார்.

---

## வேலங்குடிக் கோவில்

சுவாமி பெயர்.........................கண்டீசுவரர்.
அம்மை பெயர்....................காமாட்சியம்மை.

(க) கேரள சிங்கவள நாடாகிய பாலையூர் நாட்டில்,
வேலங்குடியான தேசிக நாராயணபுரத்தில்,
கழனி நல்லூருடையார்.

---

## நகரத்தார் நிர்ணயஞ் செய்த சாதி முறை நியாயங்கள்

மாதா, பிதா, குரு, தெய்வம், குலதேவதை இவர்களை வணங்கிப் பூசிக்கிறது.

கோவில்களுக்கும் குரு நிலையங்களுக்கும் உள்ள கிராமம் முதலியவற்றை, நகரத்தார் விசாரணையில் வைத்துக் கொண்டு, அவற்றால் வரும் ஊதியத்தை அந்த அந்தத் தருமங்களுக்கே உபயோகப்படுத்துகிறது.

சாதிமுறை நியாயங்களில் தவறி நடக்கிறதில்லை. நற் கருமங்களைச் செய்கிறது.

ஆடவரும் பெண்டிரும் தங்கள் தங்களுக்கு ஏற்பட்டிருக்கும் குரு ஸ்தானங்களிலேயே தீட்சாகிரியை முதலியவை வழக்கப்படி செய்து கொள்ளுகிறது. வேறொருவரிடத்தும் தீட்சாகிரியை முதலியவை செய்து கொள்ளக் கூடாது.

சிவ மதத்திலேயே இருக்கிறது. அந்நிய மதங்களில் சேரக் கூடாது.

ஏக கோத்திரத்தில் திருமணஞ் செய்து கொள்ளுகிற தில்லை. (கோத்திரம் என்பது கோவில்களும் உட்பிரிவுகளும்) சுய கோத்திரத்தில் புத்திர சுவீகாரம் செய்து கொள்ளுகிறது. (மாற்றூர்க் கோவில், இளையாத்தன் குடிக் கோவில் இரண்டனுட் பிரிவுகளில் சம்பந்தஞ் செய்து கொள்ளும் வழக்கம், புள்ளிகள் பெருகிவிட்ட காரணத்தால் பிற்காலத்தில் நிகழ்வதாயிற்று).

இரத்தினம், சுவர்னம், பலசரக்கு முதலிய வியாபாரங்கள் செய்கிறது. சீவவதையான வியாபாரங்கள் செய்கிறதில்லை. வாய்மை தவறு மேலோர்களிடத்தில் பணம் கொடுக்கல் வாங்கல் செய்கிறது. தரும வட்டி வாங்குகிறது. குதிரை வியாபாரமும், வெற்றிலை முதலிய அழுகற் சரக்கு வியாபாரமும் செய்யக்கூடாது.

குடிவாரத்திற்கு உழுது பயிரிடுகிறதில்லை. ஊரில் அம்பல உம்பள நிலைமை பெற்று வேலைகள் பார்க்கக் கூடாது.

திருட்டு வியாபாரஞ் செய்யக் கூடாது. பிறன் மனைவியைச் சேரக்கூடாது. தாசிகளிடத்தில் கொடுக்கல் வாங்கல் செய்யக் கூடாது.

நகர முறைமை தவறினவர்களையும், இராச தெண்டனைக்குட்பட்டவர்களையும், சோரஞ் செய்தவர்களையும் நட்புக் கொள்ளக் கூடாது.

கடலுக்கு மேற்கு, பிரான் மலைக்குக் கிழக்கு, வைகைக்கு வடக்கு, வெள்ளாற்றிற்குத் தெற்கு இந்நான்கு எல்லைகட்குட்பட்ட வேளாளர் பூமியாகிய இந்நாட்டிலேயே குடியிருக்கிறது.

பெண்டிர், சுவாமி தரிசனம் தீர்த்த யாத்திரைகளுக்கு ஆடவர்களுடன் போய்வர வேண்டும்.

எந்த விஷயங்களிலும் முன் வழக்கப்படி நடந்து கொள்கிறது.

கோவில் வாசலிலாவது மடத்து வாசலிலாவது நகரக் கூட்டம் கூடிச் சாதி நியாயம் பேசுகிறது.

மேற்கண்ட ஒன்பது கோவில் நகரத்தாருக்கும், அவரவர்களுக்குரிய கோவில்களிலிருந்து சுவாமிக்குச் சாத்தின மாலையும், விபூதிப் பிரசாதமும் வந்துதான் திருமணம் நடத்தல் வேண்டும்.

திருமணம் நடக்கிற விவரத்தைப் பற்றிக் கோவில் வாசல்களில் தாம்பூலம் வைத்து முன்னமே தெரிவித்தல் வேண்டும்.

இரணியூர்க் கோவிலாரும், பிள்ளையார் பட்டிக் கோவிலாரும், சகோதரர்களின் வமிசத்தாராதலால் தம்முள் கலியாணஞ் செய்து கொள்ளக் கூடாது. மற்றைக் கோவில்களில் செய்து கொள்ளலாம்.

## நகரக் கோவில்களின் புள்ளி விவரம்

| வரிசை எண் | நகரக் கோவில் பெயர் | மொத்தம் புள்ளி | குறிப்பு |
|---|---|---|---|
| 1. | இரணியூர்க் கோவில் | 1289 | விரோதி பங்குனி 31-உ வரை |
| 2. | இலுப்பைக்குடிக் கோவில் | 1450 | ,, |
| 3. | இளையாத்தன்குடிக் கோவில் | 2997 | விரோதி கார்த்திகை 31-உ வரை |
| 4. | சூரைக்குடிக் கோவில் | 643 | விரோதி பங்குனி 31-உ வரை |
| 5. | நேமம் கோவில் | 752 | ,, |
| 6. | பிள்ளையார்பட்டிக் கோவில் | 1714 | ,, |
| 7. | மாற்றூர்க் கோவில் | 3567 | விக்ருதி பங்குனி 31-உ வரை |
| 8. | வைரவன் கோவில் | 2742 | விரோதி பங்குனி 31-உ வரை |
| 9. | வேலன்குடிக் கோவில் | 22 | ,, |
| | ஆக மொத்தம் | 15176 | |

# ஒன்பது நகரக் கோவில்களின் திருப்பணி விவரம்

---

## 1. இரணியூர்க் கோவில்

சுவாமி பெயர் ஆட்கொண்டநாதர்
அம்மை பெயர் சிவபுரந் தேவி

இரணியூர்க் கோவில் புள்ளிகள்...1289

இந்த இரணியூர்க் கோவிலார் மூத்த சகோதரரும், பிள்ளையார்பட்டிக் கோவிலார் இளைய சகோதரரும் ஆவர்.

இக் கோவில் கருப்பக் கிரகத்தின் நாற்புறச் சுவர்களிலும் எண்ணற்ற கல்வெட்டுக்கள் வெட்டப் பெற்றிருந்தன. மேலும் ஊருக்கு மேற்றிசையிலும் கீழ்த்திசையிலும் பல கல் வெட்டுக்கள் இருந்தன. அவற்றையெல்லாம் சென்னைக் கல்வெட்டுப் பரிசோதகர் நகலெடுத்துள்ளனர். அவை 600-ஆண்டுகளுக்கு மேற்பட்ட உயர்ந்த அறச் செயல்களைக் குறிக்கும் கல்வெட்டுக்களாகவுள்ளன. அவற்றை இக் கோவில் நகரத்தார் பிரதியெழுதி வாங்கி வைத்துள்ளனர்.

சுவாமி கோவில் கருப்பக்கிரகச் சுவரில், "ரௌத்திரி ௵ தைமீ 2௨ (கி. பி. 1501) கல்வாச நாட்டில் இளையாத்தன் குடியான குலசேகரபுரத்தில் திருவேட்பூருடையான் என்ற ஒருவருக்கு, பத்திரகாளியம்மை கோவிலுக்குத் தென்புறம், தேவி தானமாக வணங்குவ

தற்கு ஓர் அம்மன் அமைத்துக் கொள்வதற்காக, இரணியூரில் வசிப்பவர்களால் சுதந்திரமாகக் கொடுக்கப் பெற்றிருக்கின்றது" என்று கல் வெட்டு இருந்ததாக 1926-ம் வருடம் கல்வெட்டுப் பரிசோதனைச் சாசனம் எண் 3-ல் குறிக்கப் பெற்றுளது.

ஷை சிலாசாசனங்கள் குறிக்கப்பெற்றிருந்த பழங் கோவிலைப் பிரித்து, இக் கோவிலை நகரத்தார்கள் புதிதாக ரூபாய் பதினொன்றே முக்கால் லட்சம் (11,75,000) செலவிட்டு உயர்ந்த திருப்பணி செய்திருக்கின்றார்கள்.

சிவாலய கும்பாபிடேகம், சுபானு ஆண்டு தை மாதம் 18-ம் நாள் (31-1-44) ரூபாய் ஒன்றே முக்கால் லட்சம் (1,75,000) செலவில், பெருஞ் சிறப்புடன் நடைபெற்றது.

ரூபாய் ஒன்றரை லட்சம் (1,50,000) செலவில், நீலமேகப் பெருமாள்கோவில் திருப்பணியும், ரூபாய் நாற்பதினாயிரம் (40,000) செலவில், அந்தணர் உறையுளும், அமைக்கப் பெற்றுள்ளன.

கீழச்சிவற்பட்டியிலிருந்து இரணியூர்க் கோவில்வரை, ரூபாய் முப்பதினாயிரம் (30,000) செலவில் கற்சாலை (Road) அமைக்கப் பெற்றுள்ளது.

தேவகோட்டை அ. ராம. அ. லெ. அ. வால், ரூபாய் ஆறாயிரம் (6,000) செலவில், வெள்ளிப் பெருச்சாளி வாகனமும், கீழச்சிவற்பட்டி நா. சொ. சொக்கலிங்கம் செட்டியாரால், ரூபாய் முப்பதினாயிரம் (30,000) செலவில் அம்மையாருக்குத் திருக்கவசமும் உபயமாகச் செய்யப் பெற்றுள்ளன.

## 2. இலுப்பைக்குடிக் கோவில்

சுவாமி பெயர் தான்தோன்றியீசர்
அம்மை பெயர் சவுந்தர நாயகி

இலுப்பைக்குடிக் கோவில் புள்ளிகள்...1450

இது முதலில் திருப்பணி செய்யப்பெற்ற கோவில்.

அந்தணர் உறையுள், பசுமடம், விடுதி, திருநந்தன வனம், ஊருணி உள்பட ரூபாய் நான்குலட்சம் (4,00,000) செலவில் திருப்பணி செய்யப்பெற்று, சௌமிய ஆண்டு ஆவணி மாதம் 14-ம் நாள் கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

இக் கோவில் நகரத்தார், ஆதியில் இவ்வூரிற் குடியிருந் திருக்கின்றனர். அதன் அறிகுறியாக, தேவகோட்டை மெ. வகையராப் பொதுவில், அம்மன் சந்நிதித் திருக் குளமும் பிள்ளையார் கோவிலும், ரூபாய் இருபதினாயிரம் (20,000) செலவில் கட்டியிருக்கின்றனர்.

பூங்குடிக் கூராண்டான் குடும்பத்தார், ரூபாய் முப் பதினாயிரம் (30,000) செலவில் ஓர் ஊருணி கட்டித் தெப் பத் திருவிழா நடத்தி வருகின்றனர்.

## 3. இளையாத்தன்குடிக் கோவில்

சுவாமி பெயர் கைலாச நாதர்
அம்மை பெயர் நித்திய கல்யாணி

இளையாத்தன்குடிக்கோவில் புள்ளிகள்...2997

கேரள சிங்க வள நாடாகிய கல்வாச நாட்டில், இளை யாத்தன்குடியான குலசேகரபுரமுடையார், எழுவகைப் பிரிவினர்க்கு இக் கோவில் உரியதாகும்.

இளையாத்தன்குடி, இராமநாதபுரம் மாவட்டம் திருப்பத்தூர் வட்டத்தில் உள்ளது. நகரத்தார்களில் இளையாத்தன்குடிக் கோவிலாரான, 1. ஒக்கூருடையார், 2. அரும்பூர்க் கிழாரான பட்டண சாமியார், 3. பெருமருதூருடையார், 4. கழனிவாசற்குடியார், 5. கிண்கிணிக்கூருடையார், 6. பேரசெந்தூருடையார், 7. சிறு சேற்றூருடையார் என்ற ஏழு வகுப்பினர்களும், 'இரணியூர்க்கோவில்', 'பிள்ளையார்பட்டிக் கோவில்' என்ற இரண்டு சகோதரர்களுமான ஒரு வகுப்பினரும் அங்கே குடியிருந்து வாழ்ந்திருக்கின்றனர். அக்காலத்து மேற்கண்ட எட்டு வகுப்பினருக்கும், தனித்தனியே குளங்களும் பிள்ளையார் கோவில்களும் பெருமாள் ஆலயமும் இருந்திருக்கின்றன.

ஒக்கூருடையருக்கு உரிமையான விநாயகர் கோவிலும், வெள்ளைக் கற்களால் சிறந்த வேலைப்பாடுகளுடன் அமைந்த குளமும், ரூபாய் ஒன்றேகால் லட்சம் (1,25,000) செலவில் திருப்பணி செய்யப்பெற்று, பிரபவ வைகாசி 30-ம் நாள் (12—6—1927) விநாயகர்கோவிற் கும்பாபிடேகம் நடத்தப்பெற்றது.

பசுமடம், திருநந்தனவனம், ஊருணி, உள்படக் கைலாசநாதர் கோவில், பெருமாள் கோவில் திருப்பணி ரூபாய் பதினாறு லட்சம் (16,00,000) செலவில் செய்யப்பெற்று, 1939-ம் ஆண்டில் கும்பாபிடேகம் மிகச் சிறப்பாக நடைபெற்றது.

நகரத்தார்கள் காவிரிப்பூம்பட்டினத்திலிருந்து முதன் முதலாக இத்தலத்திலேயே வந்து குடியேறினர். இளையாத்தன்குடி, இரணியூர், பிள்ளையார்பட்டி என்ற மூன்று வகுப்பினர் தவிர, மற்றைய ஆறு வகுப்பினரும்,

தத்தமக்குத் தனித்தனியே ஆறு வகுப்புக் கோவில்கள் கிடைக்கப் பெற்று ஆங்காங்கே குடியேறி வசித்து வந்தனர்.

பின்னர் நெடுநாட் சென்று இரணியூர், பிள்ளையார் பட்டிக் கோவில் திருவேட்பூருடையார்கள், தத்தமக்குத் தனித்தனிக் கோவில் கிடைக்கப்பெற்று, ஆங்காங்கே குடியேறி விட்டனர். இளையாத்தன்குடிக் கோவிலார் மட்டும் அங்கேயே நிலை பெற்று விட்டனர்.

இளையாத்தன்குடிக் கோவில் தேவத்தானத்திலிருந்து ரூ. 25,000/- செலவிட்டுப் 'பிரசவ வைத்தியசாலையும், சிசு சம்ரக்ஷணசாலையும்' நிறுவி அரசாங்கத்தாரிடம் ஒப்புவித்தும், ரூ. 15,000/- செலவிட்டு எலிமெண்டரி பாடசாலை நிறுவி, அரசினரிடம் ஒப்புவித்தும், ரூ. 10,000/- செலவில் தெருக்களில் குடி தண்ணீர்க் குழாய்கள் அமைத்தும், ரூ. 5,000/- செலவில் வீதிகளில் விளக்குகள் அமைத்தும், ரூ. 50,000/- செலவில் 'பூங்காவனமும் ரேடியோ நிலையமும்' நிறுவியும், ரூ. 25,000/- செலவில் விருந்தினர் மாளிகைகள் நிறுவியும், ரூ. 5,000/- செலவில் 'அஞ்சல் நிலையம்' நிறுவியும் வசதி செய்துள்ளனர்.

இளையாத்தன்குடி தேவத்தானத்திலிருந்துரூ. 40,000/- செலவில் 'கீரணியம்மன் கோவில்' திருப்பணி செய்யப் பெற்றுளது.

## 4. சூரைக்குடிக் கோவில்

| | |
|---|---|
| சுவாமி பெயர் | தேசிகநாதர் |
| அம்மை பெயர் | ஆவுடைநாயகி |

சூரைக்குடிக் கோவில் புள்ளிகள் 643.

கேரள சிங்க வளநாட்டில் சூரைக்குடியான தேசிக நாராயணபுரத்தில், புகழ் வேண்டிய பாக்கமுடைய நகரத்தார் கோவில்.

அந்தணர் உறையுள், பசுமடம், திருநந்தனவனம், விடுதி, ஊருணி உள்பட, தேசிகநாதர் ஆலயத் திருப்பணி ரூபாய் இரண்டு லட்சம் (2,00,000) செலவில் செய்யப் பெற்று, விளம்பிளு ஆனிமீ 14-ம் தேதி (26-6-1898)-ல் கும்பாபிடேகம் மிகச் சிறப்பாக நடைபெற்றது.

## 5. நேமம் கோவில்

சுவாமி பெயர் செயங்கொண்ட சோழேசர்
அம்மை பெயர் சவுந்தர நாயகி

நேமம் கோவில் புள்ளிகள் 752

இக்கோவில் செயங்கொண்ட சோழ மன்னனல் பிரதிட்டை செய்யப் பெற்றது. அதனல் 'செயங்கொண்ட சோழேசர்' என்பது சுவாமி பெயர் ஆயிற்று.

இக்கோவிலைக் கைக்கொண்ட பின்னர், நகரத்தார் நேமம், ஆற்காடு முதலிய இடங்களில் வசித்து வந்திருக்கின்றனர் என்று தெரிகிறது.

மிகப் பழைமையான இக்கோவில் ரூபாய் ஆறு லட்சம் (6,00,000) செலவில் 12 ஆண்டுகள் திருப்பணி செய்யப் பெற்று, ரூபாய் ஐம்பதாயிரம் (50,000) செலவில் பிலவங்களு வைகாசிமீ 10-ம் தேதி (23-5-1907) கும்பாபிடேகம் மிகச் சிறப்பாக நிகழ்வுற்றது.

ரூ. 10,000/- செலவில் அழகிய நாச்சியம்மன் கோவில் திருப்பணியும், ரூ. 12,000/- செலவில் பிள்ளையார் கோவில்,

திருநந்தனவனம், பசுமடம் முதலியனவும் அமைக்கப் பெற்றுள்ளன.

நேமம் கோவிலார் குடியிருந்த காலத்தில் காரைக் குடி அரு. அ. குடும்பத்தார்களால், ரூ. 15,000/- செலவில் பிள்ளையார் கோவிலும் குளமும் நிறுவப் பெற்றுள்ளன.

## 6. பிள்ளையார் பட்டிக் கோவில்

| | |
|---|---|
| விநாயகர் பெயர் | கற்பக விநாயகர் |
| சுவாமி பெயர் | திருவீசர் |
| அம்மை பெயர் | சிவகாமவல்லி |
| சுவாமி பெயர் | மருதீசர் |
| அம்மை பெயர் | வாடாமலர் மங்கை |

பிள்ளையார்பட்டிக் கோவில் புள்ளிகள் *1714*

கல்வாசனாட்டில், இளையாத்தன் குடியான, குலசேகர புரத்தில், இரணியூர் மருதங்குடியான ராசநாராயண புரத்தில், பிள்ளையார் பட்டியான திருவேட்பூருடையார் கோவில்.

இது ஸ்ரீ கற்பக விநாயக மூர்த்தியைப் பிரதானமாக உடையது.

கற்பக விநாயகர், திருவீசர், சிவகாமவல்லி, மருதீசர், வாடாமலர் மங்கை முதலிய கடவுளரின் கோவில் திருப் பணிகள் ரூ. (9,00,000) ஒன்பது லட்சம் செலவில் செம்மையாகச் செய்யப் பெற்று ரூபாய் முப்பதினாயிரம் (30,000) செலவில் விளம்பி தை 10-ம் தேதி (22-1-1899) முதற் கும்பாபிடேகமும், ரூ. (2,50,000) இரண்டரை லட்சம் செலவில் ராச கோபுரத் திருப்பணியும், ஸ்ரீ முக வைகாசி 30-ம் தேதி (12-6-1933) இரண்டாங் கும்பாபி

டேகமும், விகுருதி தை 28-ம் தேதி (11-2-51)யில் மூன்ரும் கும்பாபிடேகமும் செய்யப் பெற்றுள்ளன.

கற்பக விநாயகர், திருவீசர் கோவில், மலைக் குகையில் அமைந்துள்ளது. விநாயகர், திருவீசர், திரிபுவன சக்ரவர்த்தி, அவன் தேவியர் திருவுருவங்கள் மலையிலேயே அமைந்துள்ளன. இக்கோவிலில் கல்வெட்டுக்கள் நிறைய உள்ளன.

கீழச்சிவற்பட்டி ராம. மு. சோம. சோமசுந்தரம் செட்டியாரால் ரூ. 8,000/ செலவில் வெள்ளி இடப வாகனமும், கேடகமும், காரைக்குடி மு. சிவ. சோ. வால் ரூ. 3,500/- செலவில் வெள்ளி மயில் வாகனமும். கண்டனூர் மு. நா. அ. நா. வரல் ரூ. 2,500/- செலவில் வெள்ளிப் பெருச்சாளி வாகனமும், நகரத்தார்களால் ரூ. 13,000/- செலவில் இரண்டு வெள்ளி இடபங்களும் மஞ்சமும் செய்யப் பெற்றுள்ளன.

நகரத்தார்களால் ரூபாய் அறுபதினுயிரம் (60,000) செலவில், பெரிய கறுப்பர், மருதங்குடி ஐயனூர் கோவில்களும், கோவில் அலுவலாளர் இல்லங்களும், ரூபாய் எழுபத்தையாயிரம் (75,000) செலவில் பெண்கள் விடுதியும் அமைக்கப் பெற்றுள்ளன.

கீழச் சிவற்பட்டி ராம. மு. சோம. சோமசுந்தரம் செட்டியார் ரூ. 12,000/- செலவில் பசுமடமும், ரூ. 8,000/- செலவில், கற்பக விநாயக வித்தியாசாலையும், நிறுவியுள்ளார்.

ஆ. முத்துப்பட்டினம், சித. மு. நாரா. நாச்சியப்ப செட்டியார் ரூ. 7,000/- செலவில் தண்ணீர்ப் பந்தர் நிறுவி நடத்தி வருகின்ருர்.

## 7. மாற்றூர்க் கோவில்

| | |
|---|---|
| சுவாமி பெயர் | ஐந்நூற்றீசர் |
| அம்மை பெயர் | பெரிய நாயகி |

மாற்றூர்க் கோவில் புள்ளிகள் 3567

இம்மாற்றூர்க் கோவில், சித்தராற்பூசிக்கப் பெற்றுப் புகழ் வாய்ந்த பெருங்கோயில். அவர் சித்த வன்மையால் செம்பொன் செய்து ஐந்நூறு மாற்றுக் கண்டனர். அதனால்தான் இந்த மூலலிங்கப் பெருமானுக்கு "ஐந்நூற்றீசர்" என்னும் பெயர் அமைந்தது.

நகரத்தார்களால் ரூபாய் பதினாறு லட்சம் (16,00,000) செலவில், மிக உயர்ந்த முறையில் திருப்பணி செய்யப் பெற்று, சருவதாரி௵ தைமீ 20-ம் நாள் (2-2-1949) கும்பாபிடேகம் மிகச் சிறப்பாக நடைபெற்றது.

## 8. வைரவன் கோவில்

| | |
|---|---|
| சுவாமி பெயர் | வளரொளி நாதர் |
| அம்மை பெயர் | வடிவுடையம்மை |

வைரவன் கோவில் புள்ளிகள் 2742

இக்கோவில் நகரத்தார், பிள்ளையார் வகுப்பு என்றும், தெய்வ நாயகர் வகுப்பு என்றும், பெரிய வகுப்பு என்றும் பெயர் பெற்றிருக்கின்றனர். இவர்கள் மூவரும் ஒரே சகோதரர்கள் ஆவர்.

இக்கோவில் ஆவரணத்துள் ஒரு விநாயகர் இருக்கின்றார். இவ்விநாயகரையே பிரதானமாகக் கொண்டு இருப்பவர் பிள்ளையார் வகுப்பினர்; சுவாமி சந்நிதியில் 'தெய்வநாயகர்' என்பார், உருவச் சிலையில் காட்சி தரு

கின்றூர். இவர் வழி வந்தவர்களே தெய்வநாயகர் வகுப்பினர். புள்ளியிலும் முறையிலும் பெரியவர்களாக இருந்த காரணம் பற்றிப் 'பெரிய வகுப்பினர்' என்று பெயர் பெற்றனர் போலும். இவ்வகுப்பினர் எல்லாம் ஆதியில் இந்நகரிலேயே குடியிருந்து வந்திருக்கின்றனர். 40 ஆண்டுகளுக்கு முன்னர் வரை வசித்துள்ளனர்.

இக்கோவில் நெடுநாள் ரூபாய் பன்னிரண்டு லட்சம் செலவில் (12,00,000) திருப்பணி செய்யப்பெற்று, ரூ. 75,000/- செலவில் ஜயவரு சித்திரைமீ 16-ம் நாள் (27-4-1894) முதற் கும்பாபிடேகமும், பராபவஞு தைமீ 19-ம் நாள் (1-2-1907) ரூ. 30,000/- செலவில் இரண்டாங் கும்பாபிடேகமும் செய்யப்பெற்றன. ரூபாய் ஒரு லட்சம் (1,00,000) செலவில் விடுதி கட்டப்பெற்றுளது.

## 9. வேலன்குடிக் கோவில்

| | |
|---|---|
| சுவாமி பெயர் | கண்டீசுவரர் |
| அம்மை பெயர் | காமாட்சியம்மை |

வேலன் குடிக் கோவில் புள்ளிகள் 22

மிகப் பழைமை வாய்ந்த இக்கோவிலைப் பிரித்து, இருந்த இடத்திற்குச் சற்று தென் திசையில் புதுக் கோவிலாகத் திருப்பணி செய்து, ஈசுவரஞு ஆனிமீ 5உ (18-6-37)யில் கும்பாபிடேகம் மிகச் சிறப்பாக நடைபெற்றது.

ஷை சிவாலயத்துக்கு மேல் பால் "மகாலட்சுமி உடனுய தேசிக நாராயணப் பெருமாள்" கோவில் திருப்பணி செய்யப் பெற்று 18-6-37-ல் கும்பாபிடேகம் நடைபெற்றது.

காமாட்சியம்மை உடனுய கண்டீசுவரர் கோவில், ரூபாய் பன்னிரண்டு லட்சம் (12,00,000) செலவில் திருப் பணி செய்யப் பெற்றது. அந்தணர் உறையுள் விடுதி முதலியன ரூபாய் பதினையாயிரம் (15,000) செலவில் அமைக்கப் பெற்றுள்ளன.

தேவகோட்டை செ. பி. ச. சண்முகம் செட்டியார் இவ்வூர்ப் பெரியநாயகியம்மை கோவில் திருப்பணிக்காக வும், கும்பாபிடேகத்திற்காகவும் ரூபாய் ஒரு லட்சம் (1,00,000) செலவு செய்துள்ளனர்.

நகரத்தாருட் சிலரால் ரூ. 3,000/- செலவில் பசுமட மும், ரூ. 1,500/- செலவில் திருநந்தனவனமும், ரூ. 6,000/- செலவில் தண்ணீர்ப் பந்தரும் அமைக்கப் பெற்றுள்ளன.

---

## 1. அமராவதி புதூர்

(இராமநாதபுரம் மாவட்டம்)

புள்ளிகள்

பிள்ளையார்பட்டிக் கோவில் ... 26

இவ்வூரில் மிகப் பழைமையாயிருந்த சிவன் கோவிலை வயி. ராம. வயி., வயிநாகரம் குடும்பத்தார் ரூபாய் தொண் ணூறுயிரம் (90,000) செலவு செய்து புதுப்பித்து, கீலக ஞு ஆனி மீ 13உ (26-6-1908)-யில் கும்பாபிடேகம் செய்யப் பெற்றுள்ளது.

சுவாமி பெயர் வந்தருளீசுவரர்
அம்மை பெயர் வாழவந்த நாயகி

| | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 35 | செம்பனூர் | | | | | 25 | | | | | 25 |
| 36 | செயங்கொண்டபுரம் (செக்காலை) | | | | | 27 | | | | | 27 |
| 37 | செவ்வூர் | 8 | | | 80 | | | | | | 88 |
| 38 | சொக்கநாதபுரம் | | | 29 | | | 27 | 54½ | | | 110½ |
| 39 | சொக்கலிங்கபுரம் | | | 52 | | | | 30½ | 11 | | 93½ |
| 40 | சொக்கலிங்கம்புதூர் | | | | | | | 24 | 56 | | 80 |
| 73 | வலையபட்டி | 10 | 20 | 36 | | 63 | 152 | 170 | 145 | | 596 |
| 74 | விராமதி | | | 64 | | | | | 7 | | 71 |
| 75 | விரையாச்சிலை | | 40 | 26 | 5 | | | 12½ | 72 | | 155½ |
| 76 | வெற்றியூர் | | | 7 | | | 1 | 44½ | 11 | | 63½ |
| 77 | வேகுப்பட்டி | | | 45 | 52 | | 65 | 6 | | | 168 |
| 78 | வேந்தன்பட்டி | 27 | 50 | 45 | | 40 | | 102 | 26 | | 290 |
| | வீரசேகரபுரம் | | | | | | 8 | 51 | | | 59 |
| | தேனிபட்டி | 12 | | | | | | | | | 12 |
| | முறையூர் | | | | | | 26 | 36 | | | 62 |
| | வேங்காவயல் | | | | | | | 2 | | | 2 |
| | மொத்தம் | 1289 | 1450 | 2997 | 643 | 752 | 1714 | 3567 | 2742 | 22 | 15176 |

உ

சிவமயம்

# செட்டிநாட்டு நகரக் கோவில் புள்ளிகள் விவரம்

| எண் | ஊர்களின் பெயர் | இரணிக் கோவில் புள்ளி | இலுப்பைக் குடிக் கோவில் புள்ளி | இளையாற்றங் குடிக் கோவில் புள்ளி | சூரைக்குடிக் கோவில் புள்ளி | நேமங்கோவில் புள்ளி | பிள்ளையார் பட்டிக் கோவில் புள்ளி | மாற்றூர்க் கோவில் புள்ளி | வைரவன் கோவில் புள்ளி | வேலங்குடிக் கோவில் புள்ளி | கூடிய புள்ளி |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | அமராவதிபுதூர் | | | | | | 26 | | | | 26 |
| 2 | அரண்மனைச் சிறுவயல் | | | 14 | 41 | 3 | | 25½ | 9 | | 92½ |
| 3 | அரிமளம் | 21½ | 4 | 24 | | 45 | 72 | 117 | 89 | | 372½ |
| 4 | அரியக்குடி | | | 18 | | | | | 71 | | 89 |
| 5 | அலவாக்கோட்டை | | 45 | 1 | | | 4 | 87½ | 11 | | 148½ |
| 6 | க. அழகாபுரி | 19 | | 30 | | | | 1½ | 14 | | 64½ |
| 7 | கொ. அழகாபுரி | | | 28 | | | | | | | 28 |
| 8 | ஆத்தன்குடி | | | 29 | | | 43 | 66 | 77 | | 215 |
| 9 | ஆத்திக்காடுதெற்கூர் | 4½ | | 31 | | | | 92½ | 12 | | 140 |
| 10 | ஆவினிப்பட்டி | | | 38 | 4 | | 4 | 40 | 15 | | 101 |
| 11 | உ. சிறுவயல் | | 40 | 46 | | | | 114 | 64 | | 264 |
| 12 | உலகன்பட்டி | 3 | | 34 | | 14 | 8 | 18 | 2 | | 79 |
| 13 | ஒக்கூர் | | 45 | 18 | | | 1 | | 20 | | 84 |
| 14 | கடியாபட்டி | 104½ | 8 | 73 | | | 3 | 18½ | 130 | | 337 |
| 15 | கண்டமாணிக்கம் | | 40 | 25 | 11 | | 25 | 49 | 76 | | 226 |
| 16 | கண்டவராயன்பட்டி | | | 135 | | | 57 | 38 | 33 | | 263 |
| 17 | கண்டனூர் | 29 | 45 | 20 | 23 | 7 | 49 | 142½ | 74 | | 389½ |
| 18 | கருங்குளம் | 6 | | 4 | | | | 5 | 9 | 5 | 29 |
| 19 | கல்லல் | | | 56 | 7 | 10 | 7 | 70½ | 94 | | 244½ |
| 20 | கல்லுப்பட்டி | 1 | | 38 | | | 33 | 37 | | | 109 |
| 21 | காரைக்குடி | 73 | 15 | 277 | 27 | 118 | 321 | 211½ | 197 | 7 | 1246½ |
| 22 | காளையார்மங்கலம் | | | 9 | 37 | | | | 14 | | 60 |
| 23 | கானாடுகாத்தான் | 38 | | 68 | | 36 | | 90 | 11 | | 243 |
| 24 | கீழச்சிவற்பட்டி | 26 | | 43 | 121 | 17 | 49 | 157½ | 97 | | 550½ |
| | அளகாபுரி | | | | | | | 40 | | | |
| 25 | குருவிக்கொண்டான்பட்டி | 24 | 2 | 20 | 23 | | 23 | 22½ | 10 | | 124½ |
| 26 | குழிபிறை | 26 | 40 | 104 | | | 14 | 124½ | 23 | | 331½ |
| 27 | கொத்தமங்கலம் | 95 | 6 | | | | 2 | 55 | 10 | | 168 |
| 28 | கொப்பனபட்டி | 108 | | 1 | | | | | 11 | | 120 |
| 29 | கோட்டையூர் | 51 | | 54 | | 73 | 11 | 89 | | | 278 |
| 30 | கோனபட்டு | 3½ | 110 | 27 | | | 87 | 13 | 31 | | 271½ |
| 31 | சக்கந்தி | | | 16 | | | | | | | 16 |
| 32 | சண்முகநாதபுரம் | | | 106 | 3 | 4 | 5 | 72½ | | | 190½ |
| 33 | சிராவயல் | | 34 | | | | 16 | | 10 | | 60 |
| 34 | சிறுகூடற்பட்டி | | | 13 | | | 11 | 88½ | 46 | | 158½ |
| 35 | செம்பனூர் | | | | | 25 | | | | | 25 |
| 36 | செயங்கொண்டபுரம் (செக்காலை) | | | | | 27 | | | | | 27 |
| 37 | செவ்வூர் | 8 | | | 80 | | | | | | 88 |
| 38 | சொக்கநாதபுரம் | | | 29 | | | 27 | 54½ | | | 110½ |
| 39 | சொக்கலிங்கபுரம் | | | 52 | | | | 30½ | 11 | | 93½ |
| 40 | சொக்கலிங்கம்புதூர் | | | | | | | 24 | 56 | | 80 |
| 41 | சோழபுரம் | | | | | | 6 | 10½ | | | 16½ |
| 42 | சொர்னநாதபுரம் (தாணிச்சாவூரணி) | | | | | | 26 | 8 | | | 34 |
| 43 | தேவகோட்டை | 89 | 450 | 372 | | 60 | 103 | 431½ | 264 | 7 | 1776½ |
| 44 | தேனிபட்டி | 13 | | 6 | 5 | | | | 35 | | 59 |
| 45 | நடராஜபுரம் | | 25 | 2 | 21 | | | 4 | 13 | | 65 |
| 46 | நற்சாந்துபட்டி | | 75 | 57 | | | 73 | 35½ | 65 | | 305½ |
| 47 | நாச்சியாபுரம் | | 80 | | | | 42 | | 17 | | 139 |
| 48 | நாட்டரசன்கோட்டை | 27 | | 188 | 30 | | 48 | 85 | 25 | | 403 |
| 49 | நெற்குப்பை | 75 | | 79 | 23 | 53 | 11 | 6 | 7 | | 254 |
| 50 | நேமத்துப்பட்டி | 37½ | 40 | 17 | | | | 15 | 51 | | 160½ |
| 51 | பட்டமங்கலம் | | 5 | 10 | 19 | | 7 | 11 | | 3 | 55 |
| 52 | பலவான்குடி | 39 | | 13 | | 3 | | 4 | 43 | | 102 |
| 53 | பள்ளத்தூர் | 159 | 30 | 35 | 28 | 67 | | 38 | 94 | | 451 |
| 54 | பரியாமருதுப்பட்டி | | | | 2 | | | | 3 | | 5 |
| 55 | பனங்குடி | | 9 | 4 | | | | | | | 13 |
| 56 | பனையப்பட்டி | 26 | 13 | 3 | 2 | | | 83½ | 3 | | 130½ |
| 57 | பாகனேரி | | | 42 | 5 | | 45 | 50 | 80 | | 222 |
| 58 | பிள்ளையார்பட்டி | | | | | | 3 | | | | 3 |
| 59 | புதுப்பட்டி | | 10 | 72 | | | | | 113 | | 195 |
| 60 | புதுவயல் | 52 | 2 | 112 | 44 | | 10 | 24½ | 67 | | 311½ |
| 61 | பூங்குடி | | 40 | 5 | | | | 40½ | | | 85½ |
| 62 | பூலாங்குறிச்சி | 5 | 17 | 5 | 23 | | 52 | | 28 | | 130 |
| 63 | பொன்னமராவதி | | | 4 | | | | | | | 4 |
| 64 | மகிபாலன்பட்டி | | | 39 | | | | 4 | 33 | | 76 |
| 65 | மாநகரி | 1½ | 18 | 5 | | | | 6½ | 18 | | 49 |
| 66 | மிதிலைப்பட்டி | 23 | | 42 | 7 | | 19 | 31½ | | | 122½ |
| 67 | ஆ. முத்துப்பட்டினம் | | | 19 | | | 6 | 54½ | | | 79½ |
| 68 | மேலைச்சிவபுரி | 5 | 2 | 21 | | 61 | 77 | | 51 | | 217 |
| 69 | ராங்கியம் | 26 | 50 | 48 | | 26 | | | 2 | | 152 |
| 70 | ராயவரம் | 21 | | 92 | | | 9 | 127½ | 127 | | 376½ |
| 71 | கொ. லெட்சுமிபுரம் | | | | | | 2 | 67½ | | | 69½ |
| 72 | கெ. லெட்சுமிபுரம் | | 40 | | | | | 8 | 15 | | 63 |
| 73 | வலையபட்டி | 10 | 20 | 36 | | 63 | 152 | 170 | 145 | | 596 |
| 74 | விராமதி | | | 64 | | | | | 7 | | 71 |
| 75 | விரையாச்சிலை | | 40 | 26 | 5 | | | 12½ | 72 | | 155½ |
| 76 | வெற்றியூர் | | | 7 | | | 1 | 44½ | 11 | | 63½ |
| 77 | வேகுப்பட்டி | | | 45 | 52 | | 65 | 6 | | | 168 |
| 78 | வேந்தன்பட்டி | 27 | 50 | 45 | | 40 | | 102 | 26 | | 290 |
| | வீரசேகரபுரம் | | | | | | 8 | 51 | | | 59 |
| | தேனிபட்டி | 12 | | | | | | | | | 12 |
| | மூறையூர் | | | | | | 26 | 36 | | | 62 |
| | வேங்காவயல் | | | | | | | 2 | | | 2 |
| | மொத்தம் | 1289 | 1450 | 2997 | 643 | 752 | 1714 | 3567 | 2742 | 22 | 15176 |

குறிப்பு: காரைக்குடி முத்துப்பட்டினம் சா. சொ. சுப்பிரமணியஞ் செட்டியாரால் சுமார் ஒரு லட்ச ரூபாய் (1,00,000) செலவில் கட்டிட முதலியன கட்டப் பெற்றும், மூலதனம், ஒரு லட்ச ரூபாய் வைத்தும் 'குரு குலம்' என்ற பெயரில் ஒரு நடுநிலைப்பள்ளி நிறுவப் பெற்றுளது.

காரைக்குடி, சொ. முருகப்பாவால் தம்மாலும், நகரத்தார் உதவி பெற்றும் ரூபாய் எழுபத்தையாயிரம் (75,000) செலவில் மகளிர் இல்லமும், பெண் பாடசாலையும் பிரமாதி௵ ஆவணி௴ 14-ம் தேதி (30-8-39)யில் நிறுவப் பெற்றுள்ளன. மாண்டிசோரி பாடசாலை ஒன்றும் விக்கிரம ௵ தை ௴ 6-ம் தேதி (16-1-41)யில் அமைக்கப் பெற்றுள்ளது.

## 2. அரண்மனைச் சிறுவயல்

(இராமநாதபுரம் மாவட்டம்)

புள்ளிகள்

| | | |
|---|---|---|
| இளையாத்தன்குடிக் கோவில் | ... | 14 |
| சூரைக்குடிக் கோவில் | ... | 41 |
| நேமம் கோவில் | ... | 3 |
| மாற்றூர்க் கோவில் | ... | 25½ |
| வைரவன் கோவில் | ... | 9 |
| | ஆகப்புள்ளிகள் | 92½ |

இவ்வூர் நகரத்தார்கள் பொதுவில், ரூபாய் ஏழாயிரம் (7,000) செலவில் சிவாலயத்திருப்பணியும், ரூபாய் ஐயாயிரம் (5,000) செலவில் பெருமாள் கோவில் திருப்பணியுஞ் செய்யப் பெற்றுள்ளன.

| | |
|---|---|
| சுவாமி பெயர் | மும்முடியீசர் |
| அம்மை பெயர் | கருணை நோக்கம்மை |
| பெருமாள் பெயர் | பெரிய பெருமாள் |

குறிப்பு :—தெ. வ. தெ. தேவராசன் செட்டியாரால் திரு நந்தனவனமும், தெ. பெரி. பெரியண்ணன் செட்டியாரால் பசுமடமும் அமைக்கப் பெற்றுள்ளன.

## 3. அரிமளம்

(திருச்சிராப்பள்ளி மாவட்டம்)

புள்ளிகள்

| | | |
|---|---|---|
| இரணியூர்க் கோவில் | ... | 21½ |
| இலுப்பைக்குடிக் கோவில் | ... | 4 |
| இளையாத்தன்குடிக் கோவில் | ... | 24 |
| நேமம் கோவில் | ... | 45 |
| பிள்ளையார்பட்டிக் கோவில் | ... | 72 |
| மாற்றூர்க் கோவில் | ... | 117 |
| வைரவன் கோவில் | ... | 89 |
| | ஆகப்புள்ளிகள் | 372½ |

இவ்வூர் நகரத்தார்கள், குட்டையன் செட்டியார் குடும்பத்தார்களிடம் கோவிலுக்குப் போதுமான இடம் வாங்கி, நகரப் பொதுவில் ரூபாய் ஐந்து லட்சம் செலவில் (5,00,000) திருப்பணி செய்து, பிரமோதூத வருடம் (1870) முதற் கும்பாபிடேகமும், விசுவாவசு வைகாசி 30-ம் தேதி (12-6-1903) இரண்டாங் கும்பாபிடேகமும், தாரண சித்திரை 22-ம் தேதி மூன்றாங் கும்பாபிடேகமுஞ் செய்துள்ளனர்.

சுவாமி பெயர் சுந்தரேசர்
அம்மை பெயர் மீனாட்சியம்மை

குறிப்பு: 'பெரிய பொற்குடையான்' என்ற ஊருணி காடப்ப செட்டியார் சடையன் செட்டியார் குடும்பத்தார்களால் ரூபாய் முப்பத்தையாயிரம் (35,000) செலவு செய்து கட்டப் பெற்றும், 'சிறிய பொற்குடையான்' என்ற ஊருணி நேமம் கோவிலாரால் ரூபாய் இருபதினாயிரம் (20,000) செலவு செய்து கட்டப் பெற்றும் திரு நந்தனவனம், மடங்கள், பெருமாள் கோவில், முருகன் கோவில், வேதபாடசாலை, சத்திரம் முதலியன பலரால் ஒரு லட்ச ரூபாய் (1,00,000) செலவில் நிறுவப் பெற்றுமுள்ளன.

ராம. குப. பெரி. இராமநாதன் செட்டியார், பெரிய கருப்பன் செட்டியார், ந. மு. நா. செல்லப்ப செட்டியார் இவர்கள் மூவரும் சேர்ந்து ரூபாய் ஐம்பதினாயிரம் (50,000) செலவில் உயர் நிலைப்பள்ளி ஒன்று 23-1-1941-ல் நிறுவி, அதனை ஜில்லா போர்டு வசம் ஒப்புவித்திருக்கின்றனர்.

## 4. அரியக்குடி

(இராமநாதபுரம் மாவட்டம்)

புள்ளிகள்

| | | |
|---|---|---|
| இளையாத்தன்குடிக் கோவில் | ... | 18 |
| வைரவன் கோவில் | ... | 71 |
| | ஆகப்புள்ளிகள் | 89 |

இவ்வூர் நகரத்தார்கள் பொதுவில், ரூபாய் முப்பதினாயிரம் (30,000) செலவிட்டு, சிவன் கோவில் திருப்பணியும்,

ரக்தாக்ஷி ஆவணி 31-ம் தேதி (15-9-1924)யில் கும்பாபி டேகமும் செய்யப் பெற்றன.

சின்னச் சேவுகன் செட்டியார், திருமலை வேங்கடேசர் திருவருளால் திருவரங்கத்திலிருந்து சீனிவாசப் பெருமாள் உற்சவமூர்த்தியைக் கொணர்ந்து, நகரத்தார் பலரால் சந்நிதிகளும், கோபுரங்களும் ரூபாய் நான்கு லட்சம் (4,00,000) செலவில் திருப்பணி செய்யப் பெற்று வெகுதானிய வைகாசி 28-ம் தேதி (10-6-1818)-யில் முதற் கும்பாபிடேகமும், பின் கானாடுகாத்தான், க. வெ. சிதம்பரஞ் செட்டியார் முயற்சியால் உட்பிரகாரமும், மண்டபமும், வெளித் திருமதிலும், பெரிய இராசகோபுரமும், ரூபாய் ஐந்து லட்சம் (50,0,000) செலவில் திருப்பணி செய்யப் பெற்று, சுபகிருது சித்திரை 9-ம் தேதி (21-4-1902)-ல் இரண்டாங் கும்பாபிடேகமுஞ் செய்யப் பெற்றுள்ளன.

பெருமாள் கோவிலுக்கு நகரத்தார் பலரால் ரூபாய் ஒரு லட்சத்து முப்பத்திராயிரம் (1,32,000) செலவில் பல வாகனங்களும், ரூபாய் ஒரு லட்சத்து நாற்பத்திராயிரம் (1,42,000) செலவில் திருவாபரணங்களும் செய்யப் பெற்றுள்ளன. உள்ளூர் வெளியூர் நகரத்தார்களால் கோவிலுக்கென வாங்கிவிடப்பெற்ற நிலங்கள், ரூபாய் இரண்டு லட்சத்து எண்பத்தொன்பதாயிரம் (2,89,000) மதிப்புடையன.

| | |
|---|---|
| சுவாமி பெயர் | இரத்தினபுரீசர் |
| அம்மை பெயர் | சுந்தரபரமேச்சுவரி |
| பெருமாள் பெயர் | சீனிவாசப் பெருமாள் |

குறிப்பு: அழ. கி. முரு. குடும்பத்தாரால், திருக்குளம், பிள்ளையார் கோவில், ரூபாய் முப்பதினாயிரம் (30,000)

செலவிலும், திருநந்தனவனம், பல நகரத்தார்களால் ரூபாய் பதினையாயிரத்தைந்நூறு (15,500) செலவிலும், நிறுவப் பெற்றுள்ளன.

## 5. அலவாக் கோட்டை

(இராமநாதபுரம் மாவட்டம்)

புள்ளிகள்

| | | |
|---|---|---|
| இலுப்பைக்குடிக் கோவில் | ... | 45 |
| இளையாத்தன்குடிக் கோவில் | ... | 1 |
| பிள்ளையார்பட்டிக் கோவில் | ... | 4 |
| மாற்றூர்க் கோவில் | ... | 87½ |
| வைரவன் கோவில் | ... | 11 |
| ஆகப்புள்ளிகள் | | 148½ |

சி. அரு. சின்னன் செட்டியாரால் ரூபாய் நாற்பத்தையாயிரம் (45,000) செலவில், சிவன் கோவில் திருப்பணி செய்யப் பெற்று, ரக்தாக்ஷி ஆவணி 20-ம் தேதி (4-9-1924)ல் கும்பாபிடேகம் நிறைவெய்தியது.

பி. நா. குடும்பத்தினர் ரூபாய் ஒரு லட்சத்துப் பதினயிரம் (1,10,000) செலவிட்டு, சீனிவாசப் பெருமாள் கோவில் திருப்பணியும், கீலக தை 19-ம் தேதி (31-9-1909)-ல் முதற் கும்பாபிடேகமும் விக்கிரம தை 27-ம் தேதி (9-2-1941)ல் இரண்டாவது கும்பாபிடேகமும் செய்துள்ளனர்.

| | |
|---|---|
| சுவாமி பெயர் | சொக்கலிங்கமூர்த்தி |
| அம்மை பெயர் | மீனுட்சியம்மை |
| பெருமாள் பெயர் | சீனிவாசப் பெருமாள் |

குறிப்பு : நகரத்தாருட் சிலரால், பிள்ளையார் கோவில், முருகன் கோவில், திருநந்தனவனம் ரூபாய் இருபத்து நான்காயிரம் (24,000) செலவில் கிறுவப்பெற்றுள்ளன.

## 6. க. அழகாபுரி

(இராமநாதபுரம் மாவட்டம்)

புள்ளிகள்

| | | |
|---|---|---|
| இரணியூர்க் கோவில் | ... | 19 |
| இளையாத்தன்குடிக் கோவில் | ... | 30 |
| மாற்றூர்க் கோவில் | ... | 1½ |
| வைரவன் கோவில் | ... | 14 |
| ஆகப்புள்ளிகள் | | 64½ |

காலஞ்சென்ற அள. அரு. அழகப்ப செட்டியாரால் ரூபாய் ஐம்பதினாயிரம் (50,000) செலவில் கோவில் திருப்பணி தொடங்கப் பெற்றுளது.

## 7. கொ. அழகாபுரி

(இராமநாதபுரம் மாவட்டம்)

புள்ளிகள்

| | | |
|---|---|---|
| இளையாத்தன்குடிக் கோவில் | ... | 28 |

இவ்வூர் நகரத்தார்கள் பொதுவில், ரூபாய் நாற்பத்தையாயிரம் (45,000) செலவில் விநாயகர் கோவில் திருப்பணியும், பிரபவ வைகாசி 27-ம் தேதி (9-6-1927) ல் கும்பாபிடேகமும் செய்யப் பெற்றன.

## 8. ஆத்தன்குடி

(இராமநாதபுரம் மாவட்டம்)

புள்ளிகள்

| | | |
|---|---|---|
| இளையாத்தன்குடிக் கோவில் | ... | 29 |
| பிள்ளையார்பட்டிக் கோவில் | ... | 43 |
| மாற்றூர்க் கோவில் | ... | 66 |
| வைரவன் கோவில் | ... | 77 |
| | ஆகப்புள்ளிகள் | 215 |

இவ்வூர் நகரத்தார்கள் பொதுவில், ரூபாய் பத்து லட்சம் (10,00,000) செலவில் சிவாலயத் திருப்பணியும், விபவ சித்திரை 14-ம் தேதி (26-4-1928)யில் கும்பாபிடேகமும், ரூபாய் எழுபதினாயிரம் (70,000) செலவில் ராசகோபுரத் திருப்பணியும், ஸ்ரீமுக வைகாசி 23-ம் தேதி (5-5-1933)யில் கும்பாபிடேகமும் செய்யப் பெற்றன. இரு கும்பாபிடேகச் செலவு ரூபாய் எண்பத்தையாயிரம் (85,000).

சுவாமி பெயர் சுந்தரேசுவரர்
அம்மை பெயர் மீனாட்சியம்மை

ராம. கா. அரு. மீனாட்சியாச்சி, ரூபாய் பதினையாயிரம் (15,000) செலவிட்டுத் தரும வைத்தியசாலை கட்டி ஆண்டு ஒன்றுக்கு ரூபாய் மூவாயிரம் (3,000) செலவு செய்து 23-10-1942 முதல் நடத்தி வருகின்றனர்.

குறிப்பு: நகரத்தார் பொதுவில் சுவாமி சந்நிதித் திருக்குளம், வெளிப் பிள்ளையார் கோவில் ரூபாய் தொண்ணூறாயிரம் (90,000) செலவில் அமைக்கப் பெற்றுள்

ளன. திருவாபரணம், வாகனம், வெள்ளித் தேர் முதலியன ரூபாய் ஒன்றரை லட்சம் (1,50,000) செலவில் பலராற் செய்யப் பெற்றுள்ளன.

## 9. ஆத்திக்காடு தெற்கூர்

(இராமநாதபுரம் மாவட்டம்)

புள்ளிகள்

| | | |
|---|---|---|
| இரணியூர்க் கோவில் | ... | $4\frac{1}{2}$ |
| இளையாத்தன்குடிக் கோவில் | ... | 31 |
| மாற்றூர்க் கோவில் | ... | $92\frac{1}{2}$ |
| வைரவன் கோவில் | ... | 12 |
| ஆகப் புள்ளிகள் | | 140 |

இவ்வூர் நகரத்தார்கள் பொதுவில், ரூபாய் மூன்று லட்சம் (3,00,000) செலவில் சிவாலயத் திருப்பணியும், விக்ரம தை 28-ம் தேதி (10-2-41) கும்பாபிடேகமுஞ் செய்யப் பெற்றன.

சுவாமி பெயர் சுந்தரேசுவரர்
அம்மை பெயர் மீனாட்சியம்மை

கரு. முத்து. தியாகராஜன் செட்டியாரால், சுமார் லட்ச ரூபாய் (1,00,000) செலவிடப் பெற்று, 50 ஏக்கர் வரை மனையிடம் வாங்கப் பெற்று 'ஸ்ரீ விசாலாட்சி கலாசாலை'க் கட்டிட வேலை தொடங்கப் பெற்றுளது. ஷை உயர்நிலைப்பள்ளி 1948-ம் ஆண்டிலிருந்து நடந்து வருகிறது. 1906 முதல், கரு. முத்து. குடும்பத்தினரால் தொடக்கப் பள்ளியும் அஞ்சல் நிலையமும் நடத்துவதற்காக ரூபாய் பதினாயிரம் (10,000) செலவில் கட்டிடங்

கள் கட்டி அரசாங்கத்தில் ஒப்புவிக்கப்பெற்று நடைபெற்று வருகின்றன.

குறிப்பு: நா. பழ. குடும்பத்தாரால் ரூபாய் பதினையாயிரம் (15,000) செலவில் ஊருணிகளும், சொ. ராம. கரு. முத்தையா செட்டியாரால் ரூபாய் நான்காயிரம் (4,000) செலவில் பிள்ளையார் கோவிலும் அமைக்கப் பெற்றுள்ளன.

## 10. ஆவினிப்பட்டி

(இராமநாதபுரம் மாவட்டம்)

புள்ளிகள்

| | | |
|---|---|---|
| இளையாத்தன்குடிக் கோவில் | ... | 38 |
| சூரைக்குடிக் கோவில் | ... | 4 |
| பிள்ளையார்பட்டிக் கோவில் | ... | 4 |
| மாற்றூர்க் கோவில் | ... | 40 |
| வைரவன் கோவில் | ... | 15 |
| ஆகப் புள்ளிகள் | | 101 |

இவ்வூர் நகரப் பொதுவில், சிவாலயத்துக்கு பாலஸ்தாபனம் செய்யச் செலவு ரூபாய் (15,000) பதினையாயிரமாயிற்று. முன் கும்பாபிடேகம் செய்து 40 ஆண்டுகளிருக்கலாம்.

சுவாமி பெயர் சுந்தரேசுவரர்
அம்மை பெயர் மீனுட்சியம்மை

பழ. அ. அண்ணுமலைச் செட்டியார் குடும்பத்தாரால், ரூபாய் பதினையாயிரம் (15,000) செலவு செய்து விவேகா

னந்தர் கல்விக் கழகக் கட்டிடம் முதலியன கட்டப்பெற்று, அரசாங்கத்தில் ஒப்புவிக்கப்பெற்று, 1930-ம் ஆண்டு முதல் ஷையார் மேற்பார்வையில் நடைபெற்று வருகிறது.

பெ. பெரி. இலக்குமணன் செட்டியாரால் ரூபாய் பதினுயிரம் (10,000) செலவில் விசாலாட்சி தொடக்கப் பள்ளி 1931-ல் நிறுவப்பெற்று, அவர் செலவிலேயே நடந்து வருகிறது.

குறிப்பு: நகரப் பொதுவிலும், தனித்துச் சிலரும், ரூபாய் நாற்பதினுயிரம் (40,000) செலவிட்டு, திருநந்தன வனம், பசுமடம், ஊருணி நிறுவியுள்ளனர்.

## 11. உ. சிறுவயல்

### (இராமநாதபுரம் மாவட்டம்)

புள்ளிகள்

| | | |
|---|---|---|
| இலுப்பைக்குடிக் கோவில் | ... | 40 |
| இளையாத்தன்குடிக் கோவில் | ... | 46 |
| மாற்றூர்க் கோவில் | ... | 114 |
| வைரவன் கோவில் | ... | 64 |
| ஆகப் புள்ளிகள் | | 264 |

சா. ராம. பழநியப்பச் செட்டியார் குடும்பத்தினரால் ரூபாய் ஒரு லட்சத்தைம்பதினுயிரம் (1,50,000) செலவில், சிவாலயத் திருப்பணியும், துன்மதி வைகாசி 5-ம் தேதி (16-5-1861), அக்ஷய ஞு (1867), துன்மதி ஞு (1921), அக்ஷய ஞு ஆனி மீ 14-ம் தேதி (28-6-1926) ஆக நான்கு கும்பாபிடேகங்களும் செய்யப்பெற்றன.

சுவாமி பெயர் ஐராவதீச்சுரர்
அம்மை பெயர் சவுந்தர நாயகி

இவ்வூர் நகரப் பொதுவில் ரூபாய் ஐம்பதாயிரம் (50,000) செலவில் பொன்னழகியம்மை கோவில் திருப்பணியும், 1820, பரீதாபி (1913), ஸ்ரீமுக (1934)-ல் மூன்று கும்பாபிடேகங்களும் செய்யப்பெற்றன.

நகரப் பொதுவில் ரூபாய் இருபதினாயிரம் (20,000) செலவில், ஹையர் எலிமெண்டரி பள்ளி கட்டப்பெற்று ஜில்லா போர்டார் வசம் ஒப்புவித்து நடந்து வருகின்றது.

குறிப்பு: மெ. சு. மெ. நாராயணன் செட்டியாரால் ரூபாய் பதினையாயிரம் (15,000) செலவில் பசுமடமும், இலுப்பைக்குடிக் கோவிலாரால் ரூபாய் இருபத்தையாயிரம் (25,000) செலவில் சிவாலயச் சந்நிதித் திருக்குளமும், பெரியண்ணன் செட்டியாரால் ரூபாய் பன்னீராயிரம் (12,000) செலவில் பொன்னழகியம்மை கோவில் சந்நிதித் திருக்குளமும், நல்லழகன் செட்டியாரால் ரூபாய் பதினாயிரம் (10,000) செலவில் ஐயனார் கோவிலும் அமைக்கப்பெற்றுள்ளன.

## 12. உலகன்பட்டி

(இராமநாதபுரம் மாவட்டம்)

புள்ளிகள்

| | | |
|---|---|---|
| இரணியூர்க் கோவில் | ... | 3 |
| இளையாத்தன்குடிக் கோவில் | ... | 34 |
| நேமம் கோவில் | ... | 14 |
| பிள்ளையார்பட்டிக் கோவில் | ... | 8 |
| மாற்றூர்க் கோவில் | ... | 18 |
| வைரவன் கோவில் | ... | 2 |
| ஆகப் புள்ளிகள் | | 79 |

இவ்வூர் நகரத்தார்கள் பொதுவில், ரூபாய் தொண்ணூறாயிரம் (90,000) செலவில், சிவாலயத் திருப்பணியும், விபவ தை 4-ம் தேதி (16-1-1929) கும்பாபிடேகமும் செய்யப்பெற்றுள்ளன.

சுவாமி பெயர் உலகநாதர்
அம்மை பெயர் உலகநாயகி

குறிப்பு: பழ. சிவ. சிவராமன் செட்டியாரால், ரூபாய் பன்னீராயிரம் (12,000) செலவில் திருநந்தனவனமும், பழ. கரு. நா. நாகப்ப செட்டியாரால் ரூபாய் பதினாயிரம் (10,000) செலவில் பசுமடமும், நகரத்தார்களாலும், கரு. பழ. கரு. குடும்பத்தினராலும் ரூபாய் பதினான்காயிரத் தைந்நூறு (14,500) செலவில் ஞானியார் மடத்தில் முருகன் ஆலயமும், திருக்குளமும் அமைக்கப் பெற்றுள்ளன. நகரத்தாருட் சிலரால் ரூபாய் எண்ணாயிரத்தைந்நூறு (8,500) செலவில் வேறு இரண்டு திருக்குளங்கள் அமைக்கப் பெற்றுள்ளன.

## 13. ஒக்கூர்

(இராமநாதபுரம் மாவட்டம்)

புள்ளிகள்

| | | |
|---|---|---|
| இலுப்பைக்குடிக் கோவில் | ... | 45 |
| இளையாத்தன்குடிக் கோவில் | ... | 18 |
| பிள்ளையார்பட்டிக் கோவில் | ... | 1 |
| வைரவன் கோவில் | ... | 20 |
| ஆகப் புள்ளிகள் | | 84 |

இவ்வூர் சி. கரு. சி., சி. கரு. ஆ. இவ்விரண்டு குடும்பத்தினரும், சோழபுரத்திலும், காளையார் கோவிலிலும், பாதாளேசுவரத்திலும், ஸ்ரீவில்லிபுத்தூரிலும் லட்சக் கணக்கில் திருப்பணி செய்திருத்தலால் இவ்வூரில் வேறு சிவாலயம் நிறுவப்படவில்லை.

சி. கரு. சி. ஆ., வீர. ராம., பி. சு. ஆத., ஆகிய இம்மூவரால் ரூபாய் மூவாயிரம் (3,000) செலவில் பிள்ளையார் கோவிலும், சி. கரு. சி. லெ. வால் ரூபாய் ஐயாயிரம் (5,000) செலவில் ஊருணியும் அமைக்கப்பெற்றுள்ளன.

## *14.* கடியாபட்டி (இராமச்சந்திரபுரம்)

(திருச்சிராப்பள்ளி மாவட்டம்)

புள்ளிகள்

| | | |
|---|---|---|
| இரணியூர்க் கோவில் | ... | 104½ |
| இலுப்பைக்குடிக் கோவில் | ... | 8 |
| இளையாத்தன்குடிக் கோவில் | ... | 73 |
| பிள்ளையார்பட்டிக் கோவில் | ... | 3 |
| மாற்றூர்க் கோவில் | ... | 18½ |
| வைரவன் கோவில் | ... | 130 |
| ஆகப் புள்ளிகள் | | 337 |

இவ்வூர் நகரத்தார்கள் பொதுவில், ரூபாய் நான்கு லட்சம் (4,00,000) செலவிட்டு, சிவாலயத் திருப்பணி செய்து, வெள்ளி வாகனங்கள், நவரத்தின ஆபரணங்கள், செய்து வைத்து, விசய ஆவணி 3-ம் தேதி (17-8-1893)-யில் கும்பாபிடேகம் செய்யப்பெற்றது.

சுவாமி பெயர் பூமீசுவரர்
அம்மை பெயர் பிரமவித்யாநாயகி

சொ. தீ. நாகப்ப செட்டியாரால் ஒரு லட்ச ரூபாய் (1,00,000) செலவில் 1919-ம் வருடம் பூமீசுவரர் உயர் நிலைப்பள்ளி நிறுவப்பெற்றுளது.

சொ. ராம. இராமசாமிச் செட்டியாரால் ரூபாய் இருபத்தையாயிரம் (25,000) செலவில் வைத்தியசாலை கட்டிக் கொடுக்கப்பெற்று, 1915-ம் ஆண்டு அரசாங்கத்தில் ஒப்புவிக்கப்பெற்று நடந்து வருகின்றது.

இராமச்சந்திரபுரத்துக்கும் ராயபுரத்துக்கும் நடுவே 'உமையாள்புரம்' என்ற ஊரில் சாலைப்பாலமும் சிவன் கோவிலும் ரூபாய் இரண்டு லட்சம் (2,00,000) செலவில், தீ. நா. முத்தையா செட்டியாரால் அமைக்கப்பெற்றன. சுக்ல ஆண்டு தை மாதம் அக்கோவிற் கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

குறிப்பு: வெ. மு. குடும்பத்தாரால் ரூபாய் ஒரு லட்சம் (1,00,000) செலவில் ஐயனார் கோவில் திருப்பணியும், செ. ராம. இராமசாமிச் செட்டியாராலும், நகரப் பொதுநிதியிலிருந்தும் ரூபாய் இருபதினாயிரம் (20,000) செலவில் மாரியம்மை கோவில் திருப்பணியும், கொத்தமங்கலம் ராம. அ. பொதுக்குடும்பத்தாரால் ரூபாய் முப்பதினாயிரம் (30,000) செலவில் வெள்ளைக்கல் திருக்குளமும், நகரத்தார்களுட் சிலரால், சுமார் ரூபாய் இரண்டு லட்சம் (2,00,000) செலவில், திருநந்தனவனம், பாடசாலை, சத்திரம், ஊருணிகளும் நிறுவப் பெற்றுள்ளன.

## 15. கண்டமாணிக்கம்

(இராமநாதபுரம் மாவட்டம்)

புள்ளிகள்

| | | |
|---|---|---|
| இலுப்பைக்குடிக் கோவில் | ... | 40 |
| இளையாத்தன்குடிக் கோவில் | ... | 25 |
| சூரைக்குடிக் கோவில் | ... | 11 |
| பிள்ளையார்பட்டிக் கோவில் | ... | 25 |
| மாற்றூர்க் கோவில் | ... | 49 |
| வைரவன் கோவில் | ... | 76 |
| ஆகப்புள்ளிகள் | | 226 |

இவ்வூர் நகரத்தார்கள் பொதுவில், ரூபாய் ஐம்பதினுயிரம் (50,000) செலவில், சிவாலயத் திருப்பணி செய்யப் பெற்றுள்ளது.

சுவாமி பெயர் கைலாசநாதர்
அம்மை பெயர் ஏலவார்குழலி

பொதுவில் ரூபாய் எழுபத்தையாயிரம் (75,000) செலவில், மாணிக்க நாச்சியம்மை கோவில் திருப்பணி செய்யப் பெற்றுளது.

பெரி. பெரி. சுப. நாராயணன் செட்டியார் ரூபாய் எழுபதினுயிரம் (70,000) செலவில் தண்டாயுதபாணி ஹையர் எலிமெண்டரி பள்ளி கட்டி 15-11-37 முதல் அரசாங்க உதவி பெற்று நடத்தி வருகிறுர்.

முரு. அரு. சுப. சுப்பிரமணியஞ் செட்டியார், ஒரு லட்ச (1,00,000) ரூபாய் செலவில் 'சுப்பிரமணிய வைத்திய

சாலை' நிறுவி, ஆண்டு ஒன்றுக்கு ரூபாய் ஆறுயிரம் (6,000) செலவு செய்து நடத்தி வருகின்றார்.

என். பி. எஸ். பிச்சகுட்டி செட்டியார் 9-8-40-ல் ரூபாய் ஐம்பத்தையாயிரம் (55,000) செலவில் "மெய்யம்மையாச்சி பிச்சகுட்டி வைத்தியசாலை" கட்டிமுடித்து, ரூபாய் முப்பதினாயிரம் (30,000) வைப்புத்தொகையளித்து, அரசியலுதவிபெற்று நடத்தி வருகின்றார்.

குறிப்பு:—பழ. சுப. குடும்பத்தார் ரூபாய் பதினாயிரம் (10,000) மதிப்பில் மாணிக்க நாச்சியம்மைக்குத் தங்க அங்கி செய்து வைத்துள்ளனர். நகரத்தார்களுட் சிலரால், ரூபாய் ஒரு லட்சம் (1,00,000) செலவில் பிள்ளையார் கோவில், மடம், குளம், திருநந்தனவனம், அன்னசத்திரம் முதலியவை நிறுவப் பெற்றுள்ளன. பெ. ஆத. ஆதப்பசெட்டியார் ரூபாய் இருபதினாயிரம் மதிப்பில் (20,000) சுவாமிக்கும் அம்மைக்கும் தங்க அங்கி செய்து வைத்திருக்கின்றார்.

## 16. கண்டவராயன்பட்டி

(இராமநாதபுரம் மாவட்டம்)

புள்ளிகள்

| | | |
|---|---|---|
| இளையாத்தன்குடிக் கோவில் | ... | 135 |
| பிள்ளையார்பட்டிக் கோவில் | ... | 57 |
| மாற்றூர்க் கோவில் | ... | 38 |
| வைரவன் கோவில் | ... | 33 |
| ஆகப்புள்ளிகள் | | 263 |

நகரத்தார் பொதுவில் ரூபாய் பதினாயிரம் (10,000) செலவில், இவ்வூர்ச் சிவாலயத் திருப்பணி செய்யப்

பெற்று, சோபகிருது வருடம் (1904) கும்பாபிடேகம் நடைபெற்றது.

சுவாமி பெயர் சொக்கலிங்கமூர்த்தி
அம்மை பெயர் மீனுட்சியம்மை

சிவாலயத்துக்கு வடபுறம் உள்ள திருக்குளம், பழ. கரு. பொதுவில், ரூபாய் முப்பதினுயிரம் (30,000) செலவில் வெள்ளைக்கல்லால் அமைக்கப் பெற்றது.

தெ. சி. நா. வால், ரூபாய் முப்பதினுயிரம் (30,000) செலவில், தண்டாயுதபாணி கோவிலும் அதைச் சார்ந்த குளமும் அமைக்கப் பெற்றன. ஆங்கீரச ஆவணி 26-ம் நாள், (10-9-1932) தண்டாயுதபாணி கோவிற் கும்பாபிடேகம் நடை பெற்றது.

வீர. கரு. கருப்பன் செட்டியாரால், ரூபாய் (5,000) ஐயாயிரம் செலவில், பிள்ளையார் கோவிலும், வடு. பெரி. ந. கரு. நல்லகருப்பன் செட்டியாரால் ரூபாய் பதினையாயிரம் (15,000) செலவில் பசுமடமும், நிறுவப் பெற்றுள்ளன.

சி. உ. ராம. இராமசாமிச் செட்டியாரால், ரூபாய் நாற்பதாயிரம் (40,000) செலவில் "ஹையர் எலிமெண்டரி பள்ளி" நிறுவப் பெற்று நடைபெற்று வருகின்றது. நல்ல கட்டிடமுண்டு.

## 17. கண்டனூர்

(இராமநாதபுரம் மாவட்டம்)

புள்ளிகள்

| | | |
|---|---|---|
| இரணியூர்க் கோவில் | ... | 29 |
| இளுப்பைக்குடிக் கோவில் | ... | 45 |

| | | |
|---|---|---|
| இளையாத்தன்குடிக் கோவில் | ... | 20 |
| சூரைக்குடிக் கோவில் | ... | 23 |
| நேமம் கோவில் | ... | 7 |
| பிள்ளையார்பட்டிக் கோவில் | ... | 49 |
| மாற்றூர்க் கோவில் | ... | 142½ |
| வைரவன் கோவில் | ... | 74 |
| ஆகப்புள்ளிகள் | | 389½ |

இவ்வூர் நகரத்தார்கள் பொதுவில், ரூபாய் எட்டு வட்சம் (8,00,000) செலவில், சிவாலயத் திருப்பணியும், கர தை 26-ம் நாள் (7-2-1892), விபவ வைகாசி 10-ம் நாள் (23-5-1928), ஸ்ரீமுக தை 16-ம் நாள் (29-1-34), பிரமாதி வைகாசி 24-ம் நாள்(7-6-1937) ஆகிய இந் நாட்களில் முறையே நான்கு கும்பாபிடேகங்களும் செய்யப் பெற்றன.

சுவாமி பெயர் சுந்தரேசுவரர்
அம்மை பெயர் மீனுட்சியம்மை

நகரத்தார் பொதுவில் செல்வநாயகியம்மை கோவில் ரூபாய் முப்பதினுயிரம் (30,000) செலவில் கருங்கல் திருப்பணி செய்து வெகுதான்ய வைகாசி 24-ம் தேதி (5-6-1878) கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

சி. நெ. வீர. குடும்பத்தாரால் ரூபாய் நான்கு லட்சம் (4,00,000) செலவில் பெருமாள் கோவில் திருப்பணி செய்யப் பெற்று வெகுதானிய வருடம் தை மாதத்தில் கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

வீ. தெ. வீரப்ப செட்டியார் ரூபாய் மூன்று லட்சம் (3,00,000) செலவில் "சிட்டாள் ஆச்சி நினைவு நிலை உயர்

தரப்பள்ளி''க் கட்டிட முதலியன கட்டி முடித்து ஷை உயர் நிலைப்பள்ளிக்கு எண்டோமெண்டு வைத்து அரசினர் உதவி பெற்றுத் தம் மேற்பார்வையில் 21-12-45-ம் தேதி முதல் நடத்தி வருகின்றார்.

அ. சி. நா. சித. சிதம்பரம் செட்டியார், சித. பழ. ராம. இராமசாமி செட்டியார், சித. அரு. சிதம்பரஞ் செட்டியார் ஆகிய மூவரும் சேர்ந்து ரூபாய் எழுபத்தை யாயிரம் (75,000) செலவில் ''ஸ்ரீ மீனாட்சி சுந்தரேசுவரர் வைத்தியசாலை''க் கட்டிடங்கள் கட்டிக் கொடுத்து ஏனைய பொருள்களும் வாங்கிக் கொடுக்க, இவ் வைத்தியசாலை செவ்வனே நடைபெற்று வருகின்றது.

குறிப்பு:—நகரத்தார்களுட் சிலரால் ரூபாய் லட்சத்துப் பதினான்காயிரம் செலவில் (1,14,000) பசுமடமும், அன்னசத்திரமும், குருபூசை மடமும், குளமும், பிள்ளையார் கோவிலும், அமைக்கப் பெற்றுள்ளன.

## 18. கருங்குளம்

(இராமநாதபுரம் மாவட்டம்)

புள்ளிகள்

| | | |
|---|---|---|
| இரணியூர்க் கோவில் | ... | 6 |
| இளையாத்தன்குடிக் கோவில் | ... | 4 |
| மாற்றூர்க் கோவில் | ... | 5 |
| வைரவன் கோவில் | ... | 9 |
| வேலன்குடிக் கோவில் | ... | 5 |
| ஆகப்புள்ளிகள் | | 29 |

இவ்வூரில் நகரத்தார் ஒரு விநாயகர் ஆலயத் திருப்பணி செய்துள்ளனர்.

இந் நகருக்குச் சற்று வடக்கே ஒரு வேலி அடைப்பில் வீற்றிருக்கும் 'பரநாச்சியம்மை'க்கு மூன்று ஆண்டுகட்கு ஒரு முறை சித்திரை மாதந்தோறும் பெருந் திருவிழா நடைபெறும். ஏராளமான திருவாபரணங்கள் உள்ளன. ஆயிரக்கணக்கான மக்கள் குழுமி வழிபடுவர். திருவாபரணங்கள் லட்ச ரூபாய் (1,00,000) மதிப்புடையன. இது நகரத்தார் மேற்பார்வையிலும் பொறுப்பிலுமிருந்து வருகின்றது.

## 19. கல்லல்

(இராமநாதபுரம் மாவட்டம்)

புள்ளிகள்

| | | |
|---|---|---|
| இளையாத்தன்குடிக் கோவில் | ... | 56 |
| சூரைக்குடிக் கோவில் | ... | 7 |
| நேமம் கோவில் | ... | 10 |
| பிள்ளையார்பட்டிக் கோவில் | ... | 7 |
| மாற்றூர்க் கோவில் | ... | 70½ |
| வைரவன் கோவில் | ... | 94 |
| ஆகப்புள்ளிகள் | | 244½ |

மிகப் பழமையான இந்நகர்ச் சிவாலயம் மெ. ராம. வெள்ளையப்பய்யாவால் ரூபாய் நாற்பதாயிரம் (40,000) செலவில் திருப்பணி செய்யப்பெற்று, ருத்திரோத்காரி வைகாசி 31-ம் தேதி (12-6-1863)யில் கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

அப்பால் அத்திருப்பணியைப் பிரித்து, மெ. ராம. வெ., ஆ. மு., கரு. பெரி., பெரி. சுப., ராம. மு. ராம. இராமன் செட்டியார் முதலியோர் ரூபாய் எட்டு லட்சம்

செலவில் (8,00,000) திருப்பணி செய்து முடித்து, நள தை 21-ம் தேதி (2-1-1917)யில் கும்பாபிடேகம் செய்தனர்.

சுவாமி பெயர் சோமசுந்தரர்
அம்மை பெயர் சவுந்தரநாயகி

ஆமு. ஆ. முரு. முருகப்ப செட்டியார், ரூபாய் முப்பத்தையாயிரம் (35,000) செலவில், "முருகப்பா உயர் நிலைப் பள்ளி" 10-7-47ல் நிறுவி, ரூபாய் முப்பத்தாறுயிரம் (36,000) எண்டோமெண்டு வைத்து, அரசியலாருதவி பெற்று நடத்தி வருகின்றார்.

ஆமு. ஆ. முரு. முருகப்ப செட்டியாரால் 4-7-49-ம் தேதி முதல் "சுப்பிரமணியன் செட்டியார் ஜில்லா போர்டு வைத்தியசாலை" ரூபாய் பதினையாயிரம் (15,000) செலவில் நிறுவப்பெற்று நடந்து வருகிறது.

பெரி. சுப. பழ. சுப்பையா செட்டியாரால் ரூபாய் ஐம்பதினாயிரம் (50,000) செலவில், அரங்கநாதர் கோவில் திருப்பணி செய்யப்பெற்றுளது.

குறிப்பு: நகரத்தார்களுட் சிலரால் ரூபாய் நாற்பதினாயிரம் (40,000) செலவில் பசுமடமும், திருநந்தனவனமும், குருபூசை மடமும், சத்திரமும் அமைக்கப்பெற்றுள்ளன.

## 20. கல்லுப்பட்டி

(இராமநாதபுரம் மாவட்டம்)

புள்ளிகள்

| | | |
|---|---|---|
| இரணியூர்க் கோவில் | ... | 1 |
| இளையாத்தன்குடிக் கோவில் | ... | 38 |

| | | |
|---|---|---|
| பிள்ளையார்பட்டிக் கோவில் | ... | 33 |
| மாற்றூர்க் கோவில் | ... | 37 |
| ஆகப்புள்ளிகள் | | 109 |

இவ்வூர் நகரத்தார்கள் பொதுவில், ரூபாய் ஐம்பதினாயிரம் (50,000) செலவில், சிவாலயத் திருப்பணியும், முருகன் கோவில் திருப்பணியும் 15 ஆண்டுகட்கு முன்னர்க் கும்பாபிடேகமும் செய்யப் பெற்றன.

சுவாமி பெயர் கைலாசநாதர்
அம்மை பெயர் நித்தியகல்யாணி

குறிப்பு: நகரத்தார்களால் ரூபாய் பதினாயிரம் (10,000) பிள்ளையார் கோவில் அமைக்கப்பெற்றுளது.

## 21. காரைக்குடி

(இராமநாதபுரம் மாவட்டம்)

புள்ளிகள்

| | | |
|---|---|---|
| இரணியூர்க் கோவில் | ... | 73 |
| இலுப்பைக்குடிக் கோவில் | ... | 15 |
| இளையாத்தன்குடிக் கோவில் | ... | 277 |
| சூரைக்குடிக் கோவில் | ... | 27 |
| நேமம் கோவில் | ... | 118 |
| பிள்ளையார்பட்டிக் கோவில் | ... | 321 |
| மாற்றூர்க் கோவில் | ... | 211½ |
| வைரவன் கோவில் | ... | 197 |
| வேலங்குடிக் கோவில் | ... | 7 |
| ஆகப் புள்ளிகள் | | 1246½ |

இவ்வூர் நகரத்தார்கள் பொதுவில், ரூபாய் ஐந்து வட்சம் (5,00,000) செலவில், சிவாலயத் திருப்பணியும், ஆங்கீரச சித்திரை 11-ம் தேதி (21-4-1872)யிலும், சுமார் இருபது ஆண்டுகட்கு முன்பும் இரு கும்பாபிடேகங்களும்செய்யப் பெற்றன. திருவாபரணம், வாகனங்கள் ரூபாய் ஒரு வட்சம் (1,00,000) மதிப்பிற் பலராற் செய்யப் பெற்றுள்ளன.

| | |
|---|---|
| சுவாமி பெயர் | சோமசுந்தரர் |
| அம்மை பெயர் | மீனாட்சியம்மை |

ராய. நாகப்ப செட்டியாரால், நாகநாதபுரம் புதூரில், நாகநாத சுவாமி, நாகநாயகியம்மை, நாகலிங்க விநாயகர், கிருஷ்ணமூர்த்திப் பெருமாள், செண்பகவல்லித் தாயார், கோவில் திருப்பணிகளும், பசுமடம், நந்தனவனம், ஊருணி, விடுதி முதலியனவும், ரூபாய் இரண்டு வட்சம் (2,00,000) செலவில் அமைக்கப் பெற்றுள்ளன. 1833ம் வருடம் நாகநாத சுவாமி கோவிலின் முதற் கும்பாபிடேகமும் சுமார் 50 ஆண்டுகட்கு முன்னர் இரண்டாங் கும்பாபிடேகமும் நிறைவேறின.

"பொய் சொல்லா மெய்யர்" என்ற ஐயனார்கோவில் திருப்பணி ரூபாய் இரண்டு வட்சம் செலவில் (2,00,000) நகரத்தார்களால் செய்யப் பெற்றுளது.

கொப்புடையம்மன் கோவில் திருப்பணி ரூபாய் ஒரு வட்சம் (1,00,000) செலவில் நகரத்தார்களால் செய்யப் பெற்றுளது.

ஆவி. பழ. சிதம்பரஞ் செட்டியாரால், நகரப் பொது இடத்தில் "மீனாட்சி சுந்தரேசுவரர் உயர்நிலைப்பள்ளி", ரூபாய் ஒரு வட்சம் செலவில் கட்டி முடிக்கப் பெற்று

அரசியலார் உதவி பெற்று 6-7-1918 முதல் நடை பெற்று வருகின்றது.

மெ. செ. மெ. மெய்யப்ப செட்டியாரால் 2-11-1917ல் ஆரம்பப் பெண் பாடசாலையாகத் தொடங்கப் பெற்றது, 1939-ம் ஆண்டு செகண்டரி பள்ளியாகி, 1942-ல் 4-வது பாரம் தொடங்கப் பெற்று, இப்பொழுது "மீனாட்சி உயர்நிலைப் பள்ளி" என்னும் பெயருடன் விளங்குகிறது. இதில் 450 பெண்கள் கல்வி பயில்கின்றனர். ஒரு லட்ச ரூபாய் (1,00,000) செலவிடப் பெற்றும், மாணவிகளுக்குச் சம்பளமில்லாமலும், புத்தகம், கைத் தொழிற்குரிய உபகரணம் இலவசமாகவே கொடுக்கப் பெற்றும், நடந்து வருகிறது. அரசியலார் உதவிபெருது இதுவரை சுமார் மூன்று லட்சம் செலவிட்டிருக்கின்முர். ஆண்டிற்கு முப்பதினுயிரம் ரூபாய் செலவாகி வருகின்றது.

மெ. செ. மெ. மெ. மெய்யப்ப செட்டியாரால் 1936-ல் "மெய்யப்பா பிரசவ ஆஸ்பத்திரி" தொடங்கப் பெற்று ரூபாய் முப்பதினுயிரம் (30,000) செலவிற் கட்டிடம் கட்டிக் கொடுக்கப் பெற்றுளது. இது வேண்டிய எல்லா வசதிகளுடன் நகர சபையின் நிர்வாகத்தில் நடைபெற்று வருகின்றது.

மெ. செ. மெ. மெ. மெய்யப்ப செட்டியாரால் ரூபாய் எண்ணுயிரம் (8,000) செலவில், பொதுமக்கள் உபயோகத்திற்காக நான்கு இடங்களில் குழாய்கள் இறக்கி, டாங்க் ஏற்படுத்தி, அதனினின்றும் 20 இடங்களில் தண்ணீர் பிடிக்கச், சகல வசதியும் செய்து, நகரசபை நிர்வாகத்தில் விடப்பெற்று நடைபெற்று வருகிறது. இது 1936-ம் வருடம் தொடங்கப் பெற்றது. ஷியார் குடும்பத்தாரால் நிறுவப்பெற்ற துவாதசி மடத்தில் 50 வருட கால

மாய் உணவளிக்கப் பெறுகின்றது. இதற்கு ஆண்டு தோறும் ரூபாய் நான்காயிரம் (4,000) செலவாகிறது.

குறிப்பு :—நகரத்தார் பலரால் ரூபாய் மூன்று லட்சம் (3,00,000) செலவில், வேதபாடசாலைகள், தேவார பாடசாலைகள், குருபூசைமடம், கண்ணன் கோவில், ஊருணிகள், பசுமடம், நந்தனவனம், பிள்ளையார் கோவில்கள் முதலியன அமைக்கப் பெற்றுள்ளன.

## 22. காளையார் மங்கலம்

(இராமநாதபுரம் மாவட்டம்)

புள்ளிகள்

| | | |
|---|---|---|
| இளையாத்தன்குடிக் கோவில் | ... | 9 |
| சூரைக்குடிக் கோவில் | ... | 37 |
| வைரவன் கோவில் | ... | 14 |
| ஆகப்புள்ளிகள் | | 60 |

இவ்வூர் நகரத்தார்கள் பொதுவில், ரூபாய் இருபதினாயிரம் (20,000) செலவிட்டு, புராதனமான சிவாலயத்திருப்பணியும், ரௌத்ரி வைகாசி 24-ம் தேதி (6—6—1920) யில் ரூபாய் ஐயாயிரம் (5,000) செலவில் கும்பாபிடேகமும் செய்யப்பெற்றன.

சுவாமி பெயர் சுந்தரேசுவரர்
அம்மை பெயர் மீனாட்சியம்மை

குறிப்பு :—நகரத்தார்களால் ரூபாய் பத்தாயிரம் (10,000) செலவில், கோவில் வீடுகளும், திருநந்தனவனமும் அமைக்கப் பெற்றுள்ளன.

## 23. காளுடிகாத்தான்
### (இராமநாதபுரம் மாவட்டம்)

புள்ளிகள்

| | | |
|---|---|---|
| இரணியூர்க் கோவில் | ... | 38 |
| இளையாத்தன்குடிக் கோவில் | ... | 68 |
| நேமம் கோவில் | ... | 36 |
| மாற்றூர்க் கோவில் | ... | 90 |
| வைரவன் கோவில் | ... | 11 |
| ஆகப்புள்ளிகள் | | 243 |

இவ்வூர் நகரத்தார்கள் பொதுவில், ரூபாய் ஐம்பதினு யிரம் (50,000) செலவிட்டு, சிதம்பரமூர்த்தி விநாயகர் கோவில் திருப்பணி செய்யப்பட்டுள்ளது.

க. வெ. ராம. வெங்கடாசலம் செட்டியார் முயற்சி யினல், பெரிய கோவிலில் உள்ள 'ஒப்பிலாம்பிகை உடனுய கைலாசநாதர்' கோவில் திருப்பணியை, காளுடு காத்தான் நேமத்தான்பட்டி நகரத்தார்கள் சேர்ந்து, ரூபாய் பத்து லட்சம் (10,00,000) செலவில் அற்புதமாகச் செய்துள்ளனர். 30-4-31ல் கும்பாபிடேகம் செய்வித் தனர்.

சா. ராம. மு. அ. அண்ணுமலைச் செட்டியாரால், ரூபாய் ஒரு லட்சம் செலவில் (1,00,000) செட்டிநாடு மீனட்சி சுந்தரேசுவரர் கோவில் திருப்பணி செய்யப் பெற்று, விகுருதி தை 29-ம் தேதி (11-2-51) கும்பாபிடே கம் நிறைவெய்தியது.

சா. ராம. மு. அ. அண்ணுமலைச் செட்டியாரால், ரூபாய் ஒரு லட்சத்து இருபத்தையாயிரம் (1,25,000)



கானடுகாத்தான் லேடி பெண்ட்லண்ட் வைத்தியசாலை.

செலவில் "லேடிபென்ட்லென்டு ஆஸ்பத்திரி" நிறுவி ஆயுதம், உபகரணம் முதலியன ரூபாய் இருபத்தையாயிரம் (25,000) செலவில் வாங்கிக் கொடுக்கப் பெற்றுளது. அது அரசியலாரிடம் ஒப்படைக்கப் பெற்று அவர் குடும்ப நிர்வாகத்தில் நடந்து வருகிறது.

சா. அ. குடும்பத்தினர், ரூபாய் ஐம்பதினுயிரம் (50,000) செலவில் ஒரு வைத்தியசாலை நிறுவி, மூலதனம் ரூபாய் ஐம்பதினுயிரம் (50,000) வைத்து, சொந்தமாக நடத்தி வந்தனர். பின்னர் ஜில்லா போர்டில் ஒப்புவித்து நடைபெற்று வருகின்றது.

## 24. கீழச்சிவற்பட்டி, பி. அளகாபுரி

(இராமநாதபுரம் மாவட்டம்)

புள்ளிகள்

| | | |
|---|---|---|
| இரணியூர்க் கோவில் | ... | 26 |
| இளையாத்தன்குடிக் கோவில் | ... | 43 |
| சூரைக்குடிக் கோவில் | ... | 121 |
| நேமம் கோவில் | ... | 17 |
| பிள்ளையார்பட்டிக் கோவில் | ... | 49 |
| மாற்றூர்க் கோவில் | ... | 197½ |
| வைரவன் கோவில் | ... | 97 |
| ஆகப்புள்ளிகள் | | 550½ |

இவ்வூர் நகரத்தார்கள் பொதுவில் ரூபாய் பத்து லட்சம் செலவிட்டு (10,00,000) சிவாலயத் திருப்பணியும், சாதாரண ஐப்பசி 8-ம் தேதி (24-10-1910) யில் கும்பாபிடேகமும் செய்யப் பெற்றன.

சுவாமி பெயர் சுந்தரேசுவரர்
அம்மை பெயர் மீனுட்சியம்மை

வெ. கரு. க. கருப்பன் செட்டியார், பலருதவி கொண்டு ரூபாய் ஒரு லட்சம் (1,00,000) செலவிட்டுக் 'கூடலழகிய பெருமாள்' கோவில் திருப்பணி செய்து, ராக்ஷஸ சித்திரை 9-ம் தேதி (21-4-1915) கும்பாபிடேகம் செய்வித்தனர்.

கீழச்சிவற்பட்டி, பி. அளகாபுரி நகரத்தார் பொதுவில் ரூபாய் அறுபதினுயிரம் (60,000) செலவிட்டு " ஸ்ரீ மீனுட்சி சுந்தரேசுவரர் கலாசாலை " தொடங்கி இருபதாண்டுகட்கு மேலாகத் தமிழ் கற்பிக்கப்பெற்று வந்தது. 1949-ஜுலை மாதம் முதல் அரசியலார் உதவிபெற்று உயர்நிலைப்பள்ளியாய்த் திகழ்கிறது.

சித. அ. அண்ணுமலைச் செட்டியார் மகள் வள்ளியம்மையாச்சியால் ரூபாய் இருபதினுயிரம் (20,000) செலவில் வைத்தியசாலைக் கட்டிடம் முதலியன கட்டப் பெற்று, ஜில்லா போர்டில் ஒப்புவிக்கப் பெற்று நடந்து வருகிறது.

நா. சொ. சொக்கலிங்கம் செட்டியாரால், ரூபாய் நாற்பதினுயிரம் (40,000) செலவில் வைத்தியசாலை பில்லமங்கலத்தில் நிறுவப்பெற்று, மேலும் ரூபாய் இரண்டு லட்சம் (2,00,000) நன்கொடை கொடுக்கப்பெற்று அரசியலார் உதவிபெற்று டிரஸ்டியார் மேற்பார்வையில் நடந்து வருகிறது.

குறிப்பு :—நகரத்தார்களுட்சிலரால், ரூபாய் எழுபத்தையாயிரம் (75,000) செலவில் குருபூசைமடமும், தேவார பாராயணமும், ரூபாய் ஒரு லட்சம் (1,00,000) செலவில் சாதுக்கள் மடமும், ரூபாய் இருபத்தையாயிரம் (25,000) செலவில் திருநந்தனவனமும், ரூபாய்

ஐம்பதாயிரம் (50,000) செலவில் பசுமடமும், சிவாலயத்திற்கு ஒரு லட்சம் (1,00,000) மதிப்புள்ள திருவாபரணம், வெள்ளித் தேர் முதலியனவும் ஏற்படுத்தப் பெற்றுள்ளன. ரூபாய் ஒரு லட்சம் (1,00,000) செலவில் இரு ஊருணிகளும் விநாயகர் கோவிலும் நிறுவப் பெற்றுள்ளன.

## 25. குருவிக்கொண்டான்பட்டி

(திருச்சிராப்பள்ளி மாவட்டம்)

புள்ளிகள்

| | | |
|---|---|---|
| இரணியூர்க் கோவில் | ... | 24 |
| இலுப்பைக்குடிக் கோவில் | ... | 2 |
| இளையாத்தன்குடிக் கோவில் | ... | 20 |
| சூரைக்குடிக் கோவில் | ... | 23 |
| பிள்ளையார்பட்டிக் கோவில் | ... | 23 |
| மாற்றூர்க் கோவில் | ... | 22½ |
| வைரவன் கோவில் | ... | 10 |
| ஆகப்புள்ளிகள் | | 124½ |

இவ்வூர் நகரத்தார்கள் பொதுவில் ரூபாய் நான்கு லட்சத்து முப்பதினாயிரம் (4,30,000) செலவிட்டு, சிவாலயத் திருப்பணியும், பிரசோற்பத்தி தை 29-ம் தேதி (11-2-1932) யில் கும்பாபிடேகமும் செய்யப் பெற்றன.

சுவாமி பெயர் சொக்கலிங்கமூர்த்தி
அம்மை பெயர் மீனாட்சியம்மை

குறிப்பு :—சித. அ. சி. சிதம்பரஞ் செட்டியாரால் திருநந்தனவனமும், நகரத்தார் பொதுவில் திருக்குளமும், தொடக்கப்பள்ளியும், அமைக்கப் பெற்றுள்ளன.

## 26. குழிபிறை

(திருச்சிராப்பள்ளி மாவட்டம்)

புள்ளிகள்

| | | |
|---|---|---|
| இரணியூர்க் கோவில் | ... | 26 |
| இலுப்பைக்குடிக் கோவில் | ... | 40 |
| இளையாத்தன்குடிக் கோவில் | ... | 104 |
| பிள்ளையார்பட்டிக் கோவில் | ... | 14 |
| மாற்றூர்க் கோவில் | ... | 124½ |
| வைரவன் கோவில் | ... | 23 |
| ஆகப்புள்ளிகள் | | 331½ |

இவ்வூர் நகரத்தார்கள் பொதுவில் ரூபாய் மூன்று லட்சம் (3,00,000) செலவிட்டுச் சிவாலயத் திருப்பணியும், விசுவாசு வைகாசி 30-ம் தேதி (12-6-1905) யில் கும்பாபி டேகமும் செய்யப்பெற்றன.

சுவாமி பெயர் சொக்கலிங்கமூர்த்தி
அம்மை பெயர் மீனாட்சியம்மை

நகரத்தார் பொதுவில் ரூபாய் பதினையாயிரம் (15,000) செலவில் "சித்திவிநாயகர் கலாசாலை" நிறுவி, எட்டாவது வகுப்புவரை பத்து வருட காலமாகக் கல்வி கற்பிக்கப் பெற்று வருகிறது.

குறிப்பு :—நகரத்தாருட் சிலரால், ரூபாய் ஒரு லட்சம் (1,00,000) செலவில், ஊருணியும், திருநந்தனவனமும், பிள்ளையார் கோவிலும், முருகன் கோவிலும் நிறுவப் பெற்றுள்ளன.

## 27. கொத்தமங்கலம்
(இராமநாதபுரம் மாவட்டம்)
புள்ளிகள்

| | | |
|---|---|---|
| இரணியூர்க் கோவில் | ... | 95 |
| இலுப்பைக்குடிக் கோவில் | ... | 6 |
| பிள்ளையார்பட்டிக் கோவில் | ... | 2 |
| மாற்றூர்க் கோவில் | ... | 55 |
| வைரவன் கோவில் | ... | 10 |
| ஆகப்புள்ளிகள் | | 168 |

இவ்வூர் நகரத்தார்கள் பொதுவில், ரூபாய் மூன்று லட்சம் (3,00,000) செலவில் மேலைச் சிவாலயத் திருப்பணியும், சௌமிய ஆவணி 14-ம் தேதி (29-8-1909) யில் முதற் கும்பாபிடேகமும், அட்சய சித்திரை 16-ம் தேதி (28-4-1926)யில் இரண்டாவது கும்பாபிடேகமும் விரோதி ஆவணி 20-ம் தேதி மூன்றுங் கும்பாபிடேகமும் செய்யப் பெற்றன.

| | |
|---|---|
| சுவாமி பெயர் | மாங்காட்டீசர் |
| அம்மை பெயர் | சவுந்தரநாயகி |

மாற்றூர் அரும்பாக்கூர் நகரத்தார் பொதுவில் ரூபாய் இரண்டு லட்சம் (2,00,000) செலவில் 'ஆவுடைநாயகி உடனுய திருவீசர்' கோவில் திருப்பணியும், பிரமோதூத ஆனி 27-ம் நாள் (11-7-30) கும்பாபிடேகமும் செய்யப் பெற்றுள்ளன.

நகரப் பொதுவில் ரூபாய் இருபத்தையாயிரம் (25,000) செலவில் உலகநாயகியம்மன் கோவில் திருப்பணி செய்யப் பெற்றுளது.

சி. அ. சு. செ. செல்லப்ப செட்டியாரால் ரூபாய் அறுபதினாயிரம் (60,000) செலவில் வாசுதேவப் பெருமாள் கோவில் கட்டப்பெற்று விய ஆனி 21-ம் நாள் கும்பாபி டேகம் நடைபெற்றது.

குறிப்பு :—நகரப் பொதுவில் ரூபாய் ஏழாயிரம் (7,000) செலவில் ஒரு தொடக்கப் பள்ளியும், பலரால் ஒரு லட்ச ரூபாய் (1,00,000) செலவில் திருநந்தனவனம், ஊருணி, மடங்கள் நிறுவப் பெற்றுள்ளன.

## 28. கொப்பனுபட்டி

(திருச்சிராப்பள்ளி மாவட்டம்)

புள்ளிகள்

| | | |
|---|---|---|
| இரணியூர்க் கோவில் | ... | 108 |
| இளையாத்தன்குடிக் கோவில் | ... | 1 |
| வைரவன் கோவில் | ... | 11 |
| ஆகப்புள்ளிகள் | | 120 |

இவ்வூர் நகரப் பொதுவில், ரூபாய் ஒரு லட்சம் (1,00,000) செலவில் கொன்றையூர் முத்துமாரியம்மை கோவில் திருப்பணியும், பவ ஆவணி 1-ம் தேதி (17-8-1934) யில் கும்பாபிடேகமும் செய்யப் பெற்றன.

1930-ம் வருடம், நகரப் பொதுவில், ரூபாய் பத்தாயிரம் (10,000) செலவில் கட்டிடங்கட்டி ஜில்லா போர்டில் ஒப்புவித்து, தொடக்கப்பள்ளி நடைபெற்று வருகிறது.

அ. மெ. மெய்யப்ப செட்டியார் தம் பொருளுடன் நகரத்தார்களின் பொருளுதவியும் பெற்று ரூபாய் ஒன்றரை லட்சம் (1,50,000) செலவில் "கலைமகள் கல்லூரி"

15-9-35ல் நிறுவியுள்ளார். பெண்களுக்கு உயர்ந்த முறையில் தமிழ்க் கல்வியும் ஓரளவு ஆங்கிலமும் கற்பித்து "கலைச்செல்வி" "கலைமணி" என்னும் பட்டங்கள் வழங்கப்பெற்று வருகின்றன.

குறிப்பு :—நகரப் பொதுவில் ரூபாய் பதினையாயிரம் (15,000) செலவில் பிள்ளையார் கோவில், ஊருணி நிறுவி, பவ ஆவணி 1-ம் தேதி (17-8-1934)யில் கும்பாபிடேகம் செய்யப்பெற்றது.

## 29. கோட்டையூர்

(இராமநாதபுரம் மாவட்டம்)

புள்ளிகள்

| | | |
|---|---|---|
| இரணியூர்க் கோவில் | ... | 51 |
| இளையாத்தன்குடிக் கோவில் | ... | 54 |
| நேமம் கோவில் | ... | 73 |
| பிள்ளையார்பட்டிக் கோவில் | ... | 11 |
| மாற்றூர்க் கோவில் | ... | 89 |
| ஆகப்புள்ளிகள் | | 278 |

இவ்வூர் நகரத்தார்கள் பொதுவில் ரூபாய் பதினெட்டு லட்சம் (18,00,000) செலவில், சிவாலயத் திருப்பணியும், பிரமோதூத ஆவணி (1870 ஜூன்) யிலும், பிரமாதி தை 8-ம் தேதி (21-1-1940) யிலும் இரு கும்பாபிடேகங்களும் செய்யப் பெற்றன.

| | |
|---|---|
| சுவாமி பெயர் | சொக்கலிங்கமூர்த்தி |
| அம்மை பெயர் | மீனாட்சியம்மை |

க. வீ. அழ. முத்தையா செட்டியாரால், ரூபாய் இருபதினயிரம் (20,000) செலவில் வைத்தியசாலை நிறுவப் பெற்று ஆண்டு ஒன்றுக்கு ரூபாய் ஆறுயிரம் (6,000) செலவில் நடைபெற்று வருகிறது.

குறிப்பு :—நகரத்தார் சிலர் ரூபாய் நான்கு லட்சம் (4,00,000) செலவில், திருநந்தனவனம், ஊருணிகள், பிள்ளையார் கோவில்கள், சத்திரம், மடம், முதலியன நிறுவியுள்ளனர்.

பார்அட்லா ராம. அழகப்ப செட்டியார் ரூபாய் இருபத்தைந்து லட்சம் (25,00,000) நன்கொடையளித்து, கட்டிடங்கள் கட்டி "அழகப்பா கல்லூரி" காரைக்குடிக்கு அணிமையில் 11-8-47ல் நிறுவியும், ரூபாய் ஐந்து லட்சம் (5,00,000) நன்கொடையளித்துக் கட்டிடங்கள் கட்டி "அழகப்பா ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி" 5-7-50ல் நிறுவியும், ரூபாய் பதினைந்து லட்சம் (15,00,000) நன்கொடை அளித்து இந்திய அரசாங்க தேசிய மின்சார ரசாயனக் கழகம் 25-7-48ல் தொடங்கியும் உள்ளார்.

## 30. கோனபட்டு

(திருச்சிராப்பள்ளி மாவட்டம்)

புள்ளிகள்

| | | |
|---|---|---|
| இரணியூர்க் கோவில் | ... | 3½ |
| இலுப்பைக்குடிக் கோவில் | ... | 110 |
| இளையாத்தன்குடிக் கோவில் | ... | 27 |
| பிள்ளையார்பட்டிக் கோவில் | ... | 87 |
| மாற்றூர்க் கோவில் | ... | 13 |
| வைரவன் கோவில் | ... | 31 |
| ஆகப்புள்ளிகள் | | 271½ |



டாக்டர் அழகப்பா கல்லூரி—கட்டிடம்,

இவ்வூர் நகரத்தார்கள் பொதுவில், தாருண ஆண்டு தை மாதம் (1887 ஜனவரி) சிவலிங்கப் பிரதிட்டை செய்து, ரூபாய் ஒரு லட்சம் (1,00,000) செலவில், ஆலயத் திருப்பணியும், சர்வதாரி வைகாசி 6-ம் தேதி (17-5-1888) யிலும், விளம்பி ஆவணி 19-ம் தேதி (2-8-1898) யிலும், நள ஆனி 27ம் தேதி (10-7-1916) யிலும், பிரஜோற்பத்தி சித்திரை 18-ம் தேதி (30-4-1931) யிலும், முறையே நான்கு கும்பாபிடேகங்களும் செய்யப் பெற்றன. பின்னர் ராஜ கோபுரம் கட்டப் பெற்று வெகுதான்ய வருடம் ஆவணி மாதத்தில் 5-வது கும்பாபிடேகம் செய்யப்பெற்றது.

| | |
|---|---|
| சுவாமி பெயர் | சுந்தரேசுவரர் |
| அம்மை பெயர் | மீனுட்சியம்மை |

"அழகப் பெருமாள்" என்பவர், 350 ஆண்டுகளுக்கு முன் சிறந்த ஊருணி வெட்டி, மேல் கரையில் கற்பக விநாயகரைப் பிரதிட்டை செய்து ஆராதித்து வந்தனர். 1854-ம் ஆண்டில் இவ்வூருணி ரூபாய் முப்பதாயிரம் (30,000) செலவில் செம்மை செய்யப்பெற்றது. இதற்கு ஐந்து பர்லாங்கு தூரத்திலிருந்து ரூபாய் இருபதினுயிரம் (20,000) செலவில் மலைச்சாரலிலிருந்து பலமான மூடு மடை கட்டியிருக்கின்றனர். அற்புதமான சிலா விக்கிரகங்கள் எண்ணற்றன மலிந்து விளங்கும் ஷை கற்பக விநாயகர் கோவில், மஹாதேவா என்ற சு. முருகப்ப செட்டியார் மேற்பார்வையில் ரூபாய் எண்பதினுயிரம் (80,000) செலவில் திருப்பணி செய்யப்பெற்று, சித்தார்த்தி வைகாசி 26-ம் தேதி (8-6-1919)யில் கும்பாபிடேகம் நடைபெற்றது.

நகரத்தார் பொதுவில், மு. மு. ப. குடும்பத்தார் மேற்பார்வையில், ரூபாய் பதினையாயிரம் (15,000) செலவில்,

கொப்புடையம்மை கோவிலும், பெரிய கறுப்பர், சின்னக் கறுப்பர் கோவில்களும், தேரும், அதற்குக் கட்டிடமும், கட்டப் பெற்றுள்ளன.

சிவா. பழனியப்ப செட்டியார் தம் குடும்பப் பொருள் ரூபாய் ஒரு லட்சமும், (1,00,000) அன்பர்களிடமிருந்து வாங்கிய ஒரு லட்சமும் (1,00,000) செலவு செய்து அடியவர்கட்கு அன்னதானம் செய்து வந்திருக்கின்றார்.

மகாதேவ முருகப்ப செட்டியார், நகரத்தார்களின் பொருளுதவி பெற்று, ரூபாய் அறுபத்தையாயிரம் (65,000) செலவில், பரீதாபி வைகாசி 28-ம் தேதி (10-6-1912)யில் கற்பகவிநாயக கலாசாலையும், ஞானசம்பந்த நற்சபையுந் தோற்றுவித்து, ஆனந்த ஆவணி 14-ம் நாள் (30-8-1914) புதிய கட்டிடத்தில் தொடங்கி நெடுங்காலம் நடத்தி வந்திருக்கின்றார். இக்கலாசாலையிற் பயின்ற பலர் தற்காலம் தமிழாசிரியர்களாகத் தொண்டாற்றி வருகின்றனர். அக் கலாசாலையில் "வாணீ மந்திர புத்தகசாலை" என்ற நூல் நிலையமும் உளது.

கற்பக விநாயக கலாசாலைக் கட்டிடத்தை, சு. மு. ராம. முரு. முருகப்ப செட்டியார் மேற்பார்வையில், நகரப் பொதுவில் ரூபாய் ஐம்பதினயிரம் (50,000) செலவில் புதுப்பித்து "சரசுவதி உயர்நிலைப் பள்ளியும் தொடக்கப் பள்ளியும்" நிறுவி நடத்தி வருகின்றார்.

கி. நா. ராம., ராம. நா. ராம., உ. அரு., ராம. மு. ராம., மு. அ. இந்த வீட்டார் ஐவரும் கூடி ரூபாய் (45,000) நாற்பத்தையாயிரம் செலவில் கட்டிடம் கட்டிச் சாதுக்களுக்குத் தினமும் காலை நேரத்தில் பழைய அமுது வழங்கி வருகின்றனர்.

குறிப்பு :—நகரத்தாருட் சிலரால் ரூபாய் ஒரு லட்சத்து அறுபதினுயிரம் (1,60,000) செலவில், முருகன் கோவில், திருநந்தனவனம், பசுமடம், ஊருணிகள், துவாதசிமடம், திருமடம், பிள்ளையார் கோவில்கள், விடுதிகள் முதலியன நிறுவப் பெற்றுள்ளன.

## 31. சக்கந்தி

### (இராமநாதபுரம் மாவட்டம்)

#### புள்ளிகள்

| | | |
|---|---|---|
| இளையாத்தன்குடிக் கோவில் | ... | 16 |

உல. க. கண. சோமசுந்தரம் செட்டியாருக்கு, தாது புரட்டாசி 19-ம் நாள் (4-10-36) நடந்த அறுபதாண்டு நிறை விழாவின் நினைவுக்குறியாக விநாயகர் ஆலயத்தைப் புதிதாகக் கல்திருப்பணி செய்தும், ரூபாய் இருபதினுயிரம் (20,000) செலவில் சிவாலயத்தைக் கட்டி முடித்தும் தாது ஐப்பசி 12-ம் நாள் (28-10-1936) கும்பாபிடேகமும் செய்யப் பெற்றது.

ஷை யார், திருவாரூர்த் தேர் புதிதாகச் செய்தற்கு முதல் முதலில் கையெழுத்திட்டு அதனுல் பெருந்தொகை சேர்ந்து, தேர் வேலை முற்றுப் பெறுதற்குக் காரணமாய் இருந்தவர் ஆவர்.

## 32. சண்முகநாதபுரம்

### (இராமநாதபுரம் மாவட்டம்)

#### புள்ளிகள்

| | | |
|---|---|---|
| இளையாத்தன்குடிக்கோவில் | ... | 106 |
| சூரைக்குடிக் கோவில் | ... | 3 |
| நேமம் கோவில் | ... | 4 |

| | | |
|---|---|---|
| பிள்ளையார்பட்டிக் கோவில் | ... | 5 |
| மாற்றூர்க் கோவில் | ... | 72½ |
| | ஆகப் புள்ளிகள் | 190½ |

இவ்வூர் நகரத்தார்கள் பொதுவில், ரூபாய் பதினாயிரம் (10,000) செலவில், சிவாலயத் திருப்பணியும், பிரமாதி வைகாசியில் (1879. மே) கும்பாபிடேகமும் செய்யப் பெற்றன.

சுவாமி பெயர் சுந்தரேசுவரர்
அம்மை பெயர் மீனாட்சியம்மை

நகரத்தார்களால் இவ்வூரிலிருந்து மேற்கே அமராவதிபுதூர் வரையிலும், கிழக்கே கண்டதேவிச் சாலை வரையிலும் ரூபாய் முப்பதினாயிரம் (30,000) செலவில் 5 கல் அளவு சாலை அமைக்கப் பெற்றுளது. 10-4-1922ல் சாலை திறக்கப் பெற்றது.

S. Rm. S. சாத்தப்ப செட்டியார், ரூபாய் முப்பதினாயிரம் (30,000) செலவில் "ஹையர் எலிமெண்டரி பள்ளி" நிறுவி, 13-11-1935 முதல் நடத்தி வருகின்றார்.

குறிப்பு :—நகரப் பொதுவில் ரூபாய் பதினாயிரம் (10,000) செலவில் வைத்திய சாலையும், ரூபாய் ஐம்பதினாயிரம் (50,000) செலவில், பிள்ளையார் கோவிலும், குளங்களும், திருநந்தனவனமும், பசுமடமும், அமைக்கப் பெற்றுள்ளன.

## 33. சிராவயல்

(இராமநாதபுரம் மாவட்டம்)

புள்ளிகள்

| | | |
|---|---|---|
| இலுப்பைக்குடிக் கோவில் | ... | 34 |
| பிள்ளையார்பட்டிக் கோவில் | ... | 16 |
| வைரவன் கோவில் | ... | 10 |
| ஆகப் புள்ளிகள் | | 60 |

க. மு. நா. மெய்யப்ப செட்டியார், பெரி. மு. முத்தையா செட்டியார் ஆகிய இருவரின் முயற்சியால், சௌமிய வைகாசி 31-ம் நாள் (13-6-1909) பாலாலயப் பிரதிட்டை செய்யப் பெற்று, பின் ரூபாய் ஐம்பதாயிரம் (50,000) செலவில் கோவில் திருப்பணியும், விரோதி கிருது தை 19-ம் நாள் (1-1-1912) கும்பாபிடேகமும் செய்யப் பெற்றன. இக்கோவில் பிரபவ ஆவணி 1-ம் தேதி (17-8-1927) முதல் நகரத்தார்களிடம் ஒப்புவிக்கப் பெற்று நடைபெற்று வருகின்றது.

சுவாமி பெயர் தியாகராஜர்
அம்மை பெயர் திரிலோகநாயகி

குறிப்பு ;—பெரி. மு. நா. வால் பசுமடமும், க. மு. நா. மெ., பெரி. மு. மு. ஆகிய இவர்களால் திருநந்தனவனமும், நகரப் பொதுவில் ரூபாய் பதினாயிரம் (10,000) செலவில் அந்தணர் உறையுளும், புராதன மடமும் அமைக்கப் பெற்றுள்ளன.

## 34. சிறுகூடற்பட்டி

(இராமநாதபுரம் மாவட்டம்)

புள்ளிகள்

| | | |
|---|---|---|
| இளையாத்தன்குடிக் கோவில் | ... | 13 |
| பிள்ளையார்பட்டிக் கோவில் | ... | 11 |
| மாற்றூர்க் கோவில் | ... | 88½ |
| வைரவன் கோவில் | ... | 46 |
| | ஆகப் புள்ளிகள் | 158½ |

இவ்வூர் நகரத்தார்கள் பொதுவில் ரூபாய் முப்பதினாயிரம் (30,000) செலவில் சிவாலயத் திருப்பணியும், ஜயவருடம் தை மாதம் (1895 ஜனவரி) கும்பாபிடேகமும் செய்யப் பெற்றன.

சுவாமி பெயர் சுந்தரேசுவரர்
அம்மை பெயர் மீனாட்சியம்மை

ஆத. கு. பழ. சுப. வால், ரூபாய் பதினையாயிரம் (15,000) செலவில் 'கலைமகள் வித்தியாசாலை' நிறுவப் பெற்று அரசினர் உதவி பெற்று நடைபெற்று வருகிறது.

குறிப்பு:—வீர. பழ. மு. முத்தையா செட்டியாரால் ரூபாய் பதினையாயிரம் (15,000) செலவில் திருநந்தனவனமும், ஆத. மு. பழ. மு. முத்தையா செட்டியாரால் ரூபாய் பதினாயிரம் (10,000) செலவில் பசுமடமும், ரூபாய் பதினாயிரம் (10,000) செலவில் துவாதசி மடமும், ரூபாய் பதினாயிரம் (10,000) செலவில் வைத்திய சாலையும், கரு. சி. பழ. பழநியப்ப செட்டியாரால், திருப்புத்தூர் புதுக்கோட்டைச் சாலையில் இருந்து

கிழக்கே இவ்வூர்வரை 4 கல் அளவு, ரூபாய் பன்னீராயிரம் (12,000) செலவில் சாலையும், ஷையாரால் ரூபாய் பதினாயிரம் (10,000) செலவில் கஞ்சி மடமும், கு. ப. அ. வால் ரூபாய் ஆறாயிரம் (6,000) செலவில் பிள்ளையார் கோவிலும், குளமும் அமைக்கப் பெற்றுள்ளன.

## 35. செம்பனூர்

(இராமநாதபுரம் மாவட்டம்)

புள்ளிகள்

நேமம் கோவில் ... 25

கு. ம. நா. நாச்சியப்ப செட்டியார், ஷையார் தம்பி சுப்பிரமணியன் செட்டியார் என்ற இருவராலும் விளம்பி வருடத்தில் (1899) திருப்பணி ஆரம்பிக்கப் பெற்று ரூபாய் மூப்பத்தையாயிரம் (35,000) செலவில் சிவாலயத் திருப்பணியும், சுபகிருது சித்திரை 15-ம் நாள் (27-4-1902) கும்பாபிடேகமும் செய்யப் பெற்றன.

| | |
|---|---|
| சுவாமி பெயர் | கண்டீசுவரர் |
| அம்மை பெயர் | நித்தியகல்யாணி |

இவ்வூர் நகரத்தாராலும், தேவகோட்டை மெ. லெ. மெ. இராமநாதன் செட்டியாராலும், பிங்கள சித்திரை (1917 எப்ரல்) யில் "சுந்தரராஜப் பெருமாள் கோவில் திருப்பணி தொடங்கப் பெற்று ரூபாய் ஐயாயிரம் (5,000) செலவில் சுற்றுத் திருமதில், கோவில் முதலியன கட்டி முடிக்கப் பெற்றுளது.

குமா. நா. சுப்பிரமணியன் செட்டியார் ரூபாய் பதினான்காயிரம் (14,000) செலவில் கலாசாலையும், சாதுக்கள் மடமும் நிறுவியுள்ளனர்.

குறிப்பு :—கும. நா. குடும்பத்தாரால் ரூபாய் ஐயாயிரம் (5,000) செலவில் திருநந்தனவனமும், ஷை குடும்பத் தாராலும், சு. சி. ராம. இராமநாதன் செட்டியாரா லும், ரூபாய் பன்னீராயிரம் (12,000) செலவில் பசு மடமும், கும. கா. குடும்பத்தாராலும், தேவ கோட்டை நா. அழ. அழகப்ப செட்டியாராலும் ரூபாய் இருபதாயிரம் (20,000) செலவில் "சேவகப் பெருமாள் ஐயனுர் கோவில்" திருப்பணியும், நகரப் பொதுவில் ரூபாய் ஐயாயிரம் (5,000) செலவில் "அக்க சாலை விநாயகர் கோவில்" திருப்பணியும், கும. நா. குடும்பத்தாரால் ரூபாய் பதினுயிரம் (10,000) செல வில் நகரமடமும், நகரத்தார்களால் ரூபாய் முப்பதா யிரம் (30,000) செலவில் நான்கு ஊருணிகளும், கும. நா. குடும்பத்தாரால், ரூபாய் பதினுயிரம் (10,000) செலவில் கோவில் அலுவலாளர்க்கு என, ஓட்டடுக் குக் கட்டிடங்களும் அமைக்கப் பெற்றுள்ளன.

## 36. செயங்கொண்டபுரம் (செக்காலை)

(இராமநாதபுரம் மாவட்டம்)

புள்ளிகள்

நேமம் கோவில் ... 27

நாட்டார் வயல் சோமசுந்தரம் செட்டியாரால் ரூபாய் இருபத்தையாயிரம் (25,000) செலவில் கல்கட்டுக் குளமும், விநாயகர் கோவிலும், விடுதியும், வாரியப்பட்டி சுப்பிரமணியன் செட்டியாரால் ரூபாய் பன்னீராயிரம் (12,000) செலவில் ஒரு குளமும், பிள்ளையார் கோவிலும் அமைக்கப் பெற்றுள்ளன.

## 37. செவ்வூர்
(இராமநாதபுரம் மாவட்டம்)

| | | |
|---|---|---|
| இரணியூர்க் கோவில் | ... | 8 |
| சூரைக்குடிக் கோவில் | ... | 80 |
| | ஆகப்புள்ளிகள் | 88 |

நகரத்தார்களாலும், செ. ராம. சொக்கலிங்கம் செட்டியாராலும், ரூபாய் ஒரு லட்சம் (1,00,000) செலவில் சிவாலயத் திருப்பணி முற்றுவிக்கப்பெற்று, ஆங்கீரச சித்திரை 9-ம் நாள் (21-4-1932) ரூபாய் பதினையாயிரம் (15,000) செலவில், நகரத்தார்களால் கும்பாபிடேகமும் செய்யப் பெற்றன.

சுவாமி பெயர் சொக்கலிங்கமூர்த்தி
அம்மை பெயர் மீனாட்சியம்மை

குறிப்பு:—பழ. முரு. முருகப்ப செட்டியாரால் ரூபாய் ஏழாயிரம் (7,000) செலவில், விநாயகர் கோவிலும், நகரத்தார்களால் ரூபாய் ஆயிரம் (1,000) செலவில் முருகன் கோவிலும், பழ. ப. பழநியப்ப செட்டியாரால் ரூபாய் இரண்டாயிரம் (2,000) செலவில் விநாயகர் கோவிலும், நகரத்தார்களால் ரூபாய் இரண்டாயிரம் (2,000) செலவில், திருநந்தனவனமும், சுமார் ரூபாய் ஐயாயிரம் (5,000) செலவில் திருக்குளம், கிணறுகள், பள்ளிக்கூடங்கள், அந்தணர் உறையுள், சாலை முதலியனவும் அமைக்கப் பெற்றுள்ளன. செ. ராம. சொ. ராம. சகோதரர்களால் ரூபாய் ஐயாயிரம் (5,000) செலவில் தொடக்கப்பள்ளி நிறுவி, ஜில்லா போர்டில் ஒப்புவிக்கப்பெற்று நடந்து வருகிறது.

## 38. சொக்கநாதபுரம்

(இராமநாதபுரம் மாவட்டம்)

புள்ளிகள்

| | | |
|---|---|---|
| இளையாத்தன்குடிக் கோவில் | ... | 29 |
| பிள்ளையார்பட்டிக் கோவில் | ... | 27 |
| மாற்றூர்க் கோவில் | ... | 54½ |
| | ஆகப்புள்ளிகள் | 110½ |

இவ்வூர் நகரத்தார்கள் பொதுவில் ரூபாய் ஒரு லட்சம் (1,00,000) செலவிட்டு, சிவாலயத்திருப்பணியும், சாதாரண ஆனி 13-ம் நாள் (26-6-1910) கும்பாபிடேகமும் செய்யப் பெற்றன.

சுவாமி பெயர் திருக்கண்டீசுவரர்
அம்மை பெயர் சிறுதேன் மொழியம்மை

## 39. சொக்கலிங்கபுரம் (மதகுபட்டி)

(இராமநாதபுரம் மாவட்டம்)

புள்ளிகள்

| | | |
|---|---|---|
| இளையாத்தன்குடிக் கோவில் | ... | 52 |
| மாற்றூர்க் கோவில் | ... | 30½ |
| வைரவன் கோவில் | ... | 11 |
| | ஆகப்புள்ளிகள் | 93½ |

இவ்வூர் நகரத்தார்கள் பொதுவில் ரூபாய் இரண்டரை வட்சம் (2,50,000) செலவிட்டு, சிவாலயத்திருப்பணி

யும், பவ தை 26-ம் நாள் (8-2-1935) கும்பாபிடேகமும் செய்யப் பெற்றன.

சுவாமி பெயர் சொக்கலிங்கமூர்த்தி
அம்மை பெயர் மீனுட்சியம்மை

## 40. சொக்கலிங்கம்புதூர் (சொக்கனேந்தல்)

(இராமநாதபுரம் மாவட்டம்)

புள்ளிகள்

| | | |
|---|---|---|
| மாற்றூர்க் கோவில் | ... | 24 |
| வைரவன் கோவில் | ... | 56 |
| | ஆகப்புள்ளிகள் | 80 |

இவ்வூர் நகரத்தார்கள் பொதுவில் ரூபாய் எழுபதிளுயிரம் (70,000) செலவில் சிவாலயத்திருப்பணியும், காளயுக்தி ஆனி 7-ம் நாள் (20-6-1918) கும்பாபிடேகமும் செய்யப் பெற்றன.

சுவாமி பெயர் சுந்தரேசுவரர்
அம்மை பெயர் மீனுட்சியம்மை

நகாத்தார்களால் ரூபாய் பதினெட்டாயிரம் (18,000) செலவில், ஊருணியும் பிள்ளையார் கோவிலும் கட்டப் பெற்று 20-6-1918-ல் கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

நகரப் பொதுவில் ரூபாய் இருபதிளுயிரம் (20,000) செலவில் "மாணிக்கவாசக வித்தியாசாலை" நிறுவப் பெற்று, 12 வருடங்களாக அரசாங்கத்தாரிடம் ஒப்புவிக்கப் பெற்று நடைபெற்று வருகின்றது.

குறிப்பு :—நகரத்தாருட் சிலரால் ரூபாய் முப்பத்தாறுயிரம் (36,000) செலவில் சத்திரம், ஊருணி, பிள்ளையார் கோவிலும், ரூபாய் பதிஞயிரம் (10,000) செலவில் பசு மடமும், ரூபாய் பதிஞேராயிரம் (11,000) செலவில் செட்டியார் ஊருணியும், பிள்ளையார் கோவிலும், சுமார் ரூபாய் பன்னீராயிரம் (12,000) செலவில் தண்ணீர்ப் பந்தரும், குளமும் அமைக்கப் பெற்றுள்ளன.

## 41. சோழபுரம்

(இராமநாதபுரம் மாவட்டம்)

புள்ளிகள்

| | | |
|---|---|---|
| பிள்ளையார்பட்டிக் கோவில் | ... | 6 |
| மாற்றூர்க் கோவில் | ... | 10½ |
| | ஆகப்புள்ளிகள் | 16½ |

ஒக்கூர் சி. கரு. சி. பொதுக் குடும்பத்தாரால், ரூபாய் இரண்டு லட்சத்து எழுபத்தையாயிரம் (2,75,000) செலவில் சிவாலயத்திருப்பணியும், பிலவங்க வருடம் வைகாசி மாதத்தில் கும்பாபிடேகமும் செய்யப் பெற்றன. பின்னர், சி. கரு. சி. கரு. குடும்பத்தாரால் ரூபாய் ஒன்றே கால் லட்சம் (1,25,000) செலவில், இராஜகோபுரம் முன் மண்டபம் முதலிய திருப்பணிகள் செய்யப் பெற்று, ஸ்ரீமுக வருடம் ஆனி மாதம் கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

குறிப்பு :—சி. கரு. சி. லெ. லெட்சுமணன் செட்டியாரால், 1894-ம் ஆண்டு, ரூபாய் ஏழாயிரம் (7,000) செலவில், திருநந்தனவனமும், சி. கரு. சி. கரு. வெ. குடும்பத்தாரால் ரூபாய் பதினையாயிரம் (15,000) செலவில்

திருநந்தனவனமும், சுப. க. அ. குடும்பத்தாரால், ரூபாய் முப்பத்தையாயிரம் (35,000) செலவில் அன்ன சத்திரமும், கூ. அரு. க. வால் ரூபாய் முப்பத்தையாயிரம் (35,000) செலவில் வேதபாடசாலையும், அலவாக் கோட்டை சி. வெ. வகையராவால் ரூபாய் இருபதாயிரம் (20,000) செலவில் பசுமடமும், பி. சு. ஆத. வால் ரூபாய் இரண்டாயிரம் (2,000) செலவில் ஊருணியும், ஒக்கூர் சி. கரு. சி. கரு. வால் ரூபாய் இரண்டாயிரத்தைந்நூறு (2,500) செலவில் தண்ணீர்ப் பந்தரும் அமைக்கப்பெற்றுள்ளன.

## 42. சொர்னநாதபுரம் (தாணிச்சாவூருணி)

(இராமநாதபுரம் மாவட்டம்)

புள்ளிகள்

| | | |
|---|---|---|
| பிள்ளையார்பட்டிக் கோவில் | ... | 26 |
| மாற்றூர்க் கோவில் | ... | 8 |
| ஆகப்புள்ளிகள் | | 34 |

இவ்வூர் கண்டதேவிக் கோவிலுக்கு இரண்டு பர்லாங்கு தூரத்தில் இருப்பதால், அதையே தங்களுக்குச் சிவாலயமாகப் பாவித்து, பிள்ளையார்பட்டிக் கோவில் வகுப்பார் 1824-ம் ஆண்டில் ரூபாய் முப்பத்திரண்டாயிரம் (32,000) செலவில் கற்பகமூத்து விநாயகர் கோவிலும், தாணிச்சாவூருணியும் நிறுவியுள்ளனர். இக்கோவிலுக்கு ரூபாய் இருபத்தையாயிரம் (25,000) மதிப்புள்ள "போரி வயல்" என்ற கிராமம் மானிபமாக விடப் பெற்றுள்ளது.

## 43. தேவகோட்டை

(இராமநாதபுரம் மாவட்டம்)

புள்ளிகள்

| | | |
|---|---|---|
| இரணியூர்க் கோவில் | ... | 89 |
| இலுப்பைக்குடிக் கோவில் | ... | 450 |
| இளையாத்தன்குடிக் கோவில் | ... | 372 |
| நேமம் கோவில் | ... | 60 |
| பிள்ளையார்பட்டிக் கோவில் | ... | 103 |
| மாத்தூர்க்கோவில் | ... | 431½ |
| வைரவன் கோவில் | ... | 264 |
| வேலன்குடிக் கோவில் | ... | 7 |
| ஆகப் புள்ளிகள் | | 1776½ |

இவ்வூர் நகரத்தார்கள் பொதுவில், ரூபாய் எழு லட்சம் (7,00,000) செலவிட்டு, பெரிய சிவாலயத்திருப்பணியும், சர்வதாரி வைகாசி 24 (4-6-1888) குரோதன ஆவணி 20 (4-8-1925) இந்நாட்களில் இரண்டு கும்பாபிடேகங்களும், இவற்றின்பின் இரண்டு கும்பாபிடேகங்களும் செய்யப் பெற்றன.

| | |
|---|---|
| சுவாமி பெயர் | சுந்தரேசுவரர் |
| அம்மை பெயர் | மீனாட்சியம்மை |

நகரப்பொதுவில் ரூபாய் ஐம்பதாயிரம் (50,000) செலவில் அக்கிரஹாரமும், ரூபாய் இருபத்தையாயிரம் (25,000) செலவில் பசுமடமும் கட்டப்பெற்றுள்ளன.

மு. கு. மு. ப. குடும்பத்தாரால் ரூபாய் ஐம்பதினாயிரம் (50,000) செலவில் ஊருணி அமைக்கப்பெற்றுள்ளது.

சுவாமி சந்நிதியின் வடபால் ரூபாய் ஏழாயிரம் (7,000) செலவில், வெள்ளைக்கல்லால் "வேதாந்த விநாயகர்" கோவில் திருப்பணி செய்யப்பெற்று, ஈச்வர ஆனி 8-ம் நாள் (21-6-1937) விநாயகப் பிரதிட்டை செய்து கும்பாபிடேகம் நடைபெற்றது.

பிச. அரு. அரு. குடும்பத்தாரால், ரூபாய் இருபத்தையாயிரம் (25,000) செலவில் திருநந்தனவனமும், உ. ராம. உ. மு. பொதுவில் ரூபாய் ஐம்பதினாயிரம் (50,000) செலவில் பாடசாலையும் அமைக்கப் பெற்றுள்ளன.

நகரத்தாரால் ரூபாய் ஐம்பதினாயிரம் (50,000) செலவில் கோட்டையம்மன் கோவில் திருப்பணிசெய்யப் பெற்றுளது.

நகரத்தாரால் ரூபாய் பதினாயிரம் (10,000) செலவில், மாரியம்மன் கோவில் திருப்பணி செய்யப் பெற்றுளது.

வெ. அழ. அழகப்ப செட்டியாரால், ரூபாய் இருபதினாயிரம் (20,000) செலவில் குரோதன ஆவணி 22-ம் நாள் சொர்ணமூர்த்தி பெண் பாடசாலை நிறுவப் பெற்று நடந்து வருகின்றது.

முத்து. கரு. குடும்பத்தாரால் எழுவங்கோட்டை அகிலாண்டேசுவரி உடனுய விசுவநாதர் கோவில் திருப்பணி, திருநந்தனவனம், ஊருணி, சத்திரம், முதலியன ரூபாய் ஐந்து லட்சம் (5,00,000) செலவில், அமைக்கப் பெற்றுள்ளன. கோவில் கும்பாபிடேகம் ரௌத்திரி ஆண்டு சித்திரை மாதம் 13-ம் நாள் நடந்தேறியது.

பெரி. சோம. குடும்பத்தாரால், ரூபாய் ஐம்பதினாயிரம் (50,000) செலவில், பெண்கள் பிரசவ வைத்தியசாலைக்

குக் கட்டிட முதலியன கட்டிக் கொடுக்கப் பெற்றுளது. 1919-ம் ஆண்டில் திறப்புவிழா நிகழ்ந்தது.

ரூபாய் நாற்பதினாயிரம் (40,000) செலவில் திண்ணன் செட்டியார் ஊருணியும், அதன் கரையில் வெள்ளைக்கல் திருமதில், இராஜகோபுரம், அர்த்தமண்டபம், மகாமண்டபம் இவைகள் அமைந்த பிள்ளையார் கோவில் திருப்பணி, ரூபாய் மூன்றரை லட்சம் (3,50,000) செலவிலும் அமைக்கப் பெற்றுள்ளன. ஷை கோவில் யுவ தை 21-ம் நாள் (3-2-1936) ரூபாய் பதினையாயிரம் (15,000) செலவில் கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

பழ. செ. குடும்பத்தாரால் நித்திய கல்யாணி உடனுய கைலாசநாதர் கோவில் திருப்பணி ரூபாய் ஒன்றரை லட்சம் (1,50,000) செலவில் செய்யப்பெற்று மன்மத தை 8-ம் நாள் (20-1-1896) கும்பாபிடேகம் செய்யப் பெற்றது. கோவில் அலுவலாளர்க்கு ரூபாய் இருபதாயிரம் (20,000) செலவில் வீடுகள் வசதியாக அமைக்கப் பெற்றுள்ளன. கோவிற் செலவுக்கு ரூபாய் இரண்டு லட்சம் (2,00,000) மதிப்புடைய நிலபுலங்கள் வாங்கி எல்லா உற்சவங்களும் சிறப்புற நடைபெற்று வருகின்றன. சந்நிதித் திருக்குளம் ரூபாய் நாற்பதினாயிரம் (40,000) செலவில் அமைக்கப் பெற்றுளது. பழ. செ. பங்காளிகளால், வேத பாராயணத்திற்கு என ரூபாய் இருபதாயிரம் (20,000) செலவிற் கட்டிடமும் பூஸ்திதி ரூபாய் முப்பதாயிரம் (30,000)மும் ஏற்படுத்தி நடத்தப்பெற்று வருகின்றது. தெற்கு வீதியில் குருபூசை மடம் "திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகள் மடாலயம்" எனப் பெயரிட்டுக் கட்டிடம் ரூபாய் பதினையாயிரத் (15,000)துக்கு வாங்கியும், மூலதனம் ரூபாய் பதி

ணுயிரம் (10,000) வைத்தும் நால்வர் குருபூசைகளில் அமு தளித்தும் வருகின்றனர்.

சிலம்பணி விநாயகர் கோவில், தூங்கன் செட்டியா ரால் கட்டப் பெற்றது. இக்கோவிலுக்கு இராமநாதபுரம் ஜமீன்தாராலும், சிவகெங்கை ஜமீன்தாராலும் கிராமங் கள் தானசாசனம் செய்யப் பெற்றிருக்கின்றன. சாசனம் செய்யப் பெற்ற காலம் 1831 டிசம்பர் 9-ம் தேதியாகும்.

நகரத்தார் பொருளுதவி பெற்று வடகலைப் பெருமாள் கோவிலும், தென்கலைப் பெருமாள் கோவிலும் திருப் பணி செய்யப் பெற்று நடைபெற்று வருகின்றன.

ரூபாய் இரண்டு லட்சம் (2,00,000) செலவில் நகரத் தார்களால் "நகரத்தார் ஸ்ரீ மீனுட்சி வித்யா பரிபாலன சங்கம் உயர் கிலைப்பள்ளி" 15-6-1921-ல் நிறுவப் பெற்று அரசாங்கத்தினர் உதவியுடன் நடைபெற்று வருகின்றது. புதுக் கட்டிடம் 26-8-1945-ல் ராஜா ஸர் அண்ணுமலைச் செட்டியாரால் திறந்து வைக்கப் பெற்றது.

நகரத்தார் பொருளுதவி பெற்று, அம்மச்சி ஊருணிக் கரையில் கண்ணன் கோவில் கட்டப்பெற்று உற்சவங்கள் நடந்து வருகின்றன.

ராம. அரு. அரு. ராம. அருணுசலம் செட்டியாரால், ரூபாய் பதினுயிரம் (10,000) செலவில் ஒரு வித்தியாசாலை நடைபெற்று வருகிறது.

நகரப் பொதுவில் இரவிசேரிச் சிவன் கோவில் திருப் பணி செய்யப் பெற்றுளது.

குறிப்பு :—மெ. வகையராவால் ரூபாய் பதினுயிரம் (10,000) செலவில் குருபூஜை மடமும், ராம. அரு. அரு.

அருணசலம் செட்டியாரால் ரூபாய் ஐம்பதினயிரம் (50,000) செலவில் புதூரில் பிள்ளையார் கோவிலும், குளமும், சத்திரமும், பழ. செ. வால் ரூபாய் ஐயாயிரம் (5,000) செலவில் திருநந்தனவனமும், பழ. ராம. குடும்பத்தாரால் கருத்தான் ஊருணியும் பிள்ளையார் கோவிலும், வெள்ளையன் செட்டியாரால் வெள்ளையனூருணிப் பிள்ளையார் கோவிலும், ஐந்நூற்றீசர் ஆலயமும், வீர. அழ. பொதுவில் ஊருணியும், வள்ளியப்ப செட்டியார் வகையராவால் ரூபாய் ஒரு லட்சம் (1,00,000) செலவில் ஊருணியும் பிள்ளையார் கோவிலும், நகரத்தார் பலரால், ரூபாய் இருபத்தேழாயிரத்து ஐந்நூறு (27,500) செலவில் பல தண்ணீர்ப் பந்தர்களும் அமைக்கப் பெற்றுள்ளன.

## 44. தேனிபட்டி

(திருச்சிராப்பள்ளி மாவட்டம்)

புள்ளிகள்

| | | |
|---|---|---|
| இரணியூர்க் கோவில் | ... | 13 |
| இளையாத்தன்குடிக் கோவில் | ... | 6 |
| சூரைக்குடிக் கோவில் | ... | 5 |
| வைரவன் கோவில் | ... | 35 |
| ஆகப் புள்ளிகள் | | 59 |

இவ்வூர் நகரத்தார் ' கழனிவாசல் ' என்ற கிராமத்தில் குடியேறியிருக்கின்றனர்.

தாம் முன் குடியிருந்த தேனிபட்டியில் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் கட்டப் பெற்று மிகப் பழைமையுற்

திருந்த சிவாலயத்தைப் புதுப்பித்து ரூபாய் எண்பதினா யிரம் (80,000) வரை திருப்பணி செய்துள்ளனர்.

சுவாமி பெயர் அகத்தீசுவரர்
அம்மை பெயர் அகிலாண்டேசுவரி

செல்லப்ப செட்டியார் வகையராவால் ரூபாய் முப் பதினாயிரம் (30,000) செலவில் குளமும் பிள்ளையார் கோவிலும் அமைக்கப்பெற்றுள்ளன.

சிவாலயத்திற்குத் தென்புறம் நகரத்தார்களால் இரண்டு குளங்கள் வெட்டப்பெற்றிருக்கின்றன.

குறிப்பு :—நகரத்தார் சிலரால் கட்டப்பெற்ற குருபூசை மடமும், துவாதசி மடமும், க. மு. அ. வீர. இராமன் செட்டியார் மேற்பார்வையில் நடந்து வருகின்றன.

## 45. நடராஜபுரம்

(இராமநாதபுரம் மாவட்டம்)

புள்ளிகள்

| | | |
|---|---|---|
| இலுப்பைக்குடிக் கோவில் | ... | 25 |
| இளையாத்தன்குடிக் கோவில் | ... | 2 |
| சூரைக்குடிக் கோவில் | ... | 21 |
| மாற்றூர்க் கோவில் | ... | 4 |
| வைரவன் கோவில் | ... | 13 |
| ஆகப் புள்ளிகள் | | 65 |

இவ்வூர் நகரத்தார்கள் பொதுவில், ரூபாய் பதினை யாயிரம் (15,000) செலவிட்டு, துன்மதி சித்திரை (1921 மே)யில் சிவாலயத் திருப்பணி தொடங்கி, துந்துபி

வைகாசி 32-ம் தேதி (14-6-22) ரூபாய் எண்ணாயிரம் (8,000) செலவில் கும்பாபிடேகம் செய்யப்பெற்றது.

சுவாமி பெயர் இராமநாதர்
அம்மை பெயர் பருவதவர்த்தனி

பனங்குடி கண. மு. பெரி. வெ., கண. க. க., கண. மு. பெரி. வீர., கண. க. வெ. சா. ஆகிய நால்வர்களால் ரூபாய் ஏழாயிரம் (7,000) செலவில் சுந்தரவிநாயகர் கோவில் திருப்பணி செய்யப்பெற்று 1918-ம் ஆண்டில் கும்பாபிடேகம் செய்யப்பெற்றது.

குறிப்பு :—நகரத்தார் பொதுவில், ரூபாய் இரண்டாயிரம் (2,000) செலவில் கோவிற் கீழ்புறம் குளமும், நகரத்தாருட் சிலரால், ரூபாய் மூவாயிரம் (3,000) செலவில் பசுமடமும், ரூபாய் மூவாயிரம் (3,000) செலவில் திருநந்தனவனமும், ரூபாய் ஏழாயிரம் (7,000) செலவில் துவாதசி மடமும், ரூபாய் மூவாயிரம் (3,000) செலவில் மற்றோர் மடமும், அமைக்கப் பெற்றுள்ளன.

## 46. நற்சாந்துபட்டி

(திருச்சிராப்பள்ளி மாவட்டம்)

புள்ளிகள்

| | | |
|---|---|---|
| இலுப்பைக்குடிக் கோவில் | ... | 75 |
| இளையாத்தன்குடிக் கோவில் | ... | 57 |
| பிள்ளையார்பட்டிக் கோவில் | ... | 73 |
| மாத்தூர்க் கோவில் | ... | 35½ |
| வைரவன் கோவில் | ... | 65 |
| ஆகப் புள்ளிகள் | | 305½ |

இவ்வூர் நகரத்தார்கள் பொதுவில், ரூபாய் ஆறு லட்சம் (6,00,000) செலவிட்டு, சிறந்த சிவாலயத் திருப்பணியும், விபவ வைகாசி 19-ம் தேதி (23-5-1928) யில் கும்பாபிடேகமும் செய்யப் பெற்றன.

சுவாமி பெயர் சிதம்பரேசர்
அம்மை பெயர் சிவகாமியம்மை

சுமார் 15 வருட காலமாக "ஷண்முக விலாச கலாசாலை" என்ற தொடக்கப் பள்ளி அரசாங்க உதவிபெற்று நடந்து வருகிறது.

குறிப்பு:—ந. க. சுப. வால், துந்துபி வைகாசி 22-ம் தேதி முதல் ரூபாய் முப்பத்தையாயிரத்து ஐந்நூறு (35,500) செலவில் பசுமடமும், கும. பெரி. வால் ரூபாய் ஐயாயிரம் (5,000) செலவில் மடமும், ஷை யாரால் ரூபாய் இரண்டாயிரம் (2,000) செலவில் திருநந்தனவனமும், சா. வீர. அ. குடும்பத்தாரால் ரூபாய் இருபதினாயிரம் (20,000) செலவில் சத்திரமும், கும. பெரி. குடும்பத்தாரால், கீழைத்தேமுத்தம்பட்டி எல்லைக்கு மேற்புறம் ரூபாய் முப்பத்தையாயிரம் (35,000) செலவில் கம்பன் செட்டி சத்திரமும், வீ. மு. வீரப்ப செட்டியாரால் ரூபாய் நாற்பதாயிரம் (40,000) செலவில் பெருமாள் கோவிலும் ஊருணியும் அமைக்கப் பெற்றுள்ளன.

## 47. நாச்சியாபுரம்

(இராமநாதபுரம் மாவட்டம்)

புள்ளிகள்

இளுப்பைக்குடிக் கோவில் ... 80

| | | |
|---|---|---|
| பிள்ளையார்பட்டிக் கோவில் | ... | 42 |
| வைரவன் கோவில் | ... | 17 |
| ஆகப்புள்ளிகள் | | 139 |

சுப. ராம. இராமன் செட்டியார், ரூபாய் எழுபத்தை யாயிரம் (75,000) செலவில், சிவாலயமும் ஊருணியும் நிறுவி, பராபவ ஆனி 26-ம் நாள் (9-7-1906) கும்பாபி டேகம் செய்வித்தனர்.

நகரப்பொதுவில், "நாச்சியாரம்மன் கோவில்" ரூபாய் எழுபதாயிரம் (70,000) செலவில் கட்டப்பெற்று, 35 ஆண்டுகட்கு முன் கும்பாபிடேகம் நிறைவெய்தியது.

தண்டாயுதபாணி கோவில், ரூபாய் இருபதினாயிரம் (20,000) செலவில் கட்டப்பெற்று, 60 ஆண்டுகட்கு முன் கும்பாபிடேகம் செய்யப்பெற்றது.

நகரப்பொதுவில், "ஜெயங் கொண்டார் விநாயகர் வித்தியா சாலை" ரூபாய் பதினாயிரம் (10,000) செலவில் நிறுவப் பெற்று, 5 வகுப்புக்கள் அரசாங்க உதவி பெற்று நடந்து வருகின்றன.

இவ்வூருக்கு 1 மைல் தூரத்திலுள்ள "கம்பனூர்"ச் சிவாலயம், கூத்தக்குடி இராமசாமி பிள்ளையாலும், பெரி. பெ. குடும்பத்தாராலும் ரூபாய் இரண்டு லட்சம் (2,00,000) செலவில் திருப்பணி செய்யப்பெற்றுப் பிரமாதீச வருடம் ஆவணி மாதம் (1913 ஆகஸ்டு) கும்பாபிடேகம் நிறைவேறிற்று.

## 48. நாட்டரசன் கோட்டை

(இராமநாதபுரம் மாவட்டம்)

புள்ளிகள்

| | | |
|---|---|---|
| இரணியூர்க் கோவில் | ... | 27 |
| இளையாத்தன்குடிக் கோவில் | ... | 188 |
| சூரைக்குடிக் கோவில் | ... | 30 |
| பிள்ளையார்பட்டிக் கோவில் | ... | 48 |
| மாற்றூர்க் கோவில் | ... | 85 |
| வைரவன் கோவில் | ... | 25 |
| | ஆகப் புள்ளிகள் | 403 |

இவ்வூர் நகரத்தார்கள் பொதுவில், ரூபாய் மூன்று லட்சம் (3,00,000) செலவிட்டு, மிகப் புராதனமான சிவாலயத் திருப்பணியும், சித்தார்த்தி சித்திரை 4-ம் நாள் (15-4-1859), அட்சய ஆவணி 6-ம் நாள் (22-8-1926) ஆகிய நாட்களில் இரண்டு கும்பாபிடேகங்களும் செய்யப் பெற்றன.

சுவாமி பெயர் கரிகால சோழீசுவரர்
அம்மை பெயர் சிவகாமியம்மை

நகரத்தார்களால், ரூபாய் மூன்று லட்சம் செலவில் (3,00,000) ஸ்ரீநிவாசப் பெருமாள், ஆண்டாள் நாச்சியார் கோவில் திருப்பணி செய்யப்பெற்று, விசுவாவசு வைகாசி 30-ம் நாளில் (12-6-1903) கும்பாபிடேகம் செய்யப் பெற்றது. நாலாயிரப் பிரபந்த சேவை புரிபவர் குடியிருந்து வர நான்கு இல்லங்கள், ஒக்கூர் சி. கரு. சித. சிதம்பரம் செட்டியாரால் ரூபாய் இருபதினாயிரம் (20,000) செலவில் அமைக்கப் பெற்றுள்ளன.

கண்ணுடைய நாயகியம்மை கோவில் துவசத் தம்பம், அணியொட்டிக் கால் மண்டபம், திருமதில், இராஜ கோபுரம் முதலிய எல்லாத் திருப்பணிகளும், நகரத்தார்களால் ரூபாய் நான்கு லட்சம் (4,00,000) செலவில் அமைக்கப் பெற்று, ஈசுவர வருடம் ஆவணி மாதத்தில் கும்பாபிடேகம் செய்யப் பெற்றது. அம்மையார் கோவிலுக்கு முன்னர், வெ. க. சு. வகையருவால் ரூபாய் ஐம்பதினாயிரம் (50,000) செலவில், தெப்பக்குளம் கல் திருப்பணியாகக் கட்டி முடிக்கப் பெற்று 1874-ம் ஆண்டில் தடாகப் பிரதிட்டை செய்யப் பெற்றது. இவ் வம்மையாருக்கு, நகரத்தார்களால் ரூபாய் ஐம்பதினாயிரம் (50,000) செலவில் 18-5-1930-ல் "வெள்ளி ரதம்" செய்யப் பெற்றுளது.

கண. ஆவி. அரு. அருணாசலம் செட்டியாரால், ரூபாய் பன்னீராயிரம் (12,000) செலவில், 1917-ம் ஆண்டில், கம்பர் சமாதியிடத்தில் மண்டபமும் கொட்டகையும் அமைக்கப் பெற்றுள்ளன.

கண. உல. வெள்ளையப்ப செட்டியாரால் கீழை ரத வீதியில், ரூபாய் இருபத்தையாயிரம் (25,000) செலவில் "பிரசவ வைத்தியசாலை" நிறுவப் பெற்றுளது.

சு. ராம. ராமநாதன் செட்டியாரால் 10-6-29 முதல் நடத்தப்பெற்று வந்த தொடக்கப் பள்ளி 1943-ம் ஆண்டு முதல் உயர்நிலைப் பள்ளியாகி ஷை செட்டியாரின், ரூபாய் முப்பத்தாறாயிரம் (36,000) செலவில் நடைபெற்று வருகின்றது. அரசியலாரிடமிருந்து உதவித் தொகையும் கிடைக்கப் பெற்றுக் கர ஆண்டு வைகாசித் திங்கள் கட்டிட வேலை தொடங்கப் பெற்று இருக்கின்றது.

குறிப்பு :—கண. உலகப்ப செட்டியாரால் ரூபாய் பன்னீ ராயிரம் (12,000) செலவில் அந்தணர் உறையுளும், சேவு. சித. சித. வகையருவால் ரூபாய் இருபதினு யிரம் (20,000) செலவில் திருநந்தனவனமும், ரூபாய் ஐயாயிரம் (5,000) செலவில், லெ. லெட்சுமணன் செட்டியாரால் ஒரு திருநந்தனவனமும், ரூபாய் முப்பதினுயிரம் (30,000) செலவில் தீர்த்தா குளமும், தேசிகவிநாயகர் கோவிலும், ரூபாய் முப்பதினுயிரம் (30,000) செலவில் அடைக்கப்ப செட்டியார் ஊருணி யும், ரூபாய் இருபதினுயிரம் (20,000) செலவில் 'மாணிக்கவல்லி' என்ற குளமும் அமைக்கப் பெற் றுள்ளன.

## 49. நெற்குப்பை

(இராமநாதபுரம் மாவட்டம்)

புள்ளிகள்

| | | |
|---|---|---|
| இரணியூர்க் கோவில் | ... | 75 |
| இளையாத்தன்குடிக் கோவில் | ... | 79 |
| சூரைக்குடிக் கோவில் | ... | 23 |
| நேமம் கோவில் | ... | 53 |
| பிள்ளையார்பட்டிக் கோவில் | ... | 11 |
| மாற்றூர்க் கோவில் | ... | 6 |
| வைரவன் கோவில் | ... | 7 |
| ஆகப்புள்ளிகள் | | 254 |

தெ. பெரி. பெரியண்ணன் செட்டியாரால், ரூபாய் இருபதினுயிரம் (20,000) செலவில், சுவாமி கோவில் புதி தாகத் திருப்பணி செய்யப்பெற்றுக் கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

ராம. சா. பழ. சா. சாத்தப்ப செட்டியாரால் ரூபாய் நாற்பதினுயிரம் (40,000) செலவில் அம்மை கோவில் திருப் பணி முடிக்கப்பெற்று, பிரமோதூத ஆனி 29-ம் தேதி (13-7-1930) கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

சுவாமி பெயர் மனமொத்த கண்டீசர்
அம்மை பெயர் நித்திய கல்யாணி

இவ்வூர் நகரத்தார்கள், ரூபாய்நாற்பதினுயிரம்(40,000) செலவில் சுப்பிரமணிய சுவாமி கோவில் திருப்பணி முடித்து, விசுவாவசு ஆனி 26-ம் நாள் (9-7-1905) கும்பா பிடேகம் செய்வித்தனர். பின்னர், இராஜகோபுரம் ரூபாய் பதினுயிரம் (10,000) செலவில் புதுப்பித்து, பவ தை 26-ம் நாள் (8-2-1933) நூதனமாகத் தூபி வைத்துக் கும்பாபி டேகம் செய்வித்தனர்.

கெற்குப்பை பழ. பெரி. பெரிய கருப்பன் செட்டியார், சதுர்வேதமங்கலம் ஆத்துமநாயகி அம்மைக்கு ரூபாய் எண்ணுயிரத்து எண்ணூறு (8,800) மதிப்பில் தங்கக் கவசம் செய்து வைத்துள்ளார்.

குறிப்பு :—முரு. பழ. பொதுக் குடும்பத்தாரால், ரூபாய் பதினுயிரம்(10,000) செலவில் மாணிக்க நாச்சியம்மை கோவில் திருப்பணியும், ரூபாய் இருபதினுயிரம் (20,000) செலவில் பிடாரியம்மை கோவில் திருப் பணியும், ராம. சா. குடும்பத்தாரால் ரூபாய் முப்பதா யிரம் (30,000) செலவில் திருநந்தனவனமும் துவாதசி மடமும், பரிபாலனம் செய்ய ரூபாய் பதினுயிரம் (10,000) மூலதனமும், நகரத்தார் சிலரால் ரூபாய் ஐயாயிரம் (5,000) செலவில் தண்ணீர்ப் பந்தர்களும், ரூபாய் நாற்பதினுயிரம் (40,000) செலவில் நான்கு

ஊருணிகளும், ரூபாய் பதினாயிரம் (10,000) செலவில், பிள்ளையார் கோவிலும் ரூபாய் பன்னீராயிரம் (12,000) செலவில் நகரத்தார் மடமும் அமைக்கப் பெற்றுள்ளன.

## 50. நேமத்துப்பட்டி

(இராமநாதபுரம் மாவட்டம்)

புள்ளிகள்

| | | |
|---|---|---|
| இரணியூர்க் கோவில் | ... | 37½ |
| இலுப்பைக்குடிக் கோவில் | ... | 40 |
| இளையாத்தன்குடிக் கோவில் | ... | 17 |
| மாற்றூர்க் கோவில் | ... | 15 |
| வைரவன் கோவில் | ... | 51 |
| ஆகப்புள்ளிகள் | | 160½ |

மெ. மு. பழ. வால், துன்மதி கார்த்திகை 29-ம் நாள் (21-12-1921) சத்திரம் கட்டத் தொடங்கி ரூபாய் ஒன்றரை லட்சம் (1,50,000) செலவில் முடிக்கப்பெற்று, குரோதன தை 12-ம் நாள் (25-1-26) முருகன் கோவிற் கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

மு. பெ. வால் ரூபாய் இருபதினாயிரம் (20,000) செலவில் குரு பூசை மடம் கட்டப்பெற்று எல்லாக் குரு பூசைகளும் நடைபெற்று வருகின்றன.

அப்பரில்லம், சி. வீ. நா. பழநியப்ப செட்டியார், அட்சய ஆண்டு புரட்டாசித் திங்கள் 4-ம் நாள் (20-8-1926) திருநாவுக்கரசு வித்தியாசாலையை நிறுவினர். விபவ ஆண்டு ஆவணித் திங்கள் பெரிய கட்டிடங்கள் எழும்பின. விளை

சுவாமி பெயர் சோமசுந்தரேசுவரர்
அம்மை பெயர் மீனாட்சியம்மை

இத்தலத்தில் 'அட்டமாசித்தி உபதேசித்த' நாளாகிய அமாவாசையில் அம்மை சந்நிதிப் பொற்றாமரையாம் அட்டமாசித்தித் திருக்குளத்தில் மக்கள் பலர் வந்து நீராடி வழிபட்டு இட்ட சித்திகள் பெறுகின்றனர். கோவில் விமானம், இராச கோபுரம் முதலியவற்றின் வனப்பினைக் கண்டு மட்டற்ற மகிழ்ச்சி யடைகின்றனர்.

அ. வீர. அ. வால், திருநந்தனவனமும், அலுவலாளர்க்கு 12 இல்லங்களும், விடுதியும் அமைக்கப் பெற்றுள்ளன.

கண்ட மாணிக்கம் செ. சி. நா. நாராயணன் செட்டியார், ரூபாய் நாற்பதினாயிரம் (40,000) செலவில் 'அழகு சவுந்தரியம்மை' கோவில் திருப்பணி செய்து கும்பாபிடேகம் செய்வித்தனர்.

வீர. அ. அடைக்கப்ப செட்டியார், ரூபாய் எண்பதினாயிரம் (80,000) செலவில், இவ்வூரிலிருந்து கண்ட மாணிக்கம் திருக்கோட்டியூர் வரை அழகிய சாலை அமைத்திருக்கின்றனர். அச் சாலை, ஜில்லா போர்டு தலைவர் இராமநாதபுரம் முத்து விஜய ரகுநாத சேதுபதியால் 29-10-22-ல் திறக்கப் பெற்றது.

## 52. பலவான்குடி

(இராமநாதபுரம் மாவட்டம்)

புள்ளிகள்

| | | |
|---|---|---|
| இரணியூர்க் கோவில் | ... | 39 |
| இளையாத்தன்குடிக் கோவில் | ... | 13 |

| | | |
|---|---|---|
| நேமம் கோவில் | ... | 3 |
| மாற்றூர்க் கோவில் | ... | 4 |
| வைரவன் கோவில் | ... | 43 |
| ஆகப் புள்ளிகள் | | 102 |

நகரத்தார்கள் ரூபாய் இருபத்தையாயிரம் (25,000) செலவில் சிவாலயத் திருப்பணியும், 50 ஆண்டுகளுக்கு முன் கும்பாபிடேகமும் செய்வித்தனர்.

சுவாமி பெயர் சொக்கலிங்க மூர்த்தி
அம்மை பெயர் மீனாட்சியம்மை

அழ. கு. பழநியப்ப செட்டியாரால், செங்கமல நாயகி யம்மன் கோவில் திருப்பணி ரூபாய் இருபத்தையாயிரம் (25,000) செலவில் செய்யப் பெற்று 1884-ம் ஆண்டில் கும்பாபிடேகம் செய்யப் பெற்றது. ரூபாய் ஆயிரம் (1,000) செலவில் நகரத்தார்களால் திருமதில் கட்டப் பெற்றுளது.

குறிப்பு:—ராம. கு. குடும்பத்தாரால் ரூபாய் எழுபதாயிரம் (70,000) செலவில் விநாயகர் நடராஜர் கோவில்களும் திருவாசக பாடசாலையும் உணவு விடுதியும் திருக்குளமும் கோவிந்தசாமி சமாதிக் கோவிலும், புதுவயல் வைரவன் கோவில் வகுப்பாரால் ரூபாய் இருபத்தையாயிரம் (25,000) செலவில் செட்டியாரூருணியும் பிள்ளையார் கோவிலும், குஞ்சான் செட்டியார் வகையரு பங்காளிகளால் ரூபாய் நாற்பதாயிரம் (40,000) செலவில் புதூருணியும், குஞ்சர விநாயகர் கோவிலும், மடமும்; வீ. சித. சிதம்பரம் செட்டியாரால் ரூபாய் எழாயிரம் (7,000) செலவில் திருக்

தனவனமும், நகரத்தார் பலரால் ரூபாய் இருபதாயிரம் (20,000) செலவில் குளமும், தண்ணீர்ப் பந்தர்களும், மடங்களும் அமைக்கப் பெற்றுள்ளன.

## 53. பள்ளத்தூர்

(இராமநாதபுரம் மாவட்டம்)

புள்ளிகள்

| | | |
|---|---|---|
| இரணியூர்க் கோவில் | ... | 159 |
| இலுப்பைக்குடிக் கோவில் | ... | 30 |
| இளையாத்தன்குடிக் கோவில் | ... | 35 |
| சூரைக்குடிக் கோவில் | ... | 28 |
| நேமம் கோவில் | ... | 67 |
| மாற்றூர்க் கோவில் | ... | 38 |
| வைரவன் கோவில் | ... | 94 |
| ஆகப் புள்ளிகள் | | 451 |

இவ்வூர் நகரத்தார்கள் பொதுவில் ரூபாய் எழு லட்சம் (7,00,000) செலவிட்டு, சிவாலயத் திருப்பணியும், பிரமாதீச ஆனி 27-ம் நாள் (10-7-1913) கும்பாபிடேகமும் செய்யப் பெற்றன.

சுவாமி பெயர் சுந்தரேசுவரர்
அம்மை பெயர் மீனாட்சியம்மை

முத்து வீரப்ப செட்டியார், நல்லழகப்ப செட்டியார் வகையாரால், 130 ஆண்டுகளாக அழ. ராம. அன்னதான சத்திரம், ரூபாய் ஐம்பதினாயிரம் (50,000) செலவில் நிறுவப் பெற்று நடந்து வருகின்றது.

உ. அ. பெரி. மு. அருணசலம் செட்டியார், ரூபாய் ஒரு லட்சம் (1,00,000) செலவு செய்து, கட்டிடமும் மூலதனமும் ஏற்படுத்தி, அரசாங்க உதவியும் பெற்று, 1925-ம் ஆண்டு முதல் "அருணசலஞ் செட்டியார் உயர்நிலைப் பள்ளி" நிறுவி நடத்தி வருகின்ருர்.

அ. மு. மு. முருகப்ப செட்டியார் ரூபாய் ஒரு லட்சம் (1,00,000) செலவிட்டு, 27-1-24 முதல் வைத்தியசாலை நிறுவி நடத்தி வருகின்ருர்.

குறிப்பு :— நகரத்தாருள் சிலரால் ரூபாய் பதினையாயிரம் (15,000) செலவில் நந்தனவனங்களும், ரூபாய் முப்பதாயிரம் (30,000) செலவில் குருபூசை மடமும், ரூபாய் ஒரு லட்சம் (1,00,000) செலவில் அ. மு.வால் மூன்று மைல் அளவு மூடு மடையுடன் திருக்குளமும், ரூபாய் முப்பதாயிரம் (30,000) செலவில் வடக்கு ஊருணியும் பிள்ளையார் கோவிலும், ரூபாய் இருபதாயிரம்(20,000) செலவில் கிழவன் செட்டியார் குளமும், பிள்ளையார் கோவிலும் அமைக்கப் பெற்றுள்ளன.

## 54. பறியாமருந்துப்பட்டி

(இராமநாதபுரம் மாவட்டம்)

புள்ளிகள்

| | | |
|---|---|---|
| சூரைக்குடிக் கோவில் | ... | 2 |
| வைரவன் கோவில் | ... | 3 |
| ஆகப் புள்ளிகள் | | 5 |

சிவகெங்கை ஜமீனைச் சேர்ந்த புராதனமான இவ்வூர் ஆலயத்தை, நெற்குப்பை முரு. பழ. பொதுக் குடும்பத்

தார், ரூபாய் மூன்று லட்சம் (3,00,000) செலவில் திருப்பணி செய்து, விமான கோபுரங்கள், திருமதில்கள் எடுப்பித்து, ரூபாய் பதினாயிரம் (10,000) செலவில் பிரசோற்பத்தி தை 30-ம் நாள் (12-2-1932) கும்பாபிஷேகம் செய்வித்தார்கள்.

சுவாமி பெயர் பறியாமருந்தீசர்
அம்மை பெயர் பரஞ்சோதியம்மை

முரு. பழ. வகையறாவால் ரூபாய் பதினாயிரம் (10,000) செலவில், ஐயனார் கோவிற் கலியாண மண்டபம் கட்டப்பெற்று உற்சவம் நடைபெற்று வருகின்றது.

குறிப்பு :— முரு. பழ. முத்துராமன் செட்டியார் குடும்பத்தாரால் ரூபாய் ஏழாயிரம் (7,000) செலவில் பசுமடமும், முத்து. கு. மு. வகையறாவால் ரூபாய் எண்ணாயிரம் (8,000) செலவில் ஊருணியும், ஷை குடும்பத்தாரால் ரூபாய் பதினையாயிரம் (15,000) செலவில் விடுதியும் அமைக்கப் பெற்றுள்ளன.

## 55. பனங்குடி

(இராமநாதபுரம் மாவட்டம்)

புள்ளிகள்

| | | |
|---|---|---|
| இலுப்பைக்குடிக் கோவில் | ... | 9 |
| இளையாத்தன்குடிக் கோவில் | ... | 4 |
| ஆகப் புள்ளிகள் | | 13 |

கண்டமாணிக்கம் மு. கரு. கருப்பன் செட்டியார் ரூபாய் ஐந்நூறு (500) செலவு செய்து பிள்ளையார்

கோவில் கட்டி, 1913-ம் ஆண்டில் கும்பாபிடேகம் செய் வித்தார்.

ரூபாய் இருபதாயிரம் (20,000) செலவில் பெரியநாயகி யம்மை கோவில் திருப்பணியும், பெரி. மு. அரு. கண்ணப்ப செட்டியாரால் ரூபாய் மூவாயிரம் (3,000) செலவில் மண் டபமும் கட்டப் பெற்றுள்ளன.

நகரத்தார் பொதுவில் ரூபாய் இரண்டாயிரம் (2,000) செலவில் நகர விடுதியும், சிலரால் ரூபாய் பதின்மூன்ரு யிரம் (13,000) செலவில் திருநந்தன வனங்களும் அமைக் கப் பெற்றுள்ளன.

## 56. பனையப்பட்டி

(திருச்சிராப்பள்ளி மாவட்டம்)

புள்ளிகள்

| | | |
|---|---|---|
| இரணியூர்க் கோவில் | ... | 26 |
| இளுப்பைக்குடிக் கோவில் | ... | 13 |
| இளையாத்தன்குடிக் கோவில் | ... | 3 |
| சூரைக்குடிக் கோவில் | ... | 2 |
| மாற்றூர்க் கோவில் | ... | 83½ |
| வைரவன் கோவில் | ... | 3 |
| ஆகப்புள்ளிகள் | | 130½ |

இவ்வூர் நகரத்தார்கள் பொதுவில் ரூபாய் நாற்பதாயி ரம் (40,000) செலவிட்டு, சிவாலயத் திருப்பணியும், கும்பா பிடேகமும் செய்யப் பெற்றன.

சுவாமி பெயர் சுந்தரேசுவரர்
அம்மை பெயர் மீனுட்சியம்மை

சி. மு. சி. சின்னையா செட்டியார், ரூபாய் முப்பதினாயிரம் (30,000) செலவிட்டும், மேலும் ரூபாய் முப்பதினாயிரம் (30,000) மூலதனம் அளித்தும், தரும வைத்திய சாலை நிறுவி நடத்தி வருகின்றார்.

சி. மு. வகையராவால், ரூபாய் இருபதினாயிரம் (20,000) செலவில் கட்டிடம் நிறுவப் பெற்றும், அரசாங்க உதவி பெற்றும், "ஆரம்ப உயர்தர வித்தியாலயம்" நடை பெற்று வருகின்றது.

## 57. பாகநேரி

(இராமநாதபுரம் மாவட்டம்)

புள்ளிகள்

| | | |
|---|---|---|
| இளையாத்தன்குடிக் கோவில் | ... | 42 |
| சூரைக்குடிக் கோவில் | ... | 5 |
| பிள்ளையார்பட்டிக் கோவில் | ... | 45 |
| மாற்றூர்க் கோவில் | ... | 50 |
| வைரவன் கோவில் | ... | 80 |
| ஆகப்புள்ளிகள் | | 222 |

இவ்வூர்ச் சிவாலயம், பாண்டியர் காலத்துக் கட்டப் பெற்ற பழங் கோவில். 43 ஆண்டுகட்கு முன், இக் கோவிலில் முன் மண்டபமும், அம்மை கோவிலும் கு. ப. ராம. வால் ரூபாய் பதினையாயிரம் (15,000) செலவில் கட்டப் பெற்றுள்ளன.

சுவாமி பெயர் நீலகண்டீசுவரர்
அம்மை பெயர் கருணாகடாட்சியம்மை

நாட்டார், நகரத்தார் இவர்களின் பொருளுதவியால், சோழீசர் கோவில், ரூபாய் மூவாயிரம் (3,000) செலவில், 1927-ம் ஆண்டில் புதுக்கிச் செம்மை செய்யப் பெற்றது.

இவ்வூர் நகரத்தார்கள், ரூபாய் எண்பதினாயிரம் (80,000)செலவு செய்து, பெருமாள் கோவில் திருப்பணி முடித்து, யுவ வைகாசி 23-ம் நாள் (5-6-1935) கும்பாபிடேகம் செய்வித்தார்கள்.

மு. நா. வகையாராவால், ரூபாய் அறுபதினாயிரம் (60,000) செலவில், பிடாரியம்மன் கோவில் திருப்பணி முடித்துக் கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

ரூபாய் பன்னீராயிரம் (12,000) மதிப்புள்ள, தமிழ், வடமொழி, ஆங்கிலம் முதலிய பன்மொழி நூல்கள் நிறைந்த நூல் நிலையமும் வாசக சாலையும் நகரத்தார்களால் அமைக்கப் பெற்றுள்ளன.

குறிப்பு:— நகரத்தாருள் சிலரால், ரூபாய் ஏழாயிரம் (7,000) செலவில் தேவார பாடசாலையும், ரூபாய் பத்தாயிரம் (10,000) செலவில் துவாதசி மடமும், தெய்வயானை ஆச்சியால் ரூபாய் நாற்பதாயிரம் (40,000) செலவில் அன்னதான சத்திரமும், நகரத்தார் பலரால் ரூபாய் பதினையாயிரம் (15,000) செலவில் சாலையும் அமைக்கப் பெற்றுள்ளன.

## 58. பிள்ளையார்பட்டி

(இராமநாதபுரம் மாவட்டம்)

புள்ளிகள்

பிள்ளையார்பட்டிக் கோவில் ... 3

இவ்வூர் நகரக் கோவில்களில் ஒன்று. அறச் செயல் விவரம் நகரக் கோவில் வரிசையிற் சேர்க்கப் பெற்றுளது.

## 59. புதுப்பட்டி (பொன்னமராவதி)

(திருச்சிராப்பள்ளி மாவட்டம்)

புள்ளிகள்

| | | |
|---|---|---|
| இலுப்பைக்குடிக் கோவில் | ... | 10 |
| இளையாத்தன்குடிக் கோவில் | ... | 72 |
| வைரவன் கோவில் | ... | 113 |
| ஆகப்புள்ளிகள் | | 195 |

இவ்வூர் நகரத்தார்கள் பொதுவில், ரூபாய் இருபதினுயிரம் (20,000) செலவிட்டுச் சிவாலயத் திருப்பணியும், விக்ருதி தை 29-ம் நாள் (11-2-51) கும்பாபிடேகமும் செய்யப் பெற்றன.

சுவாமி பெயர் பூலோகநாதர்
அம்மை பெயர் புவனேசுவரியம்மை

காளியப்ப செட்டியார் மனைவி கண்ணம்மை ஆச்சியால், ரூபாய் அறுபதினுயிரம் (60,000) செலவில், பிடாரியம்மன் கோவில் திருப்பணி செய்யப்பெற்று, 1922-ம் ஆண்டில் கும்பாபிடேகம் நிறைவேறிற்று.

சா. மு. ராம. சண்முகம் செட்டியாரால் ரூபாய் ஏழாயிரம் (7,000) செலவில் கட்டிடம் கட்டிக் கொடுக்கப் பெற்று, போர்டு ஆரம்பப் பாடசாலை நடைபெற்று வருகின்றது.

## 60. புதுவயல்

(இராமநாதபுரம் மாவட்டம்)

புள்ளிகள்

| | | |
|---|---|---|
| இரணியூர்க் கோவில் | ... | 52 |
| இலுப்பைக்குடிக் கோவில் | ... | 2 |
| இளையாத்தன்குடிக் கோவில் | ... | 112 |
| சூரைக்குடிக் கோவில் | ... | 44 |
| பிள்ளையார்பட்டிக் கோவில் | ... | 10 |
| மாற்றூர்க் கோவில் | ... | 24½ |
| வைரவன் கோவில் | ... | 67 |
| ஆகப்புள்ளிகள் | | 311½ |

நகரப் பொதுவில், ரூபாய் நாற்பதினாயிரம் (40,000 செலவில், கைலாச விநாயகர் கோவில் திருப்பணி பெரிதாகச் செய்யப் பெற்றுளது. கோவிலுக்கு உயர்ந்த திருவாபரணங்கள் பல உள்ளன.

பட்டணசாமி வகுப்பார், ரூபாய் இருபதினாயிரம் (20,000) செலவில், கோவிலுக்கு முன்னர் ஊருணி அமைத்துள்ளனர்.

அழ. சு. பழ. வீர. வீரப்ப செட்டியார், ரூபாய் இரண்டு லட்சம் (2,00,000) செலவில், பெருமாள் கோவில் திருப்பணி செய்து, பரீதாபி தை 8-ம் நாள் (20-1-1913) கும்பாபிடேகம் செய்வித்தனர்.

சாக்கோட்டைக்குச் செல்லும் வழியில், முருகப்ப செட்டியாரால் ரூபாய் பன்னீராயிரம் (12,000) செலவில் ஊருணியும், ரூபாய் முப்பதினாயிரம் (30,000) செலவில்,

கரணக்குடியார் மடம் ஊருணி, பிள்ளையார் கோவிலும் அமைக்கப் பெற்றுள்ளன.

## 61. பூங்குடி

(இராமநாதபுரம் மாவட்டம்)

புள்ளிகள்

| | | |
|---|---|---|
| இலுப்பைக்குடிக் கோவில் | ... | 40 |
| இளையாத்தன்குடிக் கோவில் | ... | 5 |
| மாற்றூர்க் கோவில் | ... | 40½ |
| ஆகப்புள்ளிகள் | | 85½ |

கூராண்டான் செட்டியார், தீர்த்தப்ப செட்டியார் வகையினரால், ரூபாய் ஒன்றரை லட்சம் (1,50,000) செலவில் சிவாலயத் திருப்பணியும், பிரமோதூத சித்திரை (1870 ஏப்ரல்)யிலும் ஆங்கீரச ஆவணி (1932 ஆகஸ்டு) யிலும் இரு கும்பாபிடேகங்களும் செய்யப் பெற்றன.

ரூபாய் பதினையாயிரம் (15,000) செலவில் மிளகாய்ச் சாமி ஆலயத் திருப்பணி செய்யப் பெற்றுளது.

ராம. நா. நாராயணன் செட்டியார், தீர்த்தப்ப செட்டியார் ஊருணிக் கரையில், ரூபாய் பதினையாயிரம் (15,000) செலவில் சித்தி விநாயகர் ஆலயம் நிறுவி, பவ தை 26-ம் நாள் (8-2-1935) கும்பாபிடேகம் செய்வித்தார்.

கூ. கண. க. முத்தையா செட்டியார் போன்மார்களால் ரூபாய் பத்தாயிரம் (10,000) செலவில் திருநந்தன வனம் அமைக்கப் பெற்றுளது.

கூ. அரு. க. கண்ணப்ப செட்டியார், ரூபாய் பதினேழாயிரம் (17,000) செலவிட்டு வைத்தியசாலை நிறுவி 6-2-1925 முதல் நடத்தி வருகின்றார்.

கண்ணம்மை ஆச்சியால் ரூபாய் பதின்மூன்றாயிரம் (13,000) செலவில் பசுமடமும், கூராண்டான் செட்டியார் வகையராவால் ரூபாய் இருபத்தையாயிரம் (25,000) செலவில், ஒக்கூருக்கும் பூங்குடிக்கும் மூன்று கல் அளவு சாலையும் அமைக்கப் பெற்றுள்ளன.

## 62. பூலாங்குறிச்சி

(இராமநாதபுரம் மாவட்டம்)

புள்ளிகள்

| | | |
|---|---|---|
| இரணியூர்க் கோவில் | ... | 5 |
| இலுப்பைக்குடிக் கோவில் | ... | 17 |
| இளையாத்தன்குடிக் கோவில் | ... | 5 |
| சூரைக்குடிக் கோவில் | ... | 23 |
| பிள்ளையார்பட்டிக் கோவில் | ... | 52 |
| வைரவன் கோவில் | ... | 28 |
| ஆகப்புள்ளிகள் | | 130 |

ராம. ப. வ. பொதுக்குடும்பத்தார் சண்முக விநாயகர் கோவிலும், 'சண்முக நதி' என்ற ஊருணியும் ரூபாய் முப்பதாயிரம் (30,000) செலவில் கட்டி, விரோதிகிருது வைகாசி 28-ம் நாளிலும் (4-6-1889) விபவ ஐப்பசி 10-ம் நாளிலும் (26-10-1928) இரண்டு கும்பாபிடேகங்கள் செய்திருக்கின்றார்கள்.

"மீனாட்சி சொக்கலிங்கம் ஜில்லா போர்டு ஆண்கள் வைத்தியசாலை", வ. சொ. சொக்கலிங்கம் செட்டியாரால், ரூபாய் இருபத்தையாயிரம் (25,000) செலவில் நிறுவப் பெற்று 9-6-39 முதல், போர்டில் ஒப்புவிக்கப் பெற்று நடந்து வருகின்றது.

இராமநாதன் பெண்கள் சிசு வைத்தியசாலை வ. சொ. ராம. வள்ளியப்ப செட்டியாரால் ரூபாய் இருபத்தையாயிரம் (25,000) செலவில் நிறுவப்பெற்று, அவர்கள் செலவில் 28-1-42 முதல் நடந்து வருகின்றது.

வ. சொ. ராம. வள்ளியப்ப செட்டியாரால், கட்டிடம் முதலியவற்றிற்கு ரூபாய் இருபதினாயிரம் (20,000) செலவு செய்யப்பெற்று, 15-6-43 முதல் போர்டு எலிமெண்டரி பாடசாலை நடத்தப்பெற்று வருகிறது.

ரூபாய் அறுபத்தோராயிரம் (61,000) செலவில் சாலைகளும், ரூபாய் மூவாயிரம் (3,000) செலவிட்டு ரூபாய் மூவாயிரம் (3,000) மூலதனம் வைத்துத் தண்ணீர்ப் பந்தரும் அமைக்கப் பெற்றிருக்கின்றன.

ராம. ப. வ. ராம. தனதில் ரூபாய் மூவாயிரம் (3,000) மூலதனம் வைத்து, கான்சாத்து மலை முருகன் கோவிலில் பாலபிடேகம் செய்வித்து வருகின்றார்.

## 63. பொன்னமராவதி

(திருச்சிராப்பள்ளி மாவட்டம்)

புள்ளிகள்

இளையாத்தன்குடிக் கோவில் ... 4

ப. அ. அண்ணாமலைச் செட்டியார் ரூபாய் இருபதினாயிரம் (20,000) செலவிட்டு, பெருமாள் கோவிலைப் புதுப்

பித்து, நள வருடம் ஆவணி மாதத்தில் (1916 ஆகஸ்டு) கும் பாபிடேகம் செய்வித்துள்ளார்.

கோவில் முன் உள்ள குளம், பழ. முரு. பழ. பழநி யப்ப செட்டியாரால் ரூபாய் இரண்டாயிரம் (2,000) செலவில் புதுப்பிக்கப் பெற்றது.

வயி. வ. லெட்சுமணன் செட்டியாரால், 1934-ம் ஆண்டு ரூபாய் நான்காயிரம் (4,000) செலவில் அரசாங்க வைத்தியசாலைக்கு 'வார்டு' கட்டிக் கொடுக்கப் பெற் றுள்ளது.

முத்துக்கருப்பன் செட்டியார் முன்னோர்களால், ரூபாய் பதினாயிரம் (10,000) செலவில் அழகிய நாச்சி யம்மன் கோவிலும், சேங்கை ஊருணியும் அமைக்கப் பெற்றுள்ளன.

மு. கா. லெ. கா. லெட்சுமணன் செட்டியாரால், ரூபாய் மூவாயிரம் (3,000) செலவில் 'கலுங்குப்பாறை ஊருணி' அமைக்கப் பெற்றுள்ளது.

## 64. மகிபாலன்பட்டி

(இராமநாதபுரம் மாவட்டம்)

புள்ளிகள்

| | | |
|---|---|---|
| இளையாத்தன்குடிக் கோவில் | ... | 39 |
| மாற்றூர்க் கோவில் | ... | 4 |
| வைரவன் கோவில் | ... | 33 |
| ஆகப் புள்ளிகள் | | 76 |

இவ்வூரைச் சுற்றிப் பல சிவலிங்கமூர்த்திகள் இருப்பதால், இது முற்காலத்தில் பெரிய நகராக இருந்திருக்க வேண்டும். இந்நகருக்கு மேல் பால் ''குடகுமலை'' என்று வழங்கும் ஒரு சிறு குன்றில் 'கர்ப்பக்கிரகம்' குடைந்தமைத்து, அதன் கண் ஓர் அழகான சிவலிங்கம் பழங்காலத்தே பிரதிட்டை செய்யப் பெற்றுளது. அதற்கு விதிப்படி பூசை நடைபெற ஏற்பாடு செய்யின் மிக நலமாம்.

இந்நகருக்கு மேல்பால், இக்குன்று அமைந்திருத்தலாலும், கர்ப்பக்கிரகம் மேற்கு நோக்கி அமைக்கப் பெற்றிருப்பதாலும் இதற்குக் 'குடகுமலை' என்னும் பெயர் அமைந்தது போலும்.

இந்நகரில் ஒரு ஐயனர் கோவிலும், ஒரு துர்க்கை கோவிலும் உண்டு. இது பூங்குன்ற நாட்டுத் தலைநகராதலின், ஐயனருக்கு, 'பூங்குன்ற ஐயனர்' என்றும், கொற்றவைக்கு, 'பூங்குன்ற நாயகி' என்றும், பெயர் வழங்கப் பெறுகின்றது.

இவ்வூர் நகரத்தாரால், ஒரு பிள்ளையார் கோவிலும், ''மங்கள விநாயக வித்தியாசாலை'' என்னும் பெயரால் தருமப் பள்ளிக்கூடமும் அமைக்கப் பெற்றுள்ளன. இவற்றிற்குச் செலவு ரூபாய் பதினையாயிரம் (15,000) ஆகும்.

நகரத்தாரால் ரூபாய் ஐயாயிரம் (5,000) செலவில் பூங்குன்றநாயகிக்குத் தேர்ப்பணி செய்யப் பெற்றுள்ளது.

இவ்வூர்ப் பூங்குன்ற ஐயனருக்கு, மு. எ. ராம. வால், ரூபாய் எழாயிரம் (7,000) செலவில், ஆலயத் திருப்பணி செய்யப் பெற்றது.

இவ்வூரிலிருந்து கண்டவராயன் பட்டிவரை ரூபாய் இருபதினாயிரம் (20,000) செலவில், தேவகோட்டை அ. கண. வீரப்ப செட்டியாரால், தாம் பிறந்த இவ்வூர் ஞாபகத்தின் பொருட்டுச் சாலை (Road) அமைக்கப் பெற்றுள்ளது.

இவ்வூரில், நாட்டுக்கோட்டை நகரத்தார் மரபில் வைரவன் கோயில் பெரிய வகுப்பில், முத்துக்கருப்பன் செட்டியார் புதல்வர், மகாமகோபாத்தியாய, பண்டிதமணி கதிரேசச் செட்டியார், 16-9-1881-ல் பிறந்து வளர்ந்து தமிழ்மொழி இலக்கிய இலக்கண சைவ சித்தாந்த நூல்களிலும், வடமொழியிலும், பெரும்புலமை படைத்துச் சொற்பொழிவில் மிக்க திறமையுடையராய் நூலாசிரியராகவும், உரையாசிரியராகவும் விளங்குகின்றார். இவருக்கு முன்னையரசினர் அளித்த 'மகாமகோபாத்தியாய'ப் பட்டமும், பெரும்புலவர்களாலும், சங்கங்களாலும் கொடுக்கப் பெற்ற 'பண்டிதமணி', 'முதுபெரும்புலவர்' என்னும் பட்டங்களும், குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனத்தார் அளித்த 'சைவசித்தாந்த வித்தகர்' என்னும் சிறப்புப் பெயரும் உள்ளன. இவர் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்ப் பேராசிரியராகப் பல ஆண்டுகள் இருந்ததோடு, சென்னை, திருவனந்தைப் பல்கலைக் கழகங்களிலும், பற்பல பதவிகளை மேற்கொண்டிருந்தனர்.

## 65. மாநகரி

(இராமநாதபுரம் மாவட்டம்)

புள்ளிகள்

| | | |
|---|---|---|
| இரணியூர்க் கோவில் | ... | 1½ |
| இளுப்பைக்குடிக் கோவில் | ... | 18 |

| | | |
|---|---|---|
| இளையாத்தன்குடிக் கோவில் | ... | 5 |
| மாற்றூர்க் கோவில் | ... | 6½ |
| வைரவன் கோவில் | ... | 18 |
| ஆகப் புள்ளிகள் | | 49 |

இவ்வூர்க் கோவில், ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் வெள்ளைக் கற்களால் திருப்பணி செய்யப் பெற்றது.

சுவாமி பெயர் கண்டீசுவரர்
அம்மை பெயர் கண்டவன நாயகி

நகரத்தார்களால் "பிடாரியம்மன் கோவில்" திருப் பணி செய்யப் பெற்று, 1924-ம் ஆண்டில் கும்பாபிடேகம் செய்யப்பெற்றது. இக்கோவிலுக்கு ஒரு கிராமம் விடப் பெற்றிருக்கிறது.

ரூபாய் இருபத்தையாயிரம் (25,000) செலவில், லெ. அரு. வால் அன்னசத்திரம் கட்டப் பெற்றுள்ளது.

## 66. மிதிலைப்பட்டி

(திருச்சிராப்பள்ளி மாவட்டம்)

புள்ளிகள்

| | | |
|---|---|---|
| இரணியூர்க் கோவில் | ... | 23 |
| இளையாத்தன்குடிக் கோவில் | ... | 42 |
| சூரைக்குடிக் கோவில் | ... | 7 |
| பிள்ளையார்பட்டிக் கோவில் | ... | 19 |
| மாற்றூர்க் கோவில் | ... | 31½ |
| ஆகப்புள்ளிகள் | | 122½ |

இவ்வூர் நகரத்தார்கள் பொதுவில், ரூபாய் மூன்று லட்சம் (3,00,000) செலவில், சிவாலயத் திருப்பணியும், பிரமாதி தை 16-ம் நாள் (29-1-40) கும்பாபிடேகமும் செய்யப் பெற்றன.

சுவாமி பெயர் ஆவுடைநாதர்
அம்மை பெயர் சிவயோகவல்லி

பழ. சுப. சுப்பிரமணியன் செட்டியாரால், ரூபாய் நாற்பதாயிரம் (40,000) செலவில், வரதராசப் பெருமாள் கோவில் திருப்பணி செய்யப் பெற்று 1930-ம் ஆண்டில் கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

க. எ. பழ. குடும்பத்தாரால் ரூபாய் இருபத்தையாயிரம் (25,000) செலவில், பசுமடமும், திருநந்தனவனமும் அமைக்கப் பெற்றுள்ளன.

பழ. ப. வால் ரூபாய் முப்பதினாயிரம் (30,000) செலவில், மடமும் திருநந்தனவனமும் அமைக்கப் பெற்றுள்ளன.

நகரத்தார் சிலரால் ரூபாய் ஒரு லட்சத்து அறுபத்தையாயிரம் (1,65,000) செலவில் நான்கு ஊருணிகளும் இரண்டு பிள்ளையார் கோவில்களும் அமைக்கப் பெற்றுள்ளன.

## 67. ஆ. முத்துப்பட்டினம்

(இராமநாதபுரம் மாவட்டம்)

புள்ளிகள்

இளையாத்தன்குடிக் கோவில் ... 19

| | | |
|---|---|---|
| பிள்ளையார்பட்டிக் கோவில் | ... | 6 |
| மாற்றூர்க் கோவில் | ... | 54½ |
| ஆகப்புள்ளிகள் | | 79½ |

இவ்வூர் நகரத்தார்கள் பொதுவில், ரூபாய் இருபத்தை யாயிரம் (25,000) செலவிட்டு "உலகநாயகியம்மை" கோவில் திருப்பணியும், விக்ருதி சித்திரை 20-ம் நாள் (1-5-1890) கும்பாபிடேகமும் செய்யப் பெற்றன.

நகரத்தாருள் சிலரால் ரூபாய் இருபத்து நான்காயிரம் (24,000) செலவில், பிள்ளையார் கோவில்களும் குளங்களும் அமைக்கப் பெற்றுள்ளன.

சித. வெ. சு. நாச்சியப்ப செட்டியாரால், ரூபாய் ஏழாயிரம் (7,000) செலவில் துவாதசி மடம் கட்டப் பெற்றுள்ளது.

## 68. மேலைச்சிவபுரி

(திருச்சிராப்பள்ளி மாவட்டம்)

புள்ளிகள்

| | | |
|---|---|---|
| இரணியூர்க் கோவில் | ... | 5 |
| இலுப்பைக்குடிக் கோவில் | ... | 2 |
| இளையாத்தன்குடிக் கோவில் | ... | 21 |
| நேமம் கோவில் | ... | 61 |
| பிள்ளையார்பட்டிக் கோவில் | ... | 77 |
| வைரவன் கோவில் | ... | 51 |
| ஆகப்புள்ளிகள் | | 217 |

இவ்வூர் நகரத்தார்கள் பொதுவில், ரூபாய் இருபதினு யிரம் (20,000) செலவில், சிவாலயத் திருப்பணியும், துந்துபி வைகாசி 32-ம் நாள் (14-6-1922) கும்பாபிடேகமும் செய்யப் பெற்றன.

சுவாமி பெயர் சொக்கலிங்கமூர்த்தி
அம்மை பெயர் மீனுட்சியம்மை

வ. பழ. சா. குடும்பத்தாரால், சௌமிய வருடம், சித்திரை மாதம் 31-ம் நாள், தமிழ் வளர்ச்சி கருதி, 'சன்மார்க்க சபை' என ஒரு கழகம் நிறுவப் பெற்றது. அதன் கட்டிடத்திற்கும், அதன் அங்கங்களாகிய 'கணே சர் செந்தமிழ்க் கல்லூரி' நடை பெறுதற்கும் 'தொல் காப்பியனுர் புத்தகசாலே' அமைதற்கும், மூலதனம் வைத் தற்கும் ரூபாய் ஐம்பதினுயிரம் (50,000) வரை செலவிடப் பெற்றன.

இச் சன்மார்க்க சபை, செட்டிமார் நாட்டில் முதலாவ தாகத் தோன்றிய கழகமாகும். இதன் அங்கமாகிய கல் லூரியில், முன்னர்த் தமிழ்ப் பிரவேச, பாலபண்டித, பண்டித வகுப்புக்கள் நடந்து, இப்பொழுது வித்துவான் வகுப்பு நடைபெற்று வருகிறது. இதன் சார்பாகப் பல மாணவர்கள் பயிலும் தொடக்கப் பள்ளியும் உண்டு.

வ. பழ. சா. குடும்பத்தாரால், ரூபாய் இருபதினுயிரம் (20,000) செலவில், வேந்தன்பட்டியிலிருந்து இவ்வூர் வழி யாகப் பொன்னமராவதி வரை, 3 கல் அளவு கற்சாலே (**Road**) அமைக்கப் பெற்றுள்ளது.

வ. பழ. சா. குடும்பத்தாரால், ரூபாய் எழாயிரம் (7,000) செலவில் "சோழசிரோமணி" என்னும் ஊருணி உண்டாக்கப் பெற்றது.

நகரத்தார் சிலரால் ரூபாய் பதினோராயிரம் (11,000) செலவில் திருநந்தனவனமும், தண்ணீர்ப் பந்தர்களும் அமைக்கப் பெற்றன.

## 69. ராங்கியம்

(திருச்சிராப்பள்ளி மாவட்டம்)

புள்ளிகள்

| | | |
|---|---|---|
| இரணியூர்க் கோவில் | ... | 26 |
| இலுப்பைக்குடிக் கோவில் | ... | 50 |
| இளையாத்தன்குடிக் கோவில் | ... | 48 |
| நேமம் கோவில் | ... | 26 |
| வைரவன் கோவில் | ... | 2 |
| ஆகப்புள்ளிகள் | | 152 |

வ. நா. குடும்பத்தாரால், ரூபாய் நாற்பதினாயிரம் வரை (40,000) செலவிடப் பெற்று, சிதம்பர விநாயகர் கோவில் திருப்பணியும், தாது வருடத்தில் கும்பாபிடேகமும் செய்யப் பெற்றன.

வ. நா. வ. வள்ளியப்ப செட்டியார் ரூபாய் இருபத்தையாயிரம் (25,000) செலவில் 1944-ம் ஆண்டு முதல், 'வள்ளியப்பா தரும வைத்திய சாலை' நிறுவித் தம் செலவில் நடத்தி வருகின்றார்.

நகரத்தார் பொதுவில் "ஸ்ரீ சிவகாமி அம்பாள் உயர் நிலைப்பள்ளி" ரூபாய் பதினையாயிரம் (15,000) செலவில் 1948-ல் முதல் நிறுவப் பெற்று நா- அ. வகையினர் மேற்பார்வையில் நடந்து வருகின்றது.

## 70. ராயவரம்

(திருச்சிராப்பள்ளி மாவட்டம்)

புள்ளிகள்

| | |
|---|---|
| இரணியூர்க் கோவில் | ... 21 |
| இளையாத்தன்குடிக் கோவில் | ... 92 |
| பிள்ளையார்பட்டிக் கோவில் | ... 9 |
| மாற்றூர்க் கோவில் | ... 127½ |
| வைரவன் கோவில் | ... 127 |
| ஆகப்புள்ளிகள் | 376½ |

வெ. மு. வேலன் செட்டியாரால், ரூபாய் ஒரு லட்சம் செலவில் (1,00,000) சிவாலயத் திருப்பணி செய்யப் பெற்றுள்ளது. சுக்கில தை 26 (6-2-1870), 5-6-14, விகுருதி தை 29 (11-2-51) ஆகிய இந்நாட்களில் மூன்று கும்பாபிடேகங்கள் நிகழ்ந்துள்ளன.

| | |
|---|---|
| சுவாமி பெயர் | சுந்தரேசுவரர் |
| அம்மை பெயர் | மீனாட்சியம்மை |

இக் கோவிலுக்கு ரூபாய் நாற்பதாயிரம் (40,000) மதிப்புள்ள கிராமங்களும் தோப்புக்களும் உள்ளன. வெள்ளி இடப வாகனமும், வெள்ளிக் கவசமும் ரூபாய் நான்காயிரம் (4,000) மதிப்பில் உள்ளன.

நகரப் பொதுவில், ரூபாய் ஒரு லட்சம் (1,00,000) செலவில், 'முத்துமாரியம்மை கோவில்' திருப்பணியும், பவ தை 26 (8-2-1935) கும்பாபிடேகமும் செய்யப் பெற்றுள்ளன. இக் கோவிலுக்கு ரூபாய் நாற்பதாயிரம் (40,000) மூலதனம் வைக்கப்பெற்றிருக்கிறது.

சு. கதி. கதிரேசச் செட்டியார் ரூபாய் இருபத்தை யாயிரம் (25,000) செலவில், 1-11-35 முதல் "காந்தி பாட சாலை" நிறுவி நடத்தி வருகின்றார்.

சா. த. க. அ. அழகப்ப செட்டியாரால், ரூபாய் இருபதாயிரம் (20,000) செலவில் வேத பாடசாலையும், நகரத்தார் சிலரால் ரூபாய் ஆறாயிரம் (6,000) செலவில் நந்தனவனங்களும், ரூபாய் எண்ணாயிரம் (8,000) செலவில் திருமடமும், ரூபாய் பன்னீராயிரம் (12,000) செலவில் குருபூசை மடமும், வெ. மு. வால் ரூபாய் பதினையாயிரம் (15,000) செலவில் அந்தணர் உறையுளும், வெ. மு. குடும் பத்தாரால் ரூபாய் பதினாயிரம் (10,000) செலவில் புதூரு ணிக்கரை மடமும், நகரத்தார்களுள் சிலரால் ரூபாய் தொண்ணூறாயிரம் (90,000) செலவில் 9 ஊருணிகளும் அமைக்கப் பெற்றுள்ளன.

## 71. கொ. லெட்சுமிபுரம் (கொத்தமங்கலம்)

(இராமநாதபுரம் மாவட்டம்)

புள்ளிகள்

| | | |
|---|---|---|
| பிள்ளையார்பட்டிக் கோவில் | ... | 2 |
| மாத்தூர்க் கோவில் | ... | 67½ |
| ஆகப்புள்ளிகள் | | 69½ |

இவ்வூர் நகரத்தார்கள் பொதுவில், ரூபாய் நாற்பதினா யிரம் (40,000) செலவிட்டு, சிவாலயத் திருப்பணியும், பிலவங்க தை மாதத்தில் (1908 ஜனவரி) கும்பாபிடேகமும் செய்யப் பெற்றன.

சுவாமி பெயர் சொக்கலிங்க மூர்த்தி
அம்மை பெயர் மீனாட்சியம்மை

ந. சொ. அரு. அருணாசலன் செட்டியாரால், ரூபாய் பன்னீராயிரம் (12,000) செலவில் "சொக்கலிங்க வித்தியா சாலை" நிறுவப்பெற்று, 6-3-1927 முதல் அரசாங்க உதவி பெற்று நடந்து வருகின்றது.

ந. சொ. அரு. அருணாசலன் செட்டியாரால் ரூபாய் பதினாயிரம் (10,000) செலவில் பெரிய கோவிற் சிவாலயத்துக்கு 5-7-1924ல் வெள்ளிக் கைலாச வாகனம் அமைக்கப் பெற்றுள்ளது.

மு. சி. வி., ந. சொ. அரு. இவர்களால், மூலதனம் ரூபாய் பதினாயிரம் (10,000) வைக்கப் பெற்று ரூபாய் இரண்டாயிரம் (2,000) செலவிற் பசுமடமும், மூலதனம் ரூபாய் பதினொன்றாயிரம் (11,000) வைக்கப் பெற்று ரூபாய் பதினாயிரம் (10,000) செலவில் திருநந்தனவனமும் அமைக்கப் பெற்றுள்ளன.

## 72. நெ. லெட்சுமீபுரம் (நெய்க்கோணம்)

(திருச்சிராப்பள்ளி மாவட்டம்)

புள்ளிகள்

| | | |
|---|---|---|
| இலுப்பைக்குடிக் கோவில் | ... | 40 |
| மாற்றூர்க் கோவில் | ... | 8 |
| வைரவன் கோவில் | ... | 15 |
| ஆகப்புள்ளிகள் | | 63 |

இவ்வூர் நகரத்தார்கள் பொதுவில், ரூபாய் இருபத்தையாயிரம் (25,000) செலவில் சிவாலயத் திருப்பணியும்,

துன்மதி ஐப்பசி 28-ம் நாள் (13-11-1921) கும்பாபிடேகமும் செய்யப் பெற்றன.

| | |
|---|---|
| சுவாமி பெயர் | சுந்தரேசுவரர் |
| அம்மை பெயர் | மீனுட்சியம்மை |

நகரப் பொதுவில் ரூபாய் மூவாயிரம் (3,000) செலவில் 'எலிமெண்டரி பாடசாலே' நிறுவப் பெற்று, நடைபெற்று வருகின்றது.

வ. செ. கி. வால் ரூபாய் ஐயாயிரம் (5,000) செலவில் பசுமடமும், வ. செ. கு. வ. கும. வால் ரூபாய் நான்காயிரம் (4,000) செலவில் திருநந்தனவனமும், அ. அ. சே. வால் ரூபாய் ஐயாயிரம் (5,000) செலவில் அந்தணர் உறையுளும், நகரப் பொதுவில், ரூபாய் ஆறுயிரம் (6,000) செலவில் திருக்குளமும் அமைக்கப் பெற்றுள்ளன.

## 73. வலேயபட்டி

(திருச்சிராப்பள்ளி மாவட்டம்)

புள்ளிகள்

| | | |
|---|---|---|
| இரணியூர்க் கோவில் | ... | 10 |
| இலுப்பைக்குடிக் கோவில் | ... | 20 |
| இளேயாத்தன்குடிக் கோவில் | ... | 36 |
| நேமம் கோவில் | ... | 63 |
| பிள்ளேயார்பட்டிக் கோவில் | ... | 152 |
| மாற்றூர்க் கோவில் | ... | 170 |
| வைரவன் கோவில் | ... | 145 |
| ஆகப் புள்ளிகள் | | 596 |

இவ்வூர் நகரத்தார்கள் பொதுவில், ரூபாய் ஒரு லட்சம் செலவிட்டு, சிவாலயத் திருப்பணியும், 12 ஆண்டுகளுக்கு முன் கும்பாபிடேகமும் செய்யப் பெற்றன.

சுவாமி பெயர் வலம்புரிநாதர்
அம்மை பெயர் வடுவகிர் விழியாள்

க. சா. அ. அண்ணாமலைச் செட்டியார் குடும்பத்தாரால் ரூபாய் பதினோராயிரம் (11,000) செலவில் பிள்ளையார் கோவிலும், அ. மு. நா. நாகப்ப செட்டியாரால் ரூபாய் இருபத்தையாயிரம் (25,000) செலவில், பிள்ளையார் கோவிலும், குளமும் அமைக்கப் பெற்றுள்ளன.

ஆ. வி. சித. குடும்பத்தாரால் ரூபாய் ஒன்பதாயிரம் (9,000) செலவில் திருநந்தனவனமும், பு. கு. குமரப்ப செட்டியாரால் ரூபாய் மூவாயிரம் (3,000) செலவில் பசுமடமும், நகரத்தார்களால் ரூபாய் பதினாயிரம் (10,000) செலவில் கார்த்திகை மடமும், நகரத்தாருட் சிலரால் ரூபாய் பதினாயிரம் (10,000) செலவில் தண்ணீர்ப் பந்தர்களும், பெரி. எ. அ. அண்ணாமலைச் செட்டியாரால் ரூபாய் இருபத்தையாயிரம் (25,000) செலவில் வேதாந்த மடமும் வயி. வ. குடும்பத்தாரால் ரூபாய் நாற்பதாயிரம் (40,000) செலவில் வையாபுரிக் குளமும், ந. ராம. வகையினரால் ரூபாய் எண்பதாயிரம் (80,000) செலவில் அடைக்கன் குளமும், நகரத்தாருள் சிலரால் ரூபாய் பதினாயிரம் (10,000) செலவில் பிள்ளையார் கோவில்களுக்கு முன்னர் அமைந்த குளங்களும், நகரத்தார்களால் ரூபாய் பதினாயிரம் (10,000) செலவில் அந்தணர் உறையுளும் அமைக்கப் பெற்றுள்ளன.

க. மு. சு. சின்னையா செட்டியாரால் ரூபாய் பதினாயிரம் (10,000) செலவில் நகர மடம் அமைக்கப் பெற்றுள்

ளது. கு. கா. கு. அண்ணாமலைச் செட்டியாரால் ரூபாய் (7,000) செலவில் 'சாதுக்கள் மடம்' நிறுவப் பெற்றுளது.

நகரத்தார்களால் ரூபாய் நான்காயிரம் (4,000) செலவில் 1919-ம் ஆண்டு ஜனவரி மாதத்தில் "நாமகள் கல்லூரி" நிறுவப் பெற்று நடைபெற்று வருகின்றது.

வயி. வ. வகையராவால் ரூபாய் இருபதினாயிரம் (20,000) செலவு செய்து கட்டிடங்கள். கட்டப் பெற்று, 1944 ஜூன் 22-ம் தேதி முதல் "வடுகநாதன் உயர்நிலைப் பள்ளி" நடைபெற்று வருகின்றது. நிர்வாகக் குழுவினர் ரூபாய் எழுபத்தையாயிரம் (75,000) மூலதனம் வைத்து இப்பள்ளியை ஆரம்பித்தனர். வடு. லெ. இலக்குமணச் செட்டியார் ரூபாய் பதினாயிரம் (10,000) செலவிட்டு வார்டு கட்டிக் கொடுத்திருக்கின்றார்.

வடு. வைரவன் செட்டியார், வடு. இலக்குமணச் செட்டியார், வடு. நாகப்ப செட்டியார், வடு. வடுகநாதன் செட்டியார் ஆகிய நால்வரால் 9-5-30 முதல் 'அலர்மேலு பெண் கல்லூரி' நிறுவப் பெற்று ரூபாய் இருபதாயிரம் (20,000) வரை செலவிட்டு, மூலதனம் ரூபாய் முப்பதாயிரம் (30,000) வரை வைத்து நடத்தப் பெற்று வருகின்றது.

## 74. விராமதி

(இராமநாதபுரம் மாவட்டம்)

புள்ளிகள்

| | | |
|---|---|---|
| இளையாத்தன்குடிக் கோவில் | ... | 64 |
| வைரவன் கோவில் | ... | 7 |
| ஆகப்புள்ளிகள் | | 71 |

இளையாத்தன்குடிக் கோவில் கிராமங்களில் இதுவும் ஒன்று. நகரப் பொதுவில் பிள்ளையார் கோவில் ஒன்று கட்டப் பெற்றுளது.

பழ. மு. பொதுவில் ஏற்பாடு செய்து ரூபாய் பதினை யாயிரம் (15,000) செலவில் ஒரு 'பசுமடம்' நிறுவியுள் ளனர்.

சு. வெ. கதி. கதிரேசச் செட்டியார், அவர் மனைவி சிகப்பி ஆச்சி ஆகிய இருவரும், ரூபாய் எழுபதாயிரம் (70,000) செலவில் சிறந்த கட்டிடங்கள் கட்டியும், மூல தனம் அமைத்தும் "சு. வெ. கதி. சிகப்பி ஆச்சி வித்தியா சாலை" நிறுவி, பவ ஆண்டு ஆவணித் திங்கள் 11-ம் நாள் முதல் அரசாங்க உதவி பெற்றும் நடத்தி வருகின்றனர்.

## 75. விரையாச்சிலை

(திருச்சிராப்பள்ளி மாவட்டம்)

புள்ளிகள்

| | | |
|---|---|---|
| இலுப்பைக்குடிக் கோவில் | ... | 40 |
| இளையாத்தன்குடிக் கோவில் | ... | 26 |
| சூரைக்குடிக் கோவில் | ... | 5 |
| மாற்றூர்க் கோவில் | ... | 12½ |
| வைரவன் கோவில் | ... | 72 |
| ஆகப்புள்ளிகள் | | 155½ |

அ. ராம. இராமநாதன் செட்டியார், இவ்வூரிற் பழைமையா யிருந்த சிவாலயத்தைப் புதுக்கி, ரூபாய் இரண்டு லட்சம் (2,00,000) செலவில் திருப்பணி செய்து, ஈசுவர ஆவணி 4-ம் நாள் கும்பாபிடேகம் செய்வித்தனர்.

சுவாமி பெயர் வில்வவனநாதர்
அம்மை பெயர் ரக்ஷாவதாரியம்மை

பெரி. மெ. மெய்யப்ப செட்டியாரால், ரூபாய் ஐம்பதினாயிரம் (50,000) செலவில், கட்டிடங்களும், ஆசிரியர் இல்லங்களும் அமைத்து, போர்டில் ஒப்புவிக்கப் பெற்று 1926-ம் வருடம் முதல், "போர்டு எலிமெண்டரி பாடசாலை" நடைபெற்று வருகின்றது.

## 76. வெற்றியூர்

(இராமநாதபுரம் மாவட்டம்)

புள்ளிகள்

| | | |
|---|---|---|
| இளையாத்தன்குடிக் கோவில் | ... | 7 |
| பிள்ளையார்பட்டிக் கோவில் | ... | 1 |
| மாற்றூர்க் கோவில் | ... | 44½ |
| வைரவன் கோவில் | ... | 11 |
| ஆகப்புள்ளிகள் | | 63½ |

இவ்வூர் நகரத்தார்கள் பொதுவில், ரூபாய் ஐயாயிரம் (5,000) செலவில் சிவாலயத் திருப்பணியும், நந்தன ஆவணி மாதம் (1892 ஆகஸ்டு) கும்பாபிடேகமும் செய்யப் பெற்றன.

சுவாமி பெயர் அருந்ததீசுவரர்
அம்மை பெயர் சவுந்தர நாயகி

நகரத்தார்கள், அன்னபூரணியம்மன் கோவிலை ரூபாய் முப்பத்தாறுயிரம் (36,000) செலவில் திருப்பணி செய்துள்ளார்கள். ரூபாய் பதினையாயிரம் (15,000) செலவில் கற்பக

விநாயகர் கோவில் திருப்பணி செய்து ஸ்ரீமுக சித்திரை 31-ம் நாள் (15-5-33) கும்பாபிடேகம் செய்வித்தனர்.

சுப. தீர்த்தப்ப செட்டியார் குடும்பத்தினரும், கண. மு. முத்துராமன் செட்டியார் குடும்பத்தினரும் சேர்ந்து ரூபாய் இருபத்தையாயிரம் (25,000) செலவில் விசால விநாயகர் கோவில் திருப்பணி செய்துள்ளனர். குரோதன ஆண்டு கும்பாபிடேகம் நிறைவுற்றது.

## 77. வேகுப்பட்டி

(திருச்சிராப்பள்ளி மாவட்டம்)

புள்ளிகள்

| | | |
|---|---|---|
| இளையாத்தன்குடிக் கோவில் | ... | 45 |
| சூரைக்குடிக் கோவில் | ... | 52 |
| பிள்ளையார்பட்டிக் கோவில் | ... | 65 |
| மாற்றூர்க் கோவில் | ... | 6 |
| ஆகப்புள்ளிகள் | | 168 |

நகரத்தார், ரூபாய் பதினாயிரம் (10,000) செலவில் பாலாலயம் கட்டி, பூசை செய்து வருகின்றனர். சிவாலயம் கருங்கல்லால் திருப்பணி செய்யப்பெற்று வருகின்றது.

சுவாமி பெயர் சிவலோகநாதர்
அம்மை பெயர் சிவகாமசுந்தரி

ஆ. பழ. பழநியப்ப செட்டியாரால், ரூபாய் ஐயாயிரம் (5,000) வரை செலவு செய்து, "சிவகாமசுந்தரி செந்தமிழ்ப் பாடசாலை" நிறுவி, விபவ தை 4-ம் நாள் முதல் நடத்தப் பெற்று வந்தது. இடையே அரசியலாரிடம் ஒப்புவிக்கப் பெற்று நடந்து வருகிறது.

நகரத்தாருட் சிலரால், ரூபாய் எண்ணுயிரம் (8,000) செலவில் திருநந்தனவனங்களும், ரூபாய் ஐயாயிரம் (5,000) செலவில் பசுமடமும், ரூபாய் மூவாயிரத்திருநூறு (3,200) மூலதனம் வைத்து சாதக் கட்டளேயும், ரூபாய் ஆருயிரத்திருநூறு (6,200) மூலதனம் அமைத்து மேளக் கட்டளேயும், ரூபாய் நான்காயிரம் (4,000) செலவில் தண்ணீர்ப் பந்தரும், ரூபாய் மூவாயிரம் (3,000) செலவில் ஊருணியும், ரூபாய் இரண்டாயிரம் (2,000) செலவில் வாசகசாலேயும் அமைக்கப் பெற்றுள்ளன.

நகரத்தார்களால் ரூபாய் ஐயாயிரம் (5,000) செலவில் கோவில் அலுவலாளர்க்கு 6 இல்லங்கள் அமைக்கப் பெற்றுள்ளன.

கும. கு. ராம. வால், இந் நகரிலிருந்து $2\frac{1}{4}$ கல் அளவுள்ள கொப்பனுபட்டி வரை, ரூபாய் பதினேயாயிரம் (15,000) செலவில் கற்சாலே (Road) அமைக்கப் பெற்றுள்ளது.

## 78. வேந்தன்பட்டி

(திருச்சிராப்பள்ளி மாவட்டம்)

புள்ளிகள்

| | | |
|---|---|---|
| இரணியூர்க் கோவில் | ... | 27 |
| இலுப்பைக்குடிக் கோவில் | ... | 50 |
| இளேயாத்தன்குடிக் கோவில் | ... | 45 |
| நேமம் கோவில் | ... | 40 |
| மாற்றூர்க் கோவில் | ... | 102 |
| வைரவன் கோவில் | ... | 26 |
| ஆகப்புள்ளிகள் | | 290 |

இவ்வூர் நகரத்தார்கள் பொதுவில், ரூபாய் முப்பதினு யிரம் (30,000) செலவில் சிவாலயத் திருப்பணியும், 12-11-1911, 14-6-22, 25-1-31, 14-11-48 ஆகிய இந்நாட் களில் நான்கு கும்பாபிடேகங்களும் செய்யப்பெற்றன.

சுவாமி பெயர் சொக்கலிங்கமூர்த்தி
அம்மை பெயர் மீனாட்சியம்மை

ராம. மு. முத்துராமன் செட்டியாரால், ரூபாய் பதினையாயிரம் (15,000) செலவில் பசுமடமும், சுப. மு. முத்தையா செட்டியாராலும், முரு. மெ. மெய்யப்ப செட்டியாராலும் ரூபாய் பதினுயிரம் (10,000) செலவில் திருநந்தனவனங்களும், நகரத்தார்களால் ரூபாய் பதினை யாயிரம் (15,000) செலவில் திருக்குளமும் அமைக்கப் பெற்றுள்ளன.

## ஒற்றைவடப் புள்ளிகள்

### வீரசேகரபுரம்

| | | |
|---|---|---|
| பிள்ளையார்பட்டிக் கோவில் | ... | 8 |
| மாற்றூர்க் கோவில் | ... | 51 |

### தேனிபட்டி

| | | |
|---|---|---|
| இரணியூர்க் கோவில் | ... | 12 |

### முறையூர்

| | | |
|---|---|---|
| பிள்ளையார்பட்டிக் கோவில் | ... | 26 |
| மாற்றூர்க் கோவில் | ... | 36 |

### வேங்காவயல்

| | | |
|---|---|---|
| மாற்றூர்க் கோவில் | ... | 2 |
| ஆகப்புள்ளிகள் | | 135 |

## நகரத்தார்கள், தத்தம் ஊருக்கு அணிமையிலுள்ள வேற்றூர்களில் செய்த

# அறச்செயல்கள்

---

### 1. அரளிப்பாறை

ஆ. தெற்கூர், அ. கரு. பழ. அ. பழநியப்ப செட்டியாரால், பிள்ளையார், காசி விசுவேசர், விசாலாட்சியம்மை, கோவில் திருப்பணி ரூபாய் இருபத்தையாயிரம் செலவில் (25,000) முடிக்கப் பெற்று, விபவ கார்த்திகை 15-ம் நாள் ரூபாய் ஐயாயிரம் (5,000) செலவில் கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

நெற்குப்பை ப. ராம. லெ. ராம. இராமன் செட்டியாரால் ரூபாய் மூவாயிரம் (3,000) செலவில் ஊருணியும், ஆ. தெற்கூர் சொ. ராம. கரு. மு. முத்தையா செட்டியாரால் ரூபாய் ஐயாயிரம் (5,000) செலவில் கார்த்திகை மடமும், ஷையூர் கரு. கண. அரு. அருணாசலம் செட்டியாரால் ரூபாய் ஒன்பதாயிரம் (9,000) செலவில் மற்றோர் கார்த்திகை மடமும் அமைக்கப் பெற்றுள்ளன.

### 2. இரவிசேரி

சுவாமி பெயர் மும்முடிநாதர்

இது தேவகோட்டைக்குக் கிழக்கே அரைக்கல் தொலைவில் உள்ளது.

மு. ராம. கி. லெ. கிருஷ்ணன் செட்டியார், தம் பொருளாலும், நகரத்தார் உதவி பெற்றும், ரூபாய்

மூன்று லட்சம் (3,00,000) வரை செலவில் இவ்வூர்ச் சிவாலயத் திருப்பணியும், துந்துபி வைகாசி 23-ம் நாள் (5-6-1922) கும்பாபிடேகமும் செய்துள்ளனர்.

## 3. இளங்குடி

### ஐயனார் கோவில்

பழமை வாய்ந்த இக்கோவிலை, தேவகோட்டை அரு. லெ. குடும்பத்தினர், ரூபாய் முப்பத்தையாயிரம் (35,000) செலவில் திருப்பணி செய்து ரூபாய் பதினையாயிரம் (15,000) செலவில் பிரமோதூத ஆனி 23-ம் நாள் (7-7-1930) கும்பாபிடேகம் செய்வித்தனர்.

காரைக்குடி பி. அ. குடும்பத்தினர் ரூபாய் முப்பதினாயிரம் (30,000) செலவில், ஊருணி, பிள்ளையார் கோவில் கட்டியுள்ளனர்.

இக்கோவிலுக்குக் குடியடிமையாய் உள்ள நகரத்தினர் ரூபாய் இருபத்தையாயிரம் (25,000) செலவில் விடுதி கட்டியுள்ளனர்.

ஒக்கூர் வகுப்பினர் ரூபாய் இருபத்தையாயிரம் (25,000) செலவில் கற்கட்டு குளம் அமைத்துள்ளனர்.

திருப்புத்தூர் தேவகோட்டைப் பெரியசாலையிலிருந்து டி கோவிலுக்கு ரூபாய் பத்தாயிரம் (10,000) செலவில் கற்சாலை (*Road*) அமைத்துள்ளனர்.

## 4. உப்பூர்

### வெய்யிலுகந்த விநாயகர்

அழ. அரு. ராம. அருணசலம் செட்டியார் இவ்விநாயகர் ஆலயத்தைப் புதுப்பித்து, குரோதி தை 29-ம் நாள் (10-2-1905) கும்பாபிடேகம் செய்வித்தனர்.

அழ. வகையராப் பொதுவில், விநாயக சதுர்த்தி உற்சவம், ஆண்டொன்றுக்கு ரூபாய் எழாயிரம் (7,000) செலவில் மிகச் சிறப்பாக நடைபெற்று வருகிறது. வாகனங்கள் ரூபாய் ஒரு லட்சம் (1,00,000) மதிப்பில் உள்ளன.

அழ. வகையராவால் ரூபாய் இருபதினாயிரம் (20,000) செலவில் அன்னசத்திரம் அமைக்கப் பெற்று நடைபெற்று வருகின்றது.

## 5. உமையாள்புரம்

ஷ ஊரில், கோவில், ஊருணி, சாலை, குளம், பாலங்கள் முதலியன ரூபாய் ஒரு லட்சத்து இருபதினாயிரம் (1,20,000) செலவில் அமைக்கப் பெற்றுள்ளன.

## 6. எழுவங்கோட்டை

இது தேவகோட்டைக்கு மேற்கே 3 கல் தொலைவில் உள்ளது.

முத்து. கரு. குடும்பத்தார் சிவாலயத் திருப்பணி செய்துள்ளனர். இதுபற்றி, தேவகோட்டைக் குறிப்பில் வரையப் பெற்றுள்ளது.

மொ. மு. பொதுவில் ரூபாய் பதினாயிரம் (10,000) செலவில் அன்னசத்திரம் கட்டப் பெற்றுள்ளது. இவர்களால் கோவில் திருவாபரணங்கள் ரூபாய் இருபதினாயிரம் (20,000) செலவில் உபயமாக அளிக்கப் பெற்றுள்ளன.

நடுவிற்கோட்டையில் வாழ்ந்து வந்த 'பெருமருதூருடையார்' வகுப்பினர் தற்போது பல ஊர்களில் வசித்து வருகின்றனர். இக்குடும்பத்தினரால் ரூபாய் பதினாயிரம் (10,000) செலவில் பிள்ளையார் கோவிலும் கல்மண்டபமும்

அமைக்கப் பெற்றுள்ளன. வாகனங்கள் ரூபாய் ஏழாயி ரத்து ஐந்நூறு (7,500) செலவில் செய்யப் பெற்றுள்ளன.

தேவகோட்டை பெரி. செ. கு. குப்பான் செட்டியா ரால், ரூபாய் பதினையாயிரம் (15,000) செலவில், வடபா லுள்ள பிடாரியம்மை கோவில் திருப்பணி செய்யப் பெற்று 1904-ம் ஆண்டில் கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

## 7. கண்டதேவி

இவ்வூர்ச் சிவாலயம், அமராவதிபுதூர் வயி. நாக. ராம. மூத்தையா செட்டியார், ரூபாய் மூன்று லட்சம் செல வில், சுவாமி, அம்மை, நடராசர், கோவில்களைப் புதி தாய்க் கட்டியும், அணியொட்டிக் கால் மண்டபம் நிறுவி யும் நந்தன வருடம் வைகாசி மாதத்தில் கும்பாபிடேகம் செய்வித்தனர்.

பின்னர், தாணிச்சாவூருணி நகரத்தார் விபவ தை 20-ம் நாள் (1-2-1929) இரண்டாவது கும்பாபிடேகம் செய்வித்தனர்.

வயி. நாக. ராம. பொதுவில் ரூபாய் முப்பதினாயிரம் (30,000) செலவில் கண்மாய்க்கரை செப்பனிடப் பெற்றது.

செ. ராம. மெ. சித. வால் ரூபாய் பதினாயிரம் (10,000) செலவில், வேத பாடசாலையும், நகரத்தார் சிலரால் ரூபாய் பன்னிரண்டாயிரம் (12,000) செலவில் திருநந்தனவனங் களும், பழ. பிச. பிச்சப்ப செட்டியாரால் ரூபாய் இருபதி னாயிரம் (20,000) செலவில் பசுமடமும், கரு. கி. கிருஷ் ணன் செட்டியாரால் ரூபாய் பதினையாயிரம் (15,000) செல வில் சத்திரமும், வயி. நாக. ராம. பொதுவில் ரூபாய் ஐம்

பதினுயிரம் (50,000) செலவில், ஊருணியும் அமைக்கப் பெற்றுள்ளன.

## 8. கல்லாங்குடி

சுவாமி பெயர் திருப்பாதேசுவரர்
அம்மை பெயர் யோகாம்பிகை

மிகப் பழைமையான இக் கோவில் கோட்டையூர், பள்ளத்தூர், கண்டனூர் நகரத்தார்கள் பொருளுதவியால் ரூபாய் ஐம்பதினுயிரம் (50,000) செலவில் திருப்பணி செய்யப் பெற்று, பிரமாதி தை 14-ம் நாள் (26-1-1880) கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

பின்னர், கோட்டையூர் க. வீ. சொ. அழகப்பையாவால் ரூபாய் ஐம்பதினுயிரம் (50,000) செலவில் 1922-ம் ஆண்டில் சில திருப்பணிகள் செய்யப்பெற்று 2-வது கும்பாபிடேகம் நடைபெற்றது.

## 9. களத்தூர்

இவ்வூர் புதுவயலுக்குக் கிழக்கே உள்ளது.

இவ்வூர் இராமநாதர் கோவில் கோட்டையூர் க. வீ. சொ. அழகப்பையாவால் ரூபாய் பதினுயிரம் (10,000) செலவில் திருப்பணி செய்யப் பெற்று, கீலக வைகாசி 23-ம் நாள் (4-6-1908) கும்பாபிடேகம் செய்யப்பெற்றது.

ஷை கோவிலுக்கு 'கீழச் செட்டிவயல்' என்ற கிராமம் ஷையாரால் தானமாக விடப்பெற்றிருக்கிறது.

## 10. காட்டுக் கோவில்

இது புதுவயலுக்கு மேற்காகவும் கண்டனூருக்கு வடக்காகவும் இருக்கின்றது.

இது நகரத்தார் உதவியால் ரூபாய் எண்ணுயிரம் (8,000) செலவிலும், வயி. ராம. வெ. இராமநாதன் செட்டியாராலும் திருப்பணி செய்யப்பெற்றுக் கும்பாபிடேகம் நடத்தப் பெற்றுள்ளது.

புதுவயல் ராம. வயி. வைரவன் செட்டியாராலும், ராம. சித. சிதம்பரம் செட்டியாராலும் ரூபாய் நாற்பதினுயிரம் (40,000) செலவில் பிள்ளையார் கோவிலும் மடமும் அமைக்கப் பெற்றுள்ளன.

## 11. கீழக்கோட்டை

### ஆதீன மிளகி ஐயனுர் கோவில்

ஒக்கூர், ஆ. சுப்பையா செட்டியாரும், ஆ. அருணசலம் செட்டியாரும் ரூபாய் மூவாயிரம் (3,000) செலவில் 'சின்னக் கருப்பர்' கோவிலும், தேவகோட்டை வள்ளியப்ப செட்டியார் குமாரர்கள் அருணசலம் செட்டியாரும் சேக்கப்ப செட்டியாரும் ரூபாய் எழாயிரம் (7,000) செலவில், காளியம்மை, கருப்பர், வீரபத்திரர் ஆலயங்களும், சி. சேக்கப்ப செட்டியார் ரூபாய் ஆயிரம் (1,000) செலவில் பிள்ளையார் கோவிலும், அமைத்துள்ளனர்.

க. வீர. பொதுவில் ரூபாய் ஏழாயிரம் (7,000) செலவில் சுப்பிரமணியர் கோவிலும், பழ. சுப. கண்ணப்ப செட்டியாரும், பழ. வீர. பழநியப்ப செட்டியார் மகன் லெட்சுமணன் செட்டியாரும் ரூபாய் ஆயிரம் (1,000) செலவில் வைரவர் கோவிலும் அமைத்திருக்கின்றனர்.

தேவகோட்டை ஆத. ராம. மு. இராமசாமிச்செட்டியாரும், ஆத. அரு. ஆதப்ப செட்டியாரும், (அ. வயி. அ. ஆத. பொதுவில்) ரூபாய் பதினையாயிரம் (15,000) செலவில் ஐயனுர் கோவில் திருப்பணி செய்துள்ளனர்.

சே. முத்துக்கருப்பன் செட்டியார் ரூபாய் மூவாயிரம் (3,000) செலவில் 16 கால் மண்டபம் அமைத்துள்ளனர்.

இக்கோவில் வழிபாடு செய்யும் நகரத்தார் ரூபாய் ஏழாயிரம் செலவில் ராச கோபுரம் கட்டியுள்ளனர்.

நகரத்தார் விடுதி ரூபாய் பன்னீராயிரம் (12,000) செலவில் அமைக்கப் பெற்றுளது.

வெ. நா. மு. ரூபாய் மூவாயிரம் (3,000) செலவில் சேங்கையும், வெ. நா. ஆத., பிச. லெ., இவர்கள் ரூபாய் மூவாயிரம் (3,000) செலவில் இரண்டு குதிரைகளும் அமைத்துள்ளனர்.

## 12. குன்றக்குடி

இது திருப்புகழ்ப் பாடல்பெற்ற தலம். இம்மலை மயில்போல அமைந்திருத்தலால் இதற்கு 'மயூரகிரி' என்று பெயர் உண்டு. இத்தலத்திலுள்ள முருகப்பெருமான் எல்லா நகரத்தார்க்கும் இட்ட தெய்வமாக விளங்குகின்றார்.

இது தனவணிகர் நாட்டிற்கு நடுநாயகமாயுளது. இதை வைத்தே இதன் கீழ்பால் உள்ள ஊர்களைக் 'கீழ வட்டகை' என்றும், மேல்பால் உள்ள ஊர்களை 'மேலை வட்டகை' என்றும், வடபால் உள்ள ஊர்களை 'வடக்கு வட்டகை' என்றும் தென்பால் உள்ள ஊர்களை 'தெற்கு வட்டகை' என்றும் வகுத்துக் கூறுவர்.

கண்டனூர் மு. நா. சி. நா. வால் ரூபாய் பதினையாயிரம் (15,000) செலவில் விநாயகர் கோவில் திருப்பணி

செய்யப் பெற்றுளது. ஷியாரால் ரூபாய் பதினையாயிரம் (15,000) செலவில் பாடசாலை அமைக்கப் பெற்றுளது.

கோனபட்டு சு. மு. சு. வால் ரூபாய் பதினாயிரம் (10,000) செலவில் 'பசுமடம்' நிறுவப் பெற்றுளது.

எல்லா ஊர் நகரத்தார் பொதுவிலும் ரூபாய் இருபதினாயிரம் (20,000) செலவில் அன்னதான மடம் கட்டப் பெற்றுள்ளது. அதையடுத்து வேலாயுதசுவாமி கோவில் ரூபாய் ஒன்றரை லட்சம் (1,50,000) செலவில் திருப்பணி செய்யப் பெற்று, 10-9-1903-ல் கும்பாபிடேகம் செய்யப்பெற்றது.

ரூபாய் பதின்மூன்றாயிரம் (13,000) செலவில், தேவகோட்டை அழ. சுப. சு. வாலும், காசிச் சுவாமிகளாலும், அன்னதான மடம் மேற்பார்வையிலும் மூன்று திருநந்தனவனங்கள் ஏற்படுத்தப் பெற்றுள்ளன.

கோனபட்டு சிவா. பழநியப்ப செட்டியார், தாம் மேற்கொண்ட அறச் செயலுக்கு என ரூபாய் ஐயாயிரம் (5,000) செலவில் 'மகேசுவர பூசை நிலையம்' ஏற்படுத்தியுள்ளனர்.

தேவகோட்டை அள. சுப. சு. வால் மலையடிவாரத்தில் ரூபாய் இருபதினாயிரம் (20,000) செலவில் சரவணப் பொய்கை செம்மையாய்க் கட்டப் பெற்றுளது.

ரூபாய் முப்பத்தையாயிரம் (35,000) செலவில் வடக்கு வையாபுரிக் குளமும், ரூபாய் முப்பத்தையாயிரம் (35,000) செலவில் தெற்கு வையாபுரிக் குளமும் அமைக்கப் பெற்றுள்ளன.

ரூபாய் பதினையாயிரம் (15,000) செலவில் காரைக்குடி அண. சா. அண. சாமிநாதன் செட்டியார், அவர் அன்னை

வெள்ளச்சியாச்சி இவர்கள் முயற்சியால் நகரத்தார் பொருளுதவி கொண்டு, பிங்கள ஆண்டு தைத் திங்கள் 'சண்முக நதி' கட்டப் பெற்றுளது. கொத்தமங்கலம், ராயபுரம், பள்ளத்தூர், கானாடுகாத்தான், உ. சிறுவயல், பலவான்குடி, தேவகோட்டை, ராங்கியம், கீழச்சிவற் பட்டி, நேமத்தான்பட்டி, கடியாபட்டி, காரைக்குடி' ஆராவயல், அழகாபுரி, கோட்டையூர் நகரத்தார்களால் தத்தம் ஊருக்கெனத் தனித் தனி மடங்கள் நிறுவப் பெற் றுள்ளன. இவற்றின் மதிப்பு சுமார் மூன்று லட்சம் (3,00,000) ஆகும்.

ரூபாய் எழுபதினாயிரம் (70,000) செலவில், காரைக் குடி, அண. சா. அண. சாமிநாதன் செட்டியார் அவர் அன்னை வெள்ளச்சியாச்சி இவர்கள் முயற்சியால் நகரத் தார் பொருளுதவி கொண்டு பிங்கள ஆண்டு தைத் திங்கள் சண்முகநாதப் பெருமானுக்குத் தங்கக் கேடகம் செய்து வைக்கப் பெற்றுளது.

ரூபாய் முப்பத்தையாயிரம் (35,000) செலவில் 'மேற்கு மருதாபுரிக்குளம்' சீர்திருத்தப் பெற்றது.

இராமச்சந்திரபுரம் பி. கு. பி. சு., பி. கு. நா. வகை யினர் ரூபாய் இருபதினாயிரம் (20,000) செலவில் ஒரு மடம் கட்டியுள்ளனர்.

ரூபாய் பதினாயிரம் (10,000) செலவில் பாதரக்குடி மடமும், ரூபாய் பதினையாயிரம் (15,000) செலவில் கோவி லூர் மடமும் நிறுவப் பெற்றுள்ளன.

## 13. கோவிலூர்

சுவாமி பெயர் கொற்றவாளீசுவரர்
அம்மை பெயர் திருநெல்லை நாயகி

இவ்வூர் காரைக்குடிக்கு மேல்பால் இரண்டு கல் தொலேவில் உள்ளது.

கோவிலூர் மடாதிபதி 'ஆண்டவர்' என்ற முத்து ராமலிங்க சுவாமிகள் வேதாந்த மடத்தைப் பிரதிட்டை செய்தவர்கள்; அவர்கள், நெல்லேநாயகியம்மை கோவில் கருப்பக்கிரகம், அர்த்த மண்டபம், மகா மண்டபம், ராச கோபுரம் முதலியவற்றைச் செய்வித்தனர்.

அப்பால், அதன்பின் வந்த 'சிதம்பரையா' அவர்கள், சுவாமி சந்நிதியில் இருக்கிற திருக்குளத்தை ஆளோடி வைத்து, அழகான மைய மண்டபம் கட்டி, ரூபாய் எழு பதினுயிரம் (70,000) செலவில் மாற்றூர்க் கோவில் நகரத் தார்க்கு உரிமையாக்கினர்.

அதன் பின்வந்த ஸ்ரீ வீரப்பஞான தேசிகர் அவர்கள், பல திருப்பணிகளும், அம்மை கோவில் பழைய திருப்பணி யைப் பிரித்துக் கருங்கல் இழைப்புத் தேய்ப்புத் திருப்பணி யும் செய்து, அணியொட்டிக் கால் மண்டபம் விக்கிரக வேலேப்பாடுள்ளதாயும் அமைத்து, ஊரையழகு செய்து கட்டிடங்கள் கட்டுவித்து, பல சீர்த்திருத்தங்கள் செய் துள்ளனர்.

ஷியார் காலத்தில் ரூபாய் பத்து லட்சம் (10,00,000) செலவில் திருப்பணி செய்துள்ளனர்.

கீலக சித்திரை 11-ம் நாள் (23-4-1908) கும்பாபி டேகம் செய்யப் பெற்றது.

இக் கோவிலூரில், கோட்டையூர் மு. சி. வால் ரூபாய் ஐம்பதினுயிரம் (50,000) செலவில் யசுர்வேத பாடசாலே யும், அரிமளம் அ. செ. சு. வால் ரூபாய் இருபதினுயிரம்

(20,000) செலவில் சாமவேத சாத்திர பாடசாலையும், ஆண்டவர் முத்துராமலிங்க சுவாமியால் ரூபாய் மூன்று லட்சம் (3,00,000) செலவில் வேதாந்த மடமும், ரூபாய் ஐயாயிரம் (5,000) செலவில் காரைக்குடி சு. ராம. வால் திருநந்தனவனமும், ப. முரு. பொதுவில் ரூபாய் முப்பதினாயிரம் (30,000) செலவில், குடிதண்ணீர்க் குளம், பிள்ளையார் கோவில், திருநந்தனவனம் முதலியனவும், ராம. மு. வால் ரூபாய் பதினாயிரம் செலவில் பசுமடமும், அ. முத்துக் கருப்பன் செட்டியாரால் ரூபாய் ஐயாயிரம் (5,000) செலவில் தேனாற்றுக்குப் பாலமும் அமைக்கப் பெற்றுள்ளன.

## 14. கோட்டூர்

### நயினார் கோவில்

இது தேவகோட்டைக்குத் தென்மேற்கில் 4 கல் தொலைவில் உள்ளது.

தேவகோட்டை 'திண்ணன் செட்டியார் வகை' என்று சொல்லப்படுகிற திண்ணன் செட்டியார் (மூவ புருஷர்) பேரரும், வெள்ளையப்ப செட்டியார் புதல்வருமான மாயாண்டி செட்டியார் பல ஆண்டுகள் திருப்பணி செய்து வெகுதானிய வைகாசி 28-ம் நாள் (10-8-1818) முதற் கும்பாபிடேகம் செய்வித்தனர்.

பின்னர், ஷையார் பேரர் ஆ. நா. சிதம்பரம் செட்டியார், விக்கிரம சித்திரை 13-ம் நாள் (23-4-1880) 2-ம் கும்பாபிடேகம் செய்வித்தனர்.

அப்பால், ஷை மாயாண்டிச் செட்டியார் பேரர், வெ. ஆ. பழ. இராமநாதன் செட்டியார், ரௌத்திரி சித்திரை 13-ம்நாள் (25-4-1920) 3ம் கும்பாபிடேகம் செய்வித்தனர்.

இவ்வாறு 116 ஆண்டுகட்கு முன்னரே திருப்பணியில் விருப்புற்று, பெரும் பொருட் செலவில் கோவில் கட்டி, தலைமுறை தலை முறையாகக் கும்பாபிடேகம் செய்து கொண்டு வருதல், பொன்னெழுத்துக்களில் பொறிக்கத் தக்கனவாகும்.

இக் கோவில், திருக்குளம் முதலியவற்றிற்கு ரூபாய் இரண்டு லட்சம் (2,00,000) செலவிடப் பெற்றது.

## 15. கோட்டூர்

(புதுக்கோட்டைப் பகுதி)

கடியாபட்டி தீ. சொ. இராமசாமிச் செட்டியார் முருகப்ப செட்டியார் கிருஷ்ணப்ப செட்டியார் குடும்பத்தார்கள் கோவில் முழுமையும் கருங்கல் திருப்பணி செய்து, எதிரில் திருக்குளம், அந்தணர் உறையுள் அமைத்தும், ரூபாய் ஒரு லட்சத்துப் பதினோராயிரம் (1,11,000) செலவில் விபவ தை 9-ம் நாள் (22-1-1929) கும்பாபிடேகமும் செய்வித்தனர்.

## 16. கோட்டைவயல்

தேவகோட்டை ராம. அரு. அரு. ராம. அருணாசலம் செட்டியார் சுவாமி கோவிலையும், ஷையூர் நா. சேவு. சேவுகன் செட்டியார் அம்மை கோவிலையும், ஷையூர் உ. ராம. மெ. சுப்பிரமணியன் செட்டியார், நடராசர் கோவிலையும், ஷை யூர் ராம. மெ. சித. வைரவன் செட்டியார் விநாயகர் கோவிலையும், ஷையூர் கும. லெ. வகையினர் முருகன் கோவிலையும், இவ்வூர் இளவகை நகரத்தார் வைரவர் கோவிலையும், தேவகோட்டை கு. அரு. அழ. கருப்பன் செட்டியார், வெளிக் கோவில் பிள்ளையார் கோவிலையும்

திருப்பணி செய்துள்ளனர். எல்லாவற்றிற்கும் ரூபாய் எழுபத்தையாயிரம் (75,000) செலவிடப் பெற்றது.

## 17. சாக்கோட்டை

இவ்வூர் வீரசேகர சுவாமி கோவில் திருப்பணி தேவ கோட்டைச் செட்டியார் வீட்டாரால், உமையம்மை கோவில் கருப்பக்கிரகம், அர்த்த மண்டபம், மகாமண்டபம் இவற்றுடன் ரூபாய் ஒரு லட்சம் (1,00,000) செலவில் செய்யப்பெற்றுப் பார்த்திப தை 9-ம் நாள் (20-1-1886) கும்பாபிடேகம் நிறைவேறிற்று.

புதுவயல் நகரத்தார்களால் ரூபாய் ஐம்பத்து ஐயாயிரம் (55,000) செலவில், திருமாளிகைப் பத்திகள், மண்டபங்களின் திருப்பணிகளும், வினை. வீரப்ப செட்டியாரால் ரூபாய் எழுபத்தையாயிரம் (75,000) செலவில் வெளி மண்டபம், வடபால் மண்டபம் முதலிய திருப்பணிகளும், செய்யப்பெற்றுக் கும்பாபிடேகம் நிறைவேறிற்று.

புதுவயல் வீர. சா. குடும்பத்தாரால் ரூபாய் நாற்பத்தையாயிரம் (45,000) செலவில் வெளி ஊஞ்சல் மண்டபமும், வீரசேகரபுரம் செ. ராம. புரத்தாரால் ரூபாய் ஐம்பதினாயிரம் (50,000) செலவில் கோவிலுக்குள் உள்ள தென்புற மண்டபமும் அமைக்கப் பெற்றுள்ளன.

கண்டனூர் கு. மு., கு. அழ., கு. ப., கு. தெ., இவர்கள் பொதுவில் ரூபாய் முப்பதினாயிரம் (30,000) செலவில் அன்ன சத்திரம் நிறுவியுள்ளனர்.

கும. பொதுவினரும் சோழன் செட்டியாரும் ரூபாய் நாற்பதினாயிரம் (40,000) செலவில் சோழன் குளமும் தீர்த்த மண்டபமும் கட்டியுள்ளனர்.

## 18. செங்கரை

இவ்வூர் ராயவரத்திலிருந்து அரிமளத்திற்குப் போகிற சாலையில் தென்பால் உளது.

இடிந்தும் தகர்ந்தும் போன சிவன் கோவிலை ராயவரம் அ. மு. ராம. அப்புராமன் செட்டியார் முற்றும் புதிதாய்க் கட்டியும், திருமதில், விமானம், மண்டபம் அமைத்தும், ரூபாய் இருபத்தையாயிரம் (25,000) செலவில் 24-5-31ல் கும்பாபிடேகம் செய்வித்துள்ளார்.

ஷை குடும்பத்தார் ரூபாய் ஐயாயிரம் (5,000) செலவில் கோவில் அலுவலாளர்க்கு இல்லங்கள் அமைத்துள்ளனர்.

வெ. மு. குடும்பத்தாரால் ரூபாய் ஐயாயிரம் (5,000) செலவில் "நல்ல பிள்ளைப் பெற்றான் ஊருணி" கட்டப் பெற்றுள்ளது.

## 19. திருக்கோளக்குடி

இவ்வூர்க் கோவிலில் முன் மண்டபம், பூலாங்குறிச்சி ராம. பவ. பொதுவில் ரூபாய் பதினையாயிரம் (15,000) செலவில் அமைக்கப்பெற்று ஆனந்த வைகாசி 23-ம் நாள் (5-5-1914) கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

## 20. திருமெய்யம்

பெருமாள் கோவிலும் சிவன் கோவிலும் சேர்ந்து மலையடிவாரத்தில் ஓரே யிடத்தில் உள்ளன. மலையில் கல்வெட்டில் "பல்லவ அரசர்களில் மகேந்திர வர்மனுக்குப் பின்னர் நரசிம்ம மன்னனால் இக்கோவில் கட்டப்பெற்ற" தென்று குறிக்கப் பெற்றுளது.

சத்தியகிரிப் பெருமாள் கோவிலைப் பழுது பார்த்து, சீரணோத்தாரணம் செய்து, பெருமாளுக்கு வாசனைத் திரவியங்கள் தருவித்து மருந்து செய்து சாத்தி, தி. நா. முத்தையா செட்டியாரால், ரக்தாட்சி ஆவணி 31-ம் நாள் (15-9-1924) ரூபாய் பதினையாயிரம் (15,000) செலவில் மகா கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

பெருமாள் கோவிலுக்குள், இராமசுவாமி சந்நிதியை ரூபாய் இருபதினாயிரம் (20,000) செலவில் கல் திருப்பணி செய்து மண்டபம் கட்டி, காரைக்குடி, க. தெ. குடும்பத்தினர் தம் முன்னோராகிய கருப்பன் செட்டியார் உருவச் சிலையையும் அமைத்துள்ளனர். ஷையார் சில உற்சவங்களும் நடத்தி வருகின்றனர். பெருமாளுக்குப் படைத்த தயிரமுது, புளியமுது முதலியன தினமும் வெளியூர் மக்கட்கு அளிக்கப்பெற்று வருகிறது. இவ்வறச் செயல்களை நடத்தக் கோட்டைக்குள் 'பழைய விடுதி' ஒன்றும் 'புதிய விடுதி' ஒன்றும், அலுவலாளர் குடியிருக்க இரண்டு இல்லங்களும் ரூபாய் பன்னிரண்டாயிரம் (12,000) செலவில் அமைக்கப் பெற்றுள்ளன. ஷை கட்டளைக்காகச் சில கிராமங்கள் விடப்பெற்றுள்ளன.

ராஜராஜேசுவரி உடனுய பானுமதீசுவரர் கோவில், ராயவரம் வெ. மு. குடும்பத்தாரால் திருப்பணி செய்யப் பெற்றது. திருப்பணிச் செலவு ரூபாய் ஐம்பதினாயிரம் (50,000) ஆகும்.

ஷை கோவிலுக்கு அலங்கார மண்டபம், தகரக் கொட்டகை அமைக்கவும், சில வாகனங்கள் செய்யவும் ரூபாய் பதினையாயிரம் (15,000) செலவிடப் பெற்றது.

ஷையார், நகரத்தார் உதவியாலும், அரசினர் உதவியாலும், தம் பொருளாலும் ரூபாய் பன்னிரண்டாயிரம்

(12,000) செலவில் சுவாமி, அம்மை இருவருக்கும் தேர்கள் செய்து வைத்துள்ளனர்.

நா. நா. முத்துக்கருப்பன் செட்டியார், ரூபாய் மூவாயிரம் (3,000) செலவில் திருநந்தனவனமும், பள்ளத்தூர் ராம. மு. லெ. வகையினர் வேத பாடசாலையும், காரைக்குடி வெ. ராம. குடும்பத்தார் ரூபாய் பதினையாயிரம் (15,000) செலவில் பசுமடமும், ராயவரம் வெ. மு. குடும்பத்தார் ரூபாய் ஐம்பதினாயிரம் (50,000) செலவில் அன்ன சத்திரமும், ஷயார் ரூபாய் மூவாயிரம் (3,000) செலவில் ஊருணியும் அமைத்துள்ளனர்.

தீ. நா. முத்தையா செட்டியார் ரூபாய் ஐம்பதினாயிரம் (50,000) செலவில் கட்டிடங்கள் கட்டி, ரூபாய் பத்தாயிரம் (10,000) செலவில் நூல் நிலையமும் அமைத்து "சத்திய மூர்த்தி உயர்நிலைப் பள்ளி" நடத்தி வந்திருக்கின்றனர் தற்போது அரசினரால் "செகண்டரி பள்ளி"யாக நடத்தப்பெற்று வருகின்றது.

தீ. நா. மு. வால் ரூபாய் இருபதினாயிரம் (20,000) செலவில் பெரிய ஊருணி கற்படிகளுடன் அமைக்கப் பெற்றுள்ளது.

தீ. நா. மு. வால் ரூபாய் பதினையாயிரம் (15,000) செலவில் வழிப் போக்கர் தங்குதற்குரிய இடம், நகரத்தால் கட்டப்பெற்றுள்ளது.

சொ. தீ. நா., சொ. முரு. முரு., சொ. சி. கி., சொ. ராம. ராம., இந்த நான்கு குடும்பத்தார்களும் ரூபாய் முப்பதினாயிரம் (30,000) செலவில் புலிவலம் சத்திரமும், ரூபாய் ஐம்பதினாயிரம் (50,000) செலவில், ஊருணி,

பிள்ளையார் கோவில், உற்சவ மண்டபம், அலுவலாளர் இல்லங்கள் முதலியன அமைத்துள்ளனர்.

காரைக்குடி மெ. முரு. இராமநாதன் செட்டியார் ரூபாய் முப்பதினுயிரம் (30,000) செலவில் "சத்திய புட்கரணி"யைக் கற்கட்டிடமாகக் கட்டிக், கரையில் 16 கால் மண்டபம் வெள்ளைக் கல்லால் கட்டியுள்ளனர்.

## 21. துவார்

### அய்யனுர்

### வள்ளி நாயகர் கோவில்

இக் கோவில், பூலாங்குறிச்சி ராம. ப. வ. பொதுவில் ரூபாய் பதினுயிரம் (10,000) செலவில் சீரணோத்தாரணம் செய்து காளயுக்தி ஆண்டு ஆனித் திங்கள் 31-ம் நாள் (16-9-1918) கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

## 22. நயினுர் கோவில்

### (நயினுர்பட்டி)

இவ்வூர்க் கோவில், பட்டமங்கலத்திற்கு வடபால் ஒரு கல் தொலைவில், புதுச் சாலைக்குக் கீழ்பால் உளது.

இப்பழங் கோவிலை, பட்டமங்கலம் வீர. அ. சொக்கலிங்கம் செட்டியார் வகையினர் ரூபாய் முப்பதினுயிரம் (30,000) செலவில் புதுப்பித்து, சந்நிதிக் கொட்டகை, மடைப் பள்ளி புதிதாய் அமைத்து, திருப்பணி முற்றுவித்து, துன்மதி யாண்டில் (1922) கும்பாபிடேகம் செய்வித்தனர். வழிபாடு செய்ய வருபவர் தங்குவதற்கு விடுதியும் அமைத்துள்ளனர்.

வீர. அ. சொ. வகையினர், ரூபாய் முப்பதினுயிரம் (30,000) செலவில், பசுமடம், திருநந்தனவனம், திருக்குளம் முதலியன அமைத்துள்ளனர்.

## 23. நல்லிபட்டி

இவ்வூர், கண்டவராயன் பட்டிக்குச் சற்று வடக்கே நான்கு பர்லாங்கு தொலைவில் உள்ளது.

மிகப் பழைமையா யிருந்த இவ்வூர்ச் சிவன் கோவிலை, பூலாங்குறிச்சி ராம. ப. வ. குடும்பத்தார், பிரித்துக் கொணர்ந்து, நல்லிபட்டி ஊர் நடுவண் ரூபாய் பதினெண்ணாயிரம் (18,000) செலவில் அழகுறக் கட்டிப் பிலவங்க ஞூ தை மீ த்தில் (1908 ஜனவரி) கும்பாபிடேகம் செய்வித்தனர். ஷை கோவிலுக்கு மானிபமாக 10 ஏக்கர் நிலம் அளித்துள்ளனர்.

## 24. நெய்வாசல்

இது, விராமதிக்கு அணிமையில் உள்ளது. இங்கு 'உலக நாயகியம்மை' என்னும் பிடாரி கோவில் உண்டு. காரைக்குடியில் 'விராமதியார்' என்று சொல்லப்பெறும் நகரத்தார், இவ்வம்மையைக் குலதெய்வமாகக் கொண்டாடி வந்திருக்கின்றனர்.

இவ்வம்மை கோவிலை, அ. உ. மெய்யப்ப செட்டியார், தாம் ஒருவரே ரூபாய் ஒரு லட்சமும், (1,00,000) அடுத்த உரிமைப் பங்காளிகள் ரூபாய் இருபதினாயிரமும் (20,000) செலவிட்டு, கருப்பக்கிரகம், அர்த்தமண்டபம், மகா மண்டபம், திருமதில், மடைப்பள்ளி, ராச கோபுரம், திருக்குளம், விடுதி முதலியவற்றுடன் திருப்பணி செய்து ரூபாய் இருபத்தி மூவாயிரம் (23,000) செலவில் பிரமோதூத ஆனி 23-ம் நாள் (7-7-1930) கும்பாபிடேகம் செய்வித்தனர்.

## 25. பிடாரனேந்தல்

(திருவாடானை உட்கிடை)

இக்கோவில் முழுமையும் திருமதில் உள்பட, தேவ கோட்டை ராம. அரு. அரு. ராம. அருணசலம் செட்டி யாரால் புதிதாகக் கட்டப்பெற்று பிரசோற்பத்தி, சித் திரை 9-ம் நாள் (22-4-1931) கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

## 26. பில்லமங்கலம்

இவ்வூர் கீழச்சிவற்பட்டிக்கு அணிமையில் உள்ளது.

மிகப் புராதனமாயிருந்த சிவாலயத்தை ஆத்தன்குடி ராம. கா. அரு. அருணசலம் செட்டியார் ரூபாய் பதினை யாயிரம் (15,000) செலவில் புதுக்கி, 20 ஆண்டுகளுக்கு முன் கும்பாபிடேகம் செய்வித்துள்ளார். ஆண்டு தோறும் ரூபாய் ஆயிரம் (1,000) செலவில் அவர்கள் குடும்பத்தினர் மேற்பார்வையில் இருந்து வருகிறது.

ரூபாய் ஐயாயிரம் (5,000) செலவில் திருநந்தனவனம் அமைக்கப் பெற்றுள்ளது.

ரூபாய் ஒரு லட்சம் (1,00,000) செலவில், ஷை வகைப் பங்காளிகளால், 'பி. கு. அன்ன சத்திரம்' அமைக்கப் பெற்றுள்ளது.

## 27. பேரையூர்

இத்தலம் நற்சாந்துபட்டியிலிருந்து புதுக்கோட்டை போகும் சாலை வழியில் 2 கல் தொலைவில் உள்ளது.

சுவாமி, அம்மைக்கு நற்சாந்துபட்டி பெ. ராம. இராமன் செட்டியார் ரூபாய் பன்னீராயிரம் (12,000) செலவில் தேர் செய்து வைத்துள்ளனர்.

பெ. ராம. இராமன் செட்டியார், தம் முன்னோரால் கட்டப்பெற்றிருந்த "பொய்யாத விநாயகர் கோவிலை" புதுத் திருப்பணி செய்தும், திருநந்தனவனமும், திருக்குளம் அமைத்தும், பூசகர் முதலாயினோர்க்கு இல்லங்கள் அமைத்தும், ரூபாய் அறுபதினாயிரம் (60,000) செலவு செய்திருக்கின்றார். விபவ ஆவணி 19-ம் நாள் (3-8-1928) ரூபாய் பதினாயிரம் (10,000) செலவில் விநாயகர் கோவிற் கும்பாபிடேகம் நடைபெற்றது.

தாழம்பட்டிக் குடியிருப்பிலிருந்து பேரையூர் வரை ஒரு கல் அளவு ரூபாய் ஐயாயிரம் (5,000) செலவில், பெ. ராம. இராமன் செட்டியாரால் கற்சாலை (Road) அமைக்கப் பெற்றுளது.

'ஒரு கொம்பு மாமலை' என்னும் மலைமீது உள்ள சுப்பிரமணிய சுவாமி கோவில், வீ. மு. வீர. குடும்பத்தாரால் ரூபாய் இருபத்தையாயிரம் (25,000) செலவிட்டுக் கட்டப் பெற்றுளது.

ஷை மலையின் கீழுள்ள சிவாலயமும், திருக்குளமும் சாத்தன் செட்டியார் குடும்பத்தாரால் ரூபாய் முப்பதினாயிரம் (30,000) செலவில் கட்டப் பெற்றுள்ளன.

நற்சாந்துபட்டி, பெ. ராம. குடும்பத்தாரால் ரூபாய் ஐயாயிரம் (5,000) செலவில், மலைக்குப் போய்வரப் படியும் சுனையும் அமைக்கப் பெற்றுள்ளன.

## 28. மலைக்கொழுந்தீசர் கோவில்

இக் கோவில் ராயவரத்துக்குச் சற்றுத் தென்பால் ஒரு சிறு மலையில் உளது.

இக்கோவிலுக்கு, ராயவரம் சா. த. க. கருப்பன் செட்டியார் ரூபாய் இருபதினாயிரம் (20,000) செலவில் தருமம் செய்துள்ளனர். ஷையார் தம்பி அழகப்ப செட்டியார், கோவில் அலுவலாளர்க்கு இல்லங்களும், வாகனம் வைத்தற்குக் கட்டிடங்களும், வெள்ளைக் கற்சல்லியால் சுனைக்குளமும் அமைத்து ரூபாய் நாற்பதினாயிரம் (40,000) வரை செலவிட் டிருக்கின்றார்.

1931-ம் ஆண்டில் ரூபாய் எழாயிரம் (7,000) செலவு செய்து கும்பாபிடேகம் செய்யப் பெற்றுளது.

உபயக்காரர் பலர் ரூபாய் முப்பதினாயிரம் (30,000) வரை மூலதனம் வைத்திருக்கின்றனர்.

ரூபாய் ஐயாயிரம் (5,000) மதிப்பில் வெள்ளி இடப வாகனமும், ரூபாய் பதினாயிரம் (10,000) மதிப்பில் தங்கக் கவசமும், நகைகளும் உள்ளன.

கானாடுகாத்தான் சா. அ. நா. சு. சுப்பிரமணியன் செட்டியார் ரூபாய் பதினையாயிரம் (15,000) செலவில் பசு மடமும், ராயவரம் அரு. சா. சாத்தப்ப செட்டியார் ரூபாய் நான்காயிரம் (4,000) செலவில் திருநந்தனவனமும் நிறுவியுள்ளனர்.

## 29. மானாமதுரை

ஒக்கூர் சி. கரு. சி. கரு. ஆதப்ப செட்டியாரால், "ஒக்கூர் வெள்ளையன் செட்டியார் உயர்நிலைப் பள்ளி" ரூபாய் ஒரு லட்சம் (1,00,000) கட்டிடம், மூலதனம் வகைகளிற் செலவிடப்பெற்று, நிறுவப் பெற்றுள்ளது.

அமராவதிபுதூர் வெ. ராம. ஆவுடையப்ப செட்டியார், நாட்டரசன் கோட்டை ஆ. சுப. சு. சுப்பிரமணியன்

செட்டியார் ஆகிய இவர்களால் ரூபாய் இருபத்தி மூன்றுயிரம் (23,000) செலவில் பசுமடம் நிறுவப் பெற்றுள்ளது.

## 30. முறையூர்

இவ்வூர்ச் சிவன் கோவில் முறையூர் பெரி. பழ. இராமன் செட்டியார் குடும்பத்தினரால் ரூபாய் மூன்று லட்சம் (3,00,000) செலவில் திருப்பணி செய்யப் பெற்று ரூபாய் பதினாயிரம் (10,000) செலவில் அட்சய ஆனி 26-ம் நாள் (10-6-1926) கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

ஷை பெரி. பழ. குடும்பத்தினரால், திருப்புத்தூருக்கு மேல்பால் மதுரைச் சாலையில் 8-வது கல்லில் உள்ள 'சத்துரு சங்காரக் கோட்டை'யில் ஒரு அன்ன சத்திரம் ரூபாய் இருபத்தையாயிரம் (25,000) செலவில் கல் மண்டபமாகக் கட்டப்பெற்று நடைபெற்று வருகின்றது. இக்கிராமத்தையே சத்திரத்திற்கு விடப்பெற்றுள்ளது.

## 31. மூலங்குடி (பெருமாள் கோவில்)

புதுப்பட்டி ப. ராம. இராமன் செட்டியார் ரூபாய் ஐம்பதினாயிரம் (50,000) செலவில் இக்கோவில் திருப்பணி செய்து முடித்து, குரோதன ஆவணி 23-ம் நாள் (7-9-1925) கும்பாபிடேகம் செய்வித்தனர்.

ஷை ஊர் ஐயனார் கோவில் திருப்பணியைக் கோட்டையூர் மெ. கரு. குடும்பத்தினர், ஷை கோவில் வழிபாடு புரியும் நகரத்தார்களிடம் பொருளுதவி பெற்று ரூபாய் ஐம்பதினாயிரம் (50,000) செலவில் நிறைவேற்றி 1881-ம் ஆண்டில் ரூபாய் ஐயாயிரம் (5,000) செலவில் கும்பாபிடேகம் செய்வித்தனர்.

## 32. வன்னியன் சூரைக்குடி

சுவாமி பெயர் சுந்தரேசுவரர்
அம்மை பெயர் மீனாட்சியம்மை

மிகப் புராதனமான இவ்வூர்க் கோவில் திருப்பணி, காரைக்குடி முரு. லெ. கிருஷ்னன் செட்டியாரால் திருமதில் உள்பட மிகச் சிறப்பாக ரூபாய் மூன்று லட்சம் (3,00,000) செலவில் செய்யப்பெற்றுக் கும்பாபிடேகம் நிறைவேறிற்று.

## 33. வெளிமுத்தி

தேவகோட்டை வைரவஐயா என்பவரால் பல திருப்பணிகள் செய்யப்பெற்று, மெ. சித. வைரவன் செட்டியார் முதலானோரால் கும்பாபிடேகம் நடத்தப் பெற்றது.

பின்னர் ஷை வைரவன் செட்டியார் பேரர் சிதம்பரம் செட்டியாரால் ரூபாய் ஐம்பதினுயிரம் (50,000) செலவில் மேலும் பல திருப்பணிகள் செய்யப்பெற்றுப் பராபவ ஆனி 26-ம் நாள் (9-7-1906) கும்பாபிடேகம் நிறைவேறிற்று.

ஷையார் இரண்டாவது பேரர் வைரவன் செட்டியரால், பிரபவ ஐப்பசி 21-ம் நாள் (6-11-1928) கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.



"திருமகள் மணமகன் பெருமணம் மலிதரும்
நாவியங் கமலப் பூவினிற் பிறந்த
ஆழ்கடல் சூழ்ந்த கேழ்கிளர் வையத்து
உற்பவிக் கின்ற பற்பல உயிர்களும்"

தம்மை எவ்வாற்றானும் வழிபட்டு உய்யும்பொருட்டுப் பெருங் கருணைத் தடங்கடலாகிய சிவபிரான் ஆங்காங்கு நதிக் கரைகளிலும், சமுத்திரநதி சங்கமங்களிலும், சமுத்திர சங்கமங்களிலும், ஆற்றிடைக் குறைகளிலும், மலையுச்சிகளிலும், மலையடிவாரங்களிலும், ஆரணியங்களிலும், தருமூலங்களிலும், அருவுருவமாகிய சிவலிங்கமாய் முளைத்து விளங்கியருளினர்.

அவைகளே 'சுயம்புலிங்கம்' எனப்படும். மேற்கண்ட புனிதத் தலங்களில் இருடியரும், முனிவரும், செபம், தவம், நிட்டை, ஆராதனம், யோகம் முதலியவற்றை இடையூறின்றிச் செய்யும் பொருட்டு, பிரமசரியம், கிரகத்தம், வானப்பிரத்தம் முதலிய நிலைகளை மேற்கொண்டு, இலைக்குடில்களில் நித்தர்களாய் வாழ்ந்து வந்தனர்.

இவ்விலிங்கங்களின் பெருமையும், இருடியர்களின் கீர்த்தியும் எங்கும் பரவிய பின்னர், முப்பத்து முக்கோடி தேவர்களும், நாற்பத்தெண்ணாயிரம் முனிவர்களும் "சிவலிங்கப் பிரதிட்டையும், சிவாராதனமும், சிவகைங்கரியமுமே சிவபிரானுக்குத் திருவுள்ளம் உவக்கும் செயல்கள்" என்று தேறிப் புனிதத் தலங்களில் எல்லாம் சிவப் பிரதிட்டை செய்தனர்.

இமயமலை முதல் குமரிமுனை வரையும், பெரும்பாலும் சிவலிங்கங்களே விளங்கின. இதனைக் கண்ணுற்ற, அரிச்

சந்திரன், நளன், முசுகுந்தன், புரூரவன், கார்த்தவீரியன் முதலிய சக்ரவர்த்திகள் பக்திமிகுந்து திருக்கோவில்களைக் காலதேசத்திற் கேற்ற வண்ணம், செங்கல்லாலும், கருங்கல்லாலும், மரத்தாலும் சிவாகம விதிப்படி கட்டியிருக்கின்றனர். நித்திய நைமித்திக விசேடங்களையும் குறைவற நடத்தி வந்திருக்கின்றனர். தங்கள் தலைநகரை அந்தத் தலங்களிலேனும், அன்றி அதற்கு அணிமையிலேனும் அமைத்துக் கொண்டிருக்கின்றனர்.

பின்னர், அச்சக்கரவர்த்திகளுக்குத் திறை செலுத்தும் சிற்றரசர்களும், குறுநில மன்னர்களும், காடெறிந்து நாடாக்கித் தலங்களை உண்டாக்கி யுள்ளனர்.

"ஒவ்வொரு காலங்களில், கங்கை முதல் கன்னி முனை வரைத் தனியரசு செலுத்தியவர், தொண்டைமான் சக்ரவர்த்திகளும், பல்லவர்களும், சோழ மன்னர்களும் பாண்டிய வேந்தர்களும், சேர அரசர்களும் பலர் இருந்திருக்கின்றனர்" என்று அவ்வவர் கட்டிய கோவில்களில் வெட்டப்பெற்ற கல் வெட்டுக்களால் அறியப் படுகிறது.

மேலும் அதி தீவிரமாய் முறுகி வளர்ந்த பத்திச் செல்வர்க்குக் கன்றின் நடுத் தறியிலும், கூடார முளையிலும், உடை வாளிலும், சிவலிங்கமாகத் தோன்றிக் காட்சியளித்து, ஆங்காங்கு அழகான கோவில்களும் அமைக்கப் பெற்றுள்ளன.

சேர - சோழ - பாண்டியர், தங்கள் தங்கள் நாட்டிலுள்ள கோவில்கள், வௌவால்கள் முதலியவற்றால் தூய்மை கெடாதிருக்க மேற்பார்த்துக் கொள்ளவும், விமான ஆவரணங்களில் முளைக்கும் செடிகளை அவ்வப்போது வெட்டி யெறியவும், 'வௌவாலடி மானிபம்'

'திருவரசு வெட்டி மானிபம்' என எண்ணற்ற நன்செய் புன்செய்கள் விட்டிருக்கின்றனர்.

கடைசியாக அரசு புரிந்தவர்களில் சோழர்களே நாள் ஒன்றுக்கு ஒரு கோவில் கட்டி நாடோறும் கும்பாபி டேகம் செய்தவர் ஆவர்.

"இத்தகைய சோழர் கோவில்கள் தற்காலம் இடிந் தும், தகர்ந்தும், பாழடைந்தும், பூசையின்றியும் பதினுயி ரக் கணக்கில் உள்ளன" என்று தஞ்சை மாவட்டத்தில் கணக்கிட்டிருக்கின்றனர்.

சோழ நாட்டில், திருஞான சம்பந்தர், திருநாவுக்கர சர், சுந்தரமூர்த்தி இம் மூவர்களாலும் பாடல் பெற்ற தலங்கள், காவிரி வட கரையில் உள்ளது 63, தென் கரை யில் உள்ளது 127 ஆக நூற்றுத் தொண்ணூறு (190) தவிர வேறு எத்தனையோ தலங்கள் இம் மூவர்களாலும் பாடல் பெற்றிருத்தல் வேண்டும் என்பது நம் அருட் செல்வச் சேக்கிழார் பெரிய புராணத்தாலும் உணரக் கிடக்கின்றது.

பாண்டிய மன்னர்களும் சோழர்கள் போல் கோவில் கள் கட்டாவிடினும், அடுத்த படியாகக் கோவில் எடுப் பித்தவர்கள் ஆவர். மதுரை மாவட்டம், இராமநாதபுரம் மாவட்டங்களில் அழிந்தவை போக இருப்பவை ஆயிரம் கோவில்கள் என்று மதிப்பிட்டிருக்கின்றனர். அவை பெரும்பாலும் இராமநாதபுரம் சீமையிலும் சிவகெங்கைச் சீமையிலுமே உள்ளன.

சேர அரசாகிய மலையாளத்தில், திருவாங்கூர், கொச் சின் முதலான அரசுரிமை வரம்பிற்குட்பட்ட கோவில்கள் பெரும்பாலும் மரக் கோவில்களேயாகும். அரசியலார்

நேரே மேற்பார்க்கின்ற கோவில்கள் ஆதலின் சேர நாட்டில் பாழான கோவில்கள் காண்பது மிக அரிது.

இவ்விதமாக, காசி முதல் கன்னியாகுமரி வரை எத்தனையோ ஆயிரங் கோவில்களில், எல்லா நாடுகளிலும் சேர்ந்து 274 தலங்களே செம்மையாய் இருக்கின்றன.

மகம்மதியர் ஆளுகையில் பல கோவில்கள் பாழாக்கப் பட்டன. அவ்வரசு அழிந்த பின்னர், விசயநகர மன்னர்களும், அவர்களுக்கு உட்பட்ட நாயக்க மரபினரும், பழங் கோவில்களைப் பாதுகாத்ததோடன்றிப் புதிது புதிதாய்ப் பெரிது பெரிதாய்ச் சைவ வைணவக் கோவில்களையும் கட்டினர்.

பின்னர் ஆங்கில அரசாங்கத்தார், எல்லாக் கோவில்களையும், அந்தந்த மாவட்டத்தின் கலக்டர்களின் அதிகார வரம்புக் குட்படுத்தி மேற்பார்த்து வந்தமையால், கோவிற் காரியங்களும் உற்சவம் முதலியனவும் செம்மையாய் நடைபெற்று வந்தன என்பது, பழைய ஆதாரவுகளால் தெரிய வருகின்றது.

சில நிலக் கிழார்களும், குருக்கள்மார்களும் தங்கள் தங்கள் சுதந்திரக் கோவில்கள் என்று, வருவாயைக் கொண்டு வயிறார உண்டு பாழாக்கிய கோவில்கள் எண்ணற்றன.

கோவில்களின் சீர்கேடான நிலையை நீக்கும் பொருட்டு, சிவபிரானே நாட்டுக்கோட்டை நகரத்தார்களின் உள்ளத்தில் புகுந்து திருப்பணி செய்யத் திருவுள்ளம் பற்றியருளினர்.

அது முதற்கொண்டு பல ஆண்டுகளாக, நகரத்தார்கள் சைவ சமயத்தையே மேற்கொண்டு, விபூதி உருத்தி

ாக்கம், பஞ்சாட்சரம், சிவாலய தரிசனம் முதலியவற்றில் பற்றுடையவராயும், சிதம்பர தரிசனத்திற்கும், காவிரி நீராடலுக்கும் அடிக்கடி சென்று வருபவர்களாயும், சோழ நாட்டில் காவிரிப்பூம் பட்டினத்தில் நெடுங்காலம் வாழ்ந்து வந்தவர்களாயும், 'செல்வம் பெற்றதன் பயன் சிவதருமம் புரிதலே' என்பதைச் செவ்வனம் உணர்ந்தவர்களாயும் இருந்தமையால், சோழ நாட்டுக் கோவில்களையும் திருப்பணி செய்யப் பேரார்வம் கொண்டனர்.

திருப்பணி தொடங்கியது முதல், வியாபார இலாபமும், குடும்ப விருத்தியும், பல்வகை நலனும் மென்மேலும் பெருகின. அதனாலேயே பற்பல திருப்பணிகள் செய்ததுடன், அன்ன சத்திரங்கள், வேத பாடசாலைகள், குருபூசை மடங்கள், பசுமடங்கள், திருநந்தனவனங்கள், தண்ணீர்ப் பந்தர்கள், திருக்குளங்கள், தேவார ஆகம பாடசாலைகள் முதலிய எண்ணற்ற அறச் செயல்களை நம் தனவைசிய மரபினர் செய்து வருகின்றனர். இவர்கள் காசி முதல் கன்னியாகுமரி வரை சிறந்த பல தருமங்கள் செய்துள்ளனர். இவற்றிற்கு எத்தனையோ கோடிகள் செலவிடப் பெற்றிருக்கும் என்பது சொல்லாமலே விளங்கும்.

நகரத்தார்கள் வட நாடுகளிலும் சோழ நாடு, பாண்டி நாடு, நடு நாடு, தொண்டை நாடுகளிலும் செய்த அறச் செயல்கள் இனி முறையே விளக்கப் பெறும்.

---

# நகரத்தார் வடநாடுகளிற் செய்த அறச் செயல்கள்

---

## ஸ்ரீ காசி

நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் முதலாவதாகத் தொழில் செய்யத் தொடங்கிய ஊர்களில் கல்கத்தாவும் ஒன்று.

சுமார் 150-ஆண்டுகளுக்கு முன், நகரத்தார்கள் கல்கத்தா வந்து 'சிங்கார முருகேசர்' ஆலயத்தை நிறுவி, எல்லோரும் அரிசி ஏற்றுமதி வாணிபம் செய்து வந்தனர். கடைகள் நூற்றைம்பது வரை இருந்தன. இவர்களை அந்நிய நாட்டு வியாபாரச் சங்கங்களும், ஆங்கிலக் கம்பெனிகளும் மிகவும் கௌரவித்து வந்தன. இவர்கள் சிறப்பு நோக்கி, கல்கத்தாவில் பெருஞ் செல்வராயிருந்த "மோதிலால் ஷெல்லி" என்பவர் அவருடைய சொந்தச் சிவன்கோவிலையும் நகரத்தார்களிடம் ஒப்புவித்து, தருமத்தை என்றும் விடாது நடத்திவரச் செய்திருக்கிறார். தற்போது அக்கோவிலும் நகரத்தார் மேற்பார்வையிலேயே நடந்துவருகின்றது.

எல்லாக் கடைகளிலிருந்தும் ஏற்றுமதி செய்யும் சரக்குகளுக்குக் கப்பல் கட்டணத்திற்காகச் செலுத்தும் தொகையில் ரூ. 100க்கு 5-வீதம் ஆண்டிறுதியில் கப்பல் கம்பெனியிலிருந்து திரும்பப் பெறும் தொகையை, தருமப் பொதுவுக்கென்றே தீர்மானித்து வைத்திருந்தனர். இவ்

வகையில் ஆண்டு ஒன்றுக்கு ரூபாய் இருபத்தையாயிரம் (25,000) வரை வருவாய் வந்து கொண்டிருந்தது.

காசிப் பெருந்தலத்தில் இத்தொகையைச் செலவிடக் கருதி, காசிக்குச் சென்று ஓரில்லம் அமைத்து, அதி லிருந்துகொண்டு "சிவனிரவு" முதலிய விசேட நாட்களில் விசுவநாதருக்கு அபிடேகங்களும், ஏழைகளுக்கு உணவளித்தலும் நடத்தி வந்தனர். இவ்வாறு 50 ஆண்டு கள் நடைபெற்றன. 1863-ம் ஆண்டில், "இந்துஸ்தானி கோஷாயி சாதுக்கள் மடம்" ஒன்றை ரூபாய் ஏழாயிரத் துக்கு (7,000) வாங்கிப் புதுப்பித்து, அன்று முதல் துண்டி விநாயகர், விசுவநாதர், விசாலாட்சி, அன்னபூரணி, கால பைரவர், முதலிய கடவுளர்க்குப் பூசைகளும், சாதுக்க ளுக்கு அமுது படியும் நிலையாய் நடத்தி வந்தனர்.

இவ்வாறு நடந்து வருகையில், கல்கத்தாவிலும் தொழில் முறைகள் மிகப் பெருகி, அவ்வூர் மகமையும், கப்பற் கம்பெனியார் தந்த தொகையும் சேர்ந்து ஆண்டு ஒன்றுக்கு ரூபாய் ஐம்பதாயிரம் (50,000) வரை வருவாய் வரத் தொடங்கிற்று. அதற்கிணங்கக் காசியில் சத்திரக் கட்டிடத்தையும் தருமத்தையும் விருத்தியாக்கினர். 'நக ரேசுவரர்' 'நகரேசுவரி' என்ற மூர்த்திகளைத் தாபித்து அதற்காக ரூபாய் ஒரு லட்சம் (1,00,000) செலவிட்டு, நம் நாட்டுக் கோவிலைப் போற் கல் திருப்பணி செய்தும், விசா லாட்சியம்மை கோவிற் பூசை முதலிய சுதந்திரங்கள் பெற்று, அதற்கு ரூபாய் ஒரு லட்சம் (1,00,000) செல வில் திருப்பணி செய்தும் உள்ளார்கள்.

இவ்வாறு காசியில் 'அறநிலையம்' ஏற்பட்ட பின்னர், பிரயாகை, கயை, அயோத்தி, தாடகேசுவரம், காளிகாட்

முதலிய முக்கிய தலங்களிலும் சொந்தமாக இடம் வாங்கி, கட்டிடங்களும் கட்டி, அறச் செயல்கள் தொடங்கப் பெற்று, சிறப்பாக நடைபெற்று வருகின்றன.

காசியில் 24-8-1863 முதல் விசுவேசருக்குத் திருவனந்தல், உச்சிக் காலம், அர்த்த சாமம் என்ற முக்காலப் பூசைகளும், மகந்து அனுமதி பெற்று, சிறப்பாகத் தொடர்ந்து நடைபெற்று வருகின்றன.

அன்ன சத்திரத்தில், அந்தணர் இனம் 100, மிகுந்த ஏழைகள் இனம் 200, நோயாளர், மாணவர் இனம் 50, ஆக (350) முந்நூற்றைம்பதின்மர்க்கு நாள் தோறும் உணவு அளிக்கப் பெற்று வருகின்றது. அயோத்தி, பிரயாகை முதலிய தலங்களிலும், ஏழை மக்களுக்கும், யாத்திரை செல்வோர்க்கும் உணவு அளிக்கப் பெறுகிறது.

மேற் குறிப்பிட்ட எல்லா அறச் செயல்களும், ஆண்டு ஒன்றுக்கு ரூபாய் நாற்பத்தையாயிரம் (45,000) செலவிலும், சில சமயங்களில் ரூபாய் அறுபதாயிரம் (60,000) செலவிலும் நடைபெற்று வருகின்றன. 1923-ம் ஆண்டு வரை வங்காளம் நகரத்தார்கள் மிகச் சிறப்புடன் நடத்தி வந்து சென்ற குரோதன ஆண்டில் (1923) ரெங்கோன் நகரத்தார்களிடம் ஒப்புவிக்கப் பெற்று அவர்கள் பார்வையில் சிறப்பாக நடைபெற்று வருகின்றன.

இச்சத்திரம், கோட்டையூர் வெ. சி. அ. சின்ன அழகப்பையா, கானடுகாத்தான் சா. ராம. மு. முத்தையா ஐயா, அமராவதிபுதூர் வயி. லெட்சுமண ஐயா ஆகிய மூவரும், கால் நடையாக இராமேச்சுரம் சென்று மிருத்திகை எடுத்து வந்து காசிக்குச் சென்றிருந்த காலத்தில், அவர்கள் முயற்சியால் நிறுவப் பெற்றது.

நகரத்தார் சத்திரங்களின் கட்டிட மதிப்பு வருமாறு :—

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | ஸ்ரீ காசி | ... | ரூ. | 3,00,000/- |
| 2. | பிரயாகை | ... | ரூ. | 50,000/- |
| 3. | அயோத்தி | ... | ரூ. | 50,000/- |
| 4. | கயா | ... | ரூ. | 50,000/- |
| 5. | தாடகேசுவரம் | ... | ரூ. | 15,000/- |
| 6. | காளிகாட் | ... | ரூ. | 4,00,000/- |
| 7. | கோதாவரி | ... | ரூ. | 20,000/- |
| 8. | நாஸிக்பஞ்சவடி | ... | ரூ. | 50,000/- |

எல்லாத் தலங்களிலுமுள்ள கட்டிடங்கள், சற்றேறக் குறைய ரூபாய் பத்து லட்சங்கள் (10,00,000) ஆகும்.

நகரத்தார் தருமமாக நாள் ஒன்றுக்கு 75 பட்டணம் படி பால், உச்சிக் காலத்தும் அர்த்த சாமத்தும் விசுவேசுவருக்கு அபிடேகம் செய்யப் பெறுகிறது.

மேற்கண்ட எல்லாத் தலங்களிலும், திருநந்தனவனங்கள் உள்ளன.

# நகரத்தார் சோழ நாட்டிற் செய்த அறச் செயல்கள்

---

## சோழநாடு—காவிரி வடகரைத் தலங்கள்

### 1. கோவில்

(சிதம்பரம்)

இதில் உள்ள சிற்சபையாகிய பொன்னம்பலம் ஆதியில் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் இரண்யவர்ம சக்ரவர்த்தியால் இனிது இயற்றப் பெற்றது. அப்பால் பல சோழ மன்னர்களால் புதுப்பிக்கப் பெற்றது.

இத்தகைய பெருமை வாய்ந்த அப் பொன்னம்பலமும், அதைச் சூழ்ந்த கோவில் முதலியனவும் பழமையுற்றிருந்தது கண்டு, நடராசர் திருவருளால், கானுடுகாத்தான் சா. ராம. முத்தையா செட்டியார் திருவுள்ளத்தில் திருப்பணி செய்தல் வேண்டும் என்ற எண்ணம் 1878-ம் ஆண்டில் உண்டாயிற்று.

1879-ம் ஆண்டில் சா. ராம. முத்தையா செட்டியார், தம் வகையினர் குடும்பப் பொருளாலும், பல ஊர் நகரத்தார்களின் பொருளுதவியாலும், 'முக்குருணி அரிசிப் பிள்ளையார் கோவில்' முழுதும் புதிதாய்க் கட்டி, சிற்சபையில் பொற்றகடுகள் வேய்ந்து, இரண்டாம் பிரகாரத்தில் விசாலமான அணியொட்டிக் கால்மண்டபம் நாற்புறங்களிலும் புதிதாய் இயற்றி, திருமூலட்டானம் சுவாமி

கோவில், அம்மை கோவில்கள், ஆயிரக் கால் மண்டபம், இவற்றைப் புதுக்கிப் பழுது பார்த்து, சிவகெங்கைத் திருக் குளம், படித்துறைகள், மண்டபம் புதிதாய்க் கட்டி, இராச கோபுரங்களைப் புதுக்கி, உற்சவமண்டபம், வாகன மண்டபம் அமைத்து, திருத்தேர்கள், திருவாபரணங்கள் செய்வித்துப் பெரும்பொருள் ரூபாய் முப்பது லட்சம் (30,00,000) செலவு செய்து முடித்துக் கரஞ சித்திரைமீ 4-ம் தேதி (15-4-1891) கும்பாபிடேகம் செய்வித்தனர்.

முப்பத்தைந்து வருடம், அதாவது 1914-ம் ஆண்டு வரை தொடர்ந்து பலவகைத் திருப்பணிகள் செய்யப் பெற்று வந்தன.

ஆதி முதல் திருப்பணியை நடத்திவந்தவர்கள், சா. ராம. முத்தையா செட்டியார், அவர் சகோதரர் சா. ராம. சிதம்பரம் செட்டியார், ஷை முத்தையா செட்டியார் இரண் டாவது குமாரர் திவான்பகதூர் மு. இராமசாமிச் செட்டியார் ஆகிய மூவரும் ஆவர்.

ராஜா ஸர். அண்ணமலைச் செட்டியார், தில்லைக் கோவிந்தராசர் கோவில் திருப்பணியைச் சுக்கில ஆவணி 4-ம் நாள் (19-8-1929) தொடங்கிச் சிறப்புற முற்றுவித்து, பவ வைகாசி 11-ம் நாள் (24-5-1934) சம்புரோட்சணை நிறைவேற்றி வைத்தனர்.

திவான்பகதூர் சா. ராம. மு. ராம. இராமசாமிச் செட்டியார், ரூபாய் இரண்டு லட்சம் (2,00,000) செலவில், (23-2-1915) முதல் நகர முழுதும் தண்ணீர்க் குழாய்கள் அமைத்து நீர்பெருக்கி, நகர மக்கள் வாழ்த்திற்கு உரிய ரானார்.

ஷையாரால், ரூபாய் ஒரு லட்சம் (1,00,000) செலவில் "இராமசாமிச் செட்டியார் உயர்நிலைப்பள்ளி" நிறுவப் பெற்றும் ரூபாய் அறுபதினாயிரம் (60,000) நன்கொடை யளிக்கப் பெற்றும் சிறந்த முறையில் (12-11-1915) முதல் நடைபெற்று வருகின்றது.

காரைக்குடி ராம. சொ. சொக்கலிங்க ஐயாவால் ரூபாய் இருபதினாயிரம் (20,000) செலவில் "மெய்கண்ட சித்தாந்த வித்தியாசாலை" நிறுவப் பெற்றுள்ளது.

காரைக்குடி மெ. செ. மெ. பொதுவில் ரூபாய் பதினையாயிரம் (15,000) செலவில் ஒரு வேத பாடசாலையும், காரைக்குடி சு. ராம. சு. அ. சு. நா. பொதுவில் ரூபாய் அறுபதினாயிரம் (60,000) செலவில் மற்றொரு வேத பாடசாலையும், கானாடுகாத்தான் வெ. சா. பொதுவில் ரூபாய் ஐயாயிரம் (5,000) செலவில் தேவார பாடசாலையும் அமைக்கப் பெற்றுள்ளன.

பள்ளத்தூர் க. ப. குமரப்ப செட்டியாரால் ரூபாய் எழுபதினாயிரம் (70,000) செலவில் குருபூசை மடமும், பள்ளத்தூர் சொ. மு. அ. வால் ரூபாய் இருபதினாயிரம் (20,000) செலவில் பசுமடமும், காரைக்குடி மெ. செ. பொதுவில் ரூபாய் பதினையாயிரம் (15,000) செலவில் திருநந்தனவனமும், கானாடுகாத்தான் வெ. சா. பொதுவில் ரூபாய் ஒரு லட்சம் (1,00,000) செலவில் அன்ன சத்திரமும் அமைக்கப் பெற்றுள்ளன.

கோவிலூர் கிளை பொன்னம்பல சுவாமிகளால், ரூபாய் ஒரு லட்சம் (1,00,000) மதிப்புடைய சொத்துக்களுடன் ரூபாய் எழுபதினாயிரம் (70,000) செலவில் வேதாந்த மடம் நிறுவப் பெற்றுள்ளது.

நகரத்தார் பொதுவில் ரூபாய் பதினாயிரம் (10,000) செலவில் நகரத்தார் விடுதியும், காரைக்குடி ஆவி. பழ. சிதம்பரம் செட்டியாரால் ரூபாய் பதினாயிரம் (10,000) செலவில் அன்னசத்திரமும், உச்சிக் காலத்தில் குளித்தளிகையும், தேவகோட்டை வெ. ஆதி. சிதம்பரம் செட்டியாராலும், காரைக்குடி மெ. ப. சு. சுப்பிரமணியன் செட்டியாராலும் ரூபாய் பதினாயிரம் (10,000) செலவில் இரண்டு தண்ணீர்ப் பந்தர்களும், அமைக்கப் பெற்றுள்ளன.

கானாடுகாத்தான் வெ. சா. குடும்பத்தாரால் ரூபாய் ஒரு லட்சம் (1,00,000) செலவில் சிவகெங்கைத் திருக்குளத் திருப்பணி செய்யப்பெற்றும், ரூபாய் இருபத்தையாயிரம் (25,000) செலவில் சாயரட்சைப் பாவாடையும் ஏற்படுத்தப் பெற்றுமுள்ளது.

காரைக்குடி மெ. செ. மெ. ரூபாய் மூன்று லட்சம் (3,00,000) மதிப்புடைய கிராமங்களின் வருவாயிலிருந்து, காலையில் பால் நிவேதனம், இரண்டாங் காலத்தில் தயிரமுது, ஏழுகாலத்தும் கோவில்களுக்குக் கற்பூரம் அளித்தல், திருநீறு அளித்தல், மாலைக் காலத்து நடராசருக்கு மாலை யளித்தல், அர்த்தசாம நிவேதனம், பள்ளியறை நிவேதனம், கோவிந்தராசப் பெருமாளுக்கு அர்த்தசாமத்தில் பருப்புப் பொங்கல், பாற்சோறு, சர்க்கரைப் பொங்கல், வடை, பாயசம் முதலிய கட்டளைகள் வைத்து, மாதம் ஒன்றுக்கு ரூபாய் ஆயிரம் (1,000) செலவில் நடத்தி வருகின்றனர்.

கோவிலூர் மடத்தாரால், சாயரட்சை, இரண்டாங் காலம் சம்பா இருபதின்மர்க்குக் கட்டளைக்காக ரூபாய் பதினாயிரம் (10,000) செலவிடப் பெற்றிருக்கிறது.

## அண்ணாமலை நகர்

### அண்ணாமலைப் பல்கலைக் கழகம்

சிதம்பரத்திற்குக் கீழ்பால் 2 கல் அளவில் 'திருவேட்களம்' என்னும் சிவதலத்தைத் தன்னுட் கொண்ட 'அண்ணாமலை நகர்' உள்ளது.

கானாடுகாத்தான் ராஜா. ஸர். சா. ராம. மு. அ. அண்ணாமலைச் செட்டியார், தம் பெயரால் நிறுவிய சிறந்த கலா நிலையமாகிய அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தை உடைமையால் இந்நகர் 'அண்ணாமலை நகர்' என்னும் பெயரை உடையதாயிற்று.

இந்நகரில் 1920-ம் ஆண்டு ஜுன் மாதம் 24-ம் தேதி "மீனாட்சி கல்லூரி" எனும் பெயரால், ஆங்கிலம், தமிழ், வடமொழி, இவற்றிற்குத் தனித் தனியே ராஜா. ஸர். அவர்களால் கலா நிலையங்கள் அமைக்கப் பெற்றன.

பின்னர், 11-10-1928ல் அரசினரால் 'அண்ணாமலைப் பல்கலைக் கழக' மசோதா சட்டமாக அங்கீகரிக்கப் பெற்று, 1-1-1929 முதல் பல்கலைக் கழகமாயிற்று.

இப்பல்கலைக் கழகத்தில், தமிழ், ஆங்கிலம், வடமொழி, கணிதம், வரலாறு, பொருளாதாரம், தத்துவம், பௌதிகம், ரசாயனம், தாவரநூல், விலங்குநூல் ஆகிய பகுதிகளில் M. A. வரை கற்றற்கும், ஆராய்ச்சி செய்தற்கும், புலவர், சிரோமணி முதலிய பட்டங்கள் பெறுதற்கும், இசை பயின்று பட்டம் பெறுதற்கும், ஸிவில், மெகானிகல், எலெக்டிரிகல், கெமிகல், இன்ஜினீரிங் பட்டங்கள் பெறுதற்கும், டெக்னலஜி பட்டம் பெறுதற்கும் வேண்டிய வசதிகள் உள்ளன. தெலுங்கு, மலையாளம், உருது,

ஹிந்தி, பிரெஞ்சு ஆகிய மொழிகள் கற்பதற்கும் வசதிகள் உள்ளன.

இப் பல்கலைக் கழகத்திற்கு, ராஜா. ஸர். அண்ணாமலைச் செட்டியார், மூலதனமாக ரூபாய் இருபது லட்சமும் (20,00,000) கல்லூரிக் கட்டிடம், நூல்நிலையம், மாணவர் விடுதி முதலியன அமைத்தற்கும், பரிசுகள் வழங்குதற்கும் ரூபாய் முப்பது லட்சமும் (30,00,000) ஆக ஐம்பது லட்ச ரூபாய் (50,00,000) நன்கொடையாக மனமுவந்து வழங்கியுள்ளார்.

நகரத்தார்கள் பல்லாண்டுகளாகச் செய்துவந்த சிவ புண்ணியத்தின் பயனாக இப்பல்கலைக் கழகம் அண்ணாமலையரசர் மூலம் அமைந்தது என்று கூறலாம். இந்தியாவில் தனித்த ஒருவர் பல்கலைக் கழகம் நிறுவியது இஃது ஒன்றே. இப்பெருமை கருதியே சேது சமஸ்தான மகா வித்துவானும், பாஷா கவிசேகரரும் ஆகிய ரா. இராகவையங்கார் பின்வருமாறு பாடினார்.

" கல்விக்கு மூலம் கமழ்வெண் கமலத்துச்
செல்விக் குவகை செயுமூலம்—வெல்விக்குத்
தென்னாடு வாழ்மூலம் தெள்ளிஅண் ணாமலையாம்
நன்னா யகன்மூல நாள் "

" இசைமு ழங்குவ தொருபுறம், தமிழ்
இயல் முழங்குவ தொருபுறம்,
இனிதியைந்துநல் வடமொழிக்கடல்
இவண் முழங்குவ தொருபுறம்,
வசையறும் மலை யாளமும்வடு
கும்முழங்குவ தொருபுறம்,
வளர் குடக்குள ஆங்கிலக்கவி
வள முழங்குவ தொருபுறம்,



அண்ணுமலை சர்வகலாசாலை, ஆர்ட்ஸ் காலேஜ்.

தசையுறும்பொரு ளூல்மதங் கணி
தஞ்சரித்திர ஞானவிஞ்
ஞானமோடதி நூல் விலங்கியல்
நலமுழங் குமொவ் வோர்புறம்,
மிசைவரும்மினை யோர் புகும்வினை
யாடலோர்புறம், உழவுசேர்
விளைவுமோர் புறம், இவையண்ணுமலை
வேந்து நன்கொடை விளைவரோ!"

இக் கருத்துப்பற்றி, மகாமகோபாத்தியா முதுபெரும் புலவர், சைவசித்தாந்தவித்தகர் பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார் பின்வருமாறு பாடியுள்ளார்.

"ஊக்கம் உறுதி உணர்ச்சி அருஞ்செயலின்
ஆக்கம் அறம்புகழன் பாண்மைமுதல்—நீக்கமறக்
காண்டற் கமைந்த கவினுருஅண் ணுமலைமன்
ஆண்டகையின் நல்லுருவ மாம்.

"நிலஞ்சார்ந் தொளிரும் அமரர்பதி
நிகர்க்குஞ் செட்டி நாட்டினிலே
நிலவு செல்வமிகப் படைத்து
நிகரில் வாழ்க்கைப் பயன்றுய்ப்போன்
வலஞ்சார் மதியால், அறச்செயற்கு
வாரி வழங்கும் பெருங்கொடையால்,
மன்ன ரளிக்கும் விருதுகளால்,
மண்ணுஞ் சுருங்க வளர்புகழான்;
புலஞ்சார் கல்விப் பெருங்கழகம்
புவனி விளங்கத் தனிநிறுவிப்
புரக்கும் பெரியோன்; தமிழிசைக்குப்
போந்த இடர்ப்பா டெலாங்களைந்தித்
தலஞ்சார் மக்கள் இன்பமுறத்
தந்தோன்; அரசண் ணுமலைப்பேர்த்

தகைசால் வள்ளல் பல்லாண்டு
தழைத்து நீடு வாழியவே!''

இப்பல்கலைக் கழகத்தில் டெக்னலஜி கல்லூரிக்கு, பாரட்லா. ராம. அழகப்ப செட்டியார் ரூபாய் ஐந்து லட்சம் (5,00,000) நன்கொடை யளித்துள்ளார்.

## 2. புலீச்சரம்

(இளமையாக்கினர் கோவில்)

சிதம்பரம்

காரைக்குடி பெரி. க. சின்னையா செட்டியார் வகைக் குடும்பத்தாராலும், நகரத்தார் பொருளுதவியாலும், திரு மதில் உள்பட எல்லாக் கோவில்களும் ரூபாய் ஐந்து லட்சம் (5,00,000) செலவில் முற்றும் புதிதாய்த் திருப்பணி செய்யப் பெற்று, சார்வரி வைகாசி 8-ம் நாள் (20-5-1900) முதற் கும்பாபிடேகமும், குரோதன ஆனி 25-ம் நாள் (8-7-1925) இரண்டாங் கும்பாபிடேகமும் நடைபெற்றன.

காரைக்குடி பெரி. க. வால் ரூபாய் நான்காயிரம் (4,000) செலவில் வேத பாடசாலைக் கட்டிடம் அமைக்கப் பெற்றுளது.

காரைக்குடி பெரி. க. குடும்பத்தினர் ரூபாய் தொண்ணூற்றையாயிரம் (95,000) செலவில் "இளமையாக்கிய திருக்குளம்" மிகச் சிறந்த முறையில் கட்டியுள்ளனர்.

## 3. அனந்தேசுவரம்

(சிதம்பரம்)

இக் கோவில், கோட்டையூர் வெ. சி. அ. குடும்பத்தார்களில் இராமசாமிச் செட்டியார் குடும்பத்தாரால் திருப்பணி செய்யப் பெற்றுளது.

## 4. திருவேட்களம்

சுவாமி பெயர் பாசுபதேசுவரர்

அம்மை பெயர் நல்ல நாயகி

"வேட்கள நன்னகராரே" எனத் திருஞானசம்பந்தராற் புகழப்பெற்ற இவ்வூர்ச் சிவாலயம், கானாடுகாத்தான் சா. ராம. மு. இராமசாமிச் செட்டியார், கா. பெ. அ. பெத்தபெருமாள் செட்டியார் ஆகிய இருவர் நன்முயற்சியால் ரூபாய் ஒரு லட்சம் (1,00,000) செலவில் புதிதாய்க் கட்டப்பெற்று, பிங்கள வைகாசி 19-ம் நாள் (1-6-1917) கும்பாபிடேகம் நிறைவெய்தியது.

## 5. திருநெல்வாயில் (சிவபுரி)

சுவாமி பெயர் உச்சிநாதேசுரர்

அம்மை பெயர் கனகாம்பிகை

இவ்வூர்ச்சிவாலயம், கோட்டையூர் க. வீ. சொ. வீ. அழகப்ப செட்டியார், க. வீ. மு. ப. கதிரேசச் செட்டியார், காரைக்குடி முத்து. அரு. மு. அருணாசலம் செட்டியார் ஆகிய மூவராலும், ரூபாய் மூன்று லட்சத்து இருபத்தேழாயிரத்து ஐந்நூறு (3,27,500) செலவில் திருப்பணி செய்யப்பெற்று விபவ வைகாசி 11-ம் நாள் (24-5-1928)ல் கும்பாபிடேகமும், ஆங்கீரச வைகாசி 28-ல் ராச கோபுர கும்பாபிடேகமும் செய்யப் பெற்றன.

குறிப்பு:—ரூபாய் பதினாயிரம் (10,000) செலவில் பலரால் பசுமடம், திருநந்தனவனம், தண்ணீர்ப்பந்தர், திருக்குளம் முதலியன அமைக்கப் பெற்றுள்ளன.

## 6. திருக்கழிப்பாலை

சுவாமி பெயர் பால்வண்ணநாதர்

அம்மை பெயர் வேதநாயகி

கடற்கரையை அடுத்திருந்த கழிப்பாலைக் கோவில் சுமார் 100-ஆண்டுகளுக்கு முன் சிவபுரியில் அமைக்கப் பெற்றது.

தேவகோட்டை ராம. அரு. அரு. அருணாசலம் செட்டியாரால் அம்மை கோவில் முதலிய திருப்பணிகள் ரூபாய் அறுபத்தோராயிரம் (61,000) செலவில் செய்யப் பெற்று, பிலவங்க ஆவணி 10ம் நாள் (26-8-1907) கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

## 7. திருநல்லூர்ப்பெருமணம்

(ஆச்சாள்புரம்)

சுவாமி பெயர் சிவலோகத்தியாகேசர்
அம்மை பெயர் நங்கையுமையம்மை

இக்கோவிலுள், காரைக்குடி பெரி. நா. நாராயணன் செட்டியார், ஞானசம்பந்தர் கோவிலும் சில மண்டபங்களும் கட்டி, தளவரிசைகள் முதலான திருப்பணிகளும் ரூபாய் இருபத்தையாயிரம் (25,000) செலவிற் செய்து பிரமாதீச ஆனி 27-ம் நாள் (10-7-1913) கும்பாபிடேகம் செய்வித்தனர்.

குறிப்பு:—அ. வீர. ராம. வால் ரூபாய் இருபதாயிரம் (20,000) செலவில் குருபூசை மடமும், சி. ப. வால் ரூபாய் இருபதாயிரம் (20,000) செலவில் ஆகம பாடசாலையும், காரைக்குடி நா. கு. வால் ரூபாய் இருபதாயிரம் (20,000) செலவில் பசுமடமும், சிறுகூடற்பட்டி சு. வெ. வால் ரூபாய் ஐயாயிரம் (5,000) செலவில் திருநந்தனவனமும் அமைக்கப் பெற்றுள்ளன.

## 8. திருமயேந்திரப்பள்ளி

சுவாமி பெயர் திருமேனியழகர்
அம்மை பெயர் வடிவாம்பிகை

இத்தலச் சிவாலயம், தேவகோட்டை பழ. சோம சுந்தரம் செட்டியாரால் ரூபாய் பதினேழாயிரம் (17,000) செலவில் புதுப்பிக்கப் பெற்று வெகுதானிய ஆனி 30-ம் நாள் (14-7-1938) கும்பாபிடேகம் நிறைவேறிற்று.

## 9. திருப்பல்லவனீச்சரம்

(காவிரிப்பூம்பட்டினம்)

சுவாமி பெயர் பல்லவனேசுரர்
அம்மை பெயர் சவுந்தர நாயகி

இத்தலக் கோவில், வயிநாகரம் குடும்பத்தினரால் ரூபாய் ஒரு லட்சம் (1,00,000) செலவில், புதிதாய்த் திருப்பணி செய்யப் பெற்றுச் சார்வரி வைகாசி 8-ம் நாள் (20-5-1900) கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

## 10. திருவெண்காடு

சுவாமி பெயர் சுவேதாரண்யேசுவரர்
அம்மை பெயர் பிரம்ம வித்தியாநாயகி

இத்தலத்தில் அம்மை கோவில், தேவகோட்டை மு. ராம. சுப்பிரமணியன் செட்டியார், அவர் புதல்வர்கள் இவர்களால் ரூபாய் ஒரு லட்சம் (1,00,000) செலவில் திருப்பணி செய்யப் பெற்று, விக்கிரம ஆனி 3-ம் தேதி (16-6-1940) கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

குறிப்பு :—“ வெண்காட்டு முக்குளநீர், தோய்வினையார் அவர் தம்மைத் தோயாவாம் தீவினையே ” எனச்

சம்பந்தராற் புகழப் பெற்றதும், கோவிலுக்குள் அமைந்ததுமான முக்குளங்களில் ஒன்றாகிய அக்கினி தீர்த்தத்தை, பசுமடம் கோட்டையூர் அண்ணாமலைச் செட்டியார் தம் பொருள் கொண்டும், தேவத்தானப் பொருள் கொண்டும் ரூபாய் இருபதாயிரம் (20,000) செலவில் புதிதாகக் கட்டி யுள்ளார்.

## 11. சீர்காழி

சுவாமி பெயர் பிரமபுரீசுவரர்
அம்மை பெயர் திருநிலை நாயகி

அம்மை கோவிலை, அமராவதிபுதூர் வயிநாகரம் குடும்பத்தாரும், தேவகோட்டை ராம. அரு. அரு. வும், ரூபாய் எண்பதினாயிரம் (80,000) செலவில் புதிதாய்க் கட்டி, விளம்பி வைகாசி 20-ம் நாள் (1-6-1898)ல் கும்பாபிடேகம் செய்துள்ளனர்.

குறிப்பு:—வயிநாகரம் குடும்பத்தாரால், ரூபாய் இருபதினாயிரம் (20,000) செலவில், திருமதிலும், வெள்ளி இடப வாகனமும் செய்யப் பெற்றுள்ளன. நகரத்தார்களால், வேதபாடசாலை, திருநந்தனவனம், குருபூசை மடம், முதலியன நிறுவப் பெற்றுள்ளன.

## 12. திருக்கோலக்கா

(திருத்தாளமுடையார் கோவில்)

சுவாமி பெயர் சத்தபுரீசுரர்
அம்மை பெயர் ஓசைகொடுத்த நாயகி

ஆளுடைய பிள்ளையார்க்குப் பொற்றாளம் வழங்கப் பெற்ற இவ்வூர்ச் சிவாலயத் திருப்பணி, தேவகோட்டை ராம. மெ. சித. வயி. ராம. வைரவன் செட்டியாரால்

ரூபாய் மூன்று லட்சத்து ஐம்பதாயிரம் (3,50,000) செலவில் செய்யப்பெற்று துந்துபி தை 16-ம் நாள் (29-2-1923) அம்மை கோவிற் கும்பாபிடேகமும் பிரபவ தை 23-ம் நாள் (5-2-1928) சுவாமி கோவிற் கும்பாபிடேகமும் செய்யப் பெற்றன.

## 13. திருப்புள்ளிருக்குவேளூர்

(வைத்தீசுவரன் கோவில்)

| | |
|---|---|
| சுவாமி பெயர் | வைத்தியநாதர் |
| அம்மை பெயர் | தையல்நாயகி |

கோவிலுக்குளமைந்த திருக்குளத்தின் மேல் கரையில் மண்டபமும், வெள்ளித்தேரும் கானாடுகாத்தான் கரு. தா. வகையினரால் ரூபாய் எழுபத்தையாயிரம் (75,000) செலவில் அமைக்கப் பெற்று, கர ஆனி 14-ம் தேதி (26-6-1891) முதற் கும்பாபிடேகமும், ரூபாய் எண்பதாயிரம் (80,000) செலவில், கோவிலுக்குள் சில சீர்திருத்தங்களும், தகரக் கொட்டகையும் அமைத்து, பிரபவ ஆவணி 10-ம் தேதி (1-9-1927) இரண்டாம் கும்பாபிடேகமும் செய்யப் பெற்றன.

குறிப்பு:—ரூபாய் ஆறாயிரம் (6,000) செலவில் நகரப் பொதுப் பசுமடமும், ரூபாய் பதினாயிரம் (10,000) செலவில் நகரப் பொது விடுதியும், ரூபாய் நாற்பதாயிரம் (40,000) செலவில் கடியாபட்டி பி. கு. நா. வகையினரால் வேதபாடசாலையும், ரூபாய் நாற்பதாயிரம் (40,000) செலவில் கானாடுகாத்தான் கரு. தா. குடும்பத்தாரால் அன்னசத்திரமும், ரூபாய் நாற்பத்தாறாயிரம் (46,000) மூலதனத்தில் நகரப் பொதுக் குளித்தளிகை உணவும், ரூபாய் பதினாயிரம் (10,000)

செலவில், கானாடுகாத்தான் சா. ராம. மு. ராம. இராமசாமிச் செட்டியாரால் தண்ணீர்ப் பந்தரும், ரூபாய் ஏழாயிரம் (7,000) செலவில் சண்முகநாதபுரம் சி. அ. சித. வால் குருபூசை மடமும், ரூபாய் ஏழாயிரம் (7,000) செலவில் ராமச்சந்திரபுரம் கு. பெரி. முத்தையா செட்டியாரால் சாதுக்கள் மடமும், ரூபாய் பதினாயிரம் (10,000) செலவில் காரைக்குடி முத்துப்பட்டினம் மெ. நா. மெய்யப்ப செட்டியாரால் சாதுக்கள் மடமும், ரூபாய் இரண்டாயிரம் (2,000) செலவில் கோனாபட்டு சு. மு. சு. வால் பசு மடமும், அமைக்கப் பெற்றுள்ளன.

## 14. திருக்கண்ணூர் கோவில்

சுவாமி பெயர் கண்ணாயிரேசுரர்
அம்மை பெயர் முருகுவளர் கோதையம்மை

இக்கோவில், கண்டனூர் தெ. அரு. சித. அருணாசலம் செட்டியார் குடும்பத்தார், அ. சி. நா. சி. நாச்சியப்ப செட்டியார், சிதம்பரம் செட்டியார்; இவர்களால் ரூபாய் மூன்று லட்சம் (3,00,000) செலவில் திருப்பணி செய்யப் பெற்று, யுவ ஆனி 24-ம் நாள் (8-7-1935) கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

குறிப்பு:—ரூபாய் இருபத்தையாயிரம் (25,000) செலவில் ஆத்தன்குடி முத்துப்பட்டினம் சித. மு. நா. வெ. நாச்சியப்ப செட்டியாரால் திருக்குளமும், ரூபாய் ஐந்நூறு (500) செலவில் பள்ளத்தூர் அள. சுப. சுப்பிரமணியன் செட்டியாரால் திருநந்தனவனமும் அமைக்கப் பெற்றுள்ளன.

## 15. திருநின்றியூர்

சுவாமி பெயர் மகாலட்சுமீசுவரர்
அம்மை பெயர் உலகநாயகி

இவ்வூர்ச் சிவாலயத் திருப்பணி, தேவகோட்டை ராம. அரு. அரு. அருணசலம் செட்டியாரால் ரூபாய் அறுபதினயிரம் (60,000) செலவில் புதிதாகச் செய்யப் பெற்று, விகாரி ஆனி 6-ம் நாள் (19-6-1899) கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

## 16. திருப்புன்கூர்

சுவாமி பெயர் சிவலோகநாதர்
அம்மை பெயர் சொக்கநாயகி

இவ்வூர்ச் சிவாலயம், கானடுகாத்தான் கரு. அ. சிதம்பரம் செட்டியாரால் புதிதாகத் திருப்பணி செய்யப் பெற்று, கீலக ஆனி 5-ம் நாள் (18-6-1908) கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

## 17. திருநீடூர்

சுவாமி பெயர் கானநிர்த்தசங்கரர்
அம்மை பெயர் வேயுறுதோளியம்மை

இவ்வூரில், அரிமளம் அ. அரு. அண்ணமலைச் செட்டியாரால் ரூபாய் பதினையாயிரம் (15,000) செலவில் திருநந்தனவனம் நிறுவப் பெற்றுள்ளது.

## 18. திருஅன்னியூர்

சுவாமி பெயர் ஆபத்சகாயேசுவரர்
அம்மை பெயர் பெரிய நாயகி

இவ்வூர்ச் சிவாலயத் திருப்பணி, தேவகோட்டை ராம. மெ. சித. வயி. இராமநாதன் செட்டியாரால் ரூபாய் எழுபதினாயிரம் (70,000) செலவில் செய்யப் பெற்று, சார்வரி தை (1901-பிப்ரவரி) கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

## 19. திருநாரையூர்

### பொல்லாப்பிள்ளையார்

சுவாமி பெயர் சவுந்தரேசுவரர்
அம்மை பெயர் திரிபுரசுந்தரி

தம்மை அருச்சித்த நம்பியாண்டார் நம்பிக்கு அருள் புரிந்து, தேவாரத் திருமுறைகளை வெளிவரச் செய்தருளிய "பொல்லாப் பிள்ளையார்" கோவில், காரைக்குடி ப. ராம. இலக்குமணன் செட்டியார் முயற்சியால் திருப்பணி செய்யப் பெற்றுளது.

காரைக்குடி. ப. ராம. லெ. ராம. இலக்குமணன் செட்டியார் முயற்சியால் ரூபாய் மூவாயிரம் (3,000) செலவில் நகர விடுதியும், நகரத்தார் பொருளுதவியால் ரூபாய் ஆயிரத்து ஐந்நூறு (1,500) செலவில் பிள்ளையாருக்கு வெள்ளிக் கவசமும், பெருச்சாளி வாகனமும் அமைக்கப் பெற்றுள்ளன.

## 20. திருக்கடம்பூர்

சுவாமி பெயர் அமிர்தகடேசுவரர்
அம்மை பெயர் சோதிமின்னம்மை

இத்திருக்கோவில் பழமையாயிருந்ததைத் தேவகோட்டை ராம. அரு. அரு. அருணசலம் செட்டியார், அவர் மைந்தர் சோமசுந்தரம் செட்டியார், இவர்களால்

ரூபாய் ஐம்பதினாயிரம் (50,000) செலவில் செம்மை செய்யப்பெற்று, சோபகிருது வைகாசி 5-ம் நாள் (18-5-1903) முதற் கும்பாபிடேகமும், ஷை வகையின ரால் பிரபவ சித்திரை 8-ம் நாள் (20-4-1927) இரண் டாம் கும்பாபிடேகமும் செய்யப் பெற்றன.

## 21. திருக்கஞ்சனூர்

சுவாமி பெயர் அக்கினீசுவரர்
அம்மை பெயர் கற்பகநாயகி

இவ்வூர்ச் சிவாலயம் தேவகோட்டை ராம. அரு. ராம. வெ. வெங்கடாசலஞ் செட்டியாரால், ரூபாய் இரு பதினாயிரம் (20,000) செலவில், செம்மை செய்யப்பெற்று யுவ வருடம் கும்பாபிடேகம் நிறைவெய்தியது.

## 22. திருவியலூர்

சுவாமி பெயர் யோகானந்தேசுரர்
புராதனேசுரர்
அம்மை பெயர் சவுந்தரநாயகி

மிகப் பழமையுற்றிருந்த அம்மை கோவில், தேவ கோட்டை கரு. மெ. கதிரேசச் செட்டியாரால் புதிதாய்த் திருப்பணியும், பல சீர்திருத்தங்களும் செய்யப்பெற்று, சுக்கில ஆனி 7-ம் நாள் (20-6-1929) கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

பின்னர், தேவகோட்டை அ. ராம. லெ. அருணசலம் செட்டியாரால் சுவாமி கோவில் திருப்பணி செய்யப் பெற்று ஸ்ரீமுக ஆனி 19-ம் நாள் (2-6-1933) கும்பாபிடே கம் செய்யப் பெற்றது.

குறிப்பு :—தேவகோட்டை மைசூர் இராமநாதன் செட்டியாரால் பசுமடமும், சி. க. பழ. சுப. சோம. வால் சாதுக்கள் மடமும், திருநந்தனவனமும், அ. ராம. லெ. அருணாசலம் செட்டியாரால் திருக்குளமும் அமைக்கப் பெற்றுள்ளன.

## 23. திருஇன்னம்பர்

சுவாமி பெயர் எழுத்தறிநாதர்
அம்மை பெயர் சவுந்தரநாயகி

இவ்வூர்க் கோவில், சண்முகநாதபுரம் சேவு. விசுவநாதன் செட்டியார் ரூபாய் முப்பத்தையாயிரம் (35,000) முதல் எடுத்து வைத்து, ராம. அரு. அரு. ராம. அருணாசலம் செட்டியாரால் திருப்பணி செய்யப் பெற்றுளது.

## 24. திருவையாறு

சுவாமி பெயர் பஞ்சநதேசுவரர்
அம்மை பெயர் அறம்வளர்த்தநாயகி

"வெள்ளி வெற்பின்மேல் மரகதக் கொடியுடன் விளங்கும், தெள்ளுபே ரொளிப் பவள வெற்பென" மலைமாமகளுடன் வீற்றிருந்த அற்புதக் இறைவன் கோலத்தை, திருநாவுக்கரசர் கண்டு பரவிய இத்தலத்திலுள்ள, 'அறம் வளர்த்த நாயகி' கோவில் திருப்பணி, தேவகோட்டை உ. ராம. மெ. சுப. சேவு. மெய்யப்ப செட்டியார் அவர் சகோதரர்கள் பஞ்சநதம் செட்டியார், அண்ணாமலை செட்டியார் ஆகிய இவர்களால் ரூபாய் பத்து லட்சம் (10,00,000) செலவில் கண்கவர் வனப்புடன் செய்யப்பெற்று ரூபாய் நாற்பதாயிரம் (40,000) செலவில் ஈசுவர சித்திரை 20-ம் நாள் (2-5-1937) சிறப்புறக் கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

குறிப்பு :—ரூபாய் பதிமூன்றுயிரம் (13,000) செலவில் உ. சிறுவயல் ராம. ப. செ. வால் வேதபாடசாலையும், ரூபாய் முப்பதினுயிரம் (30,000) செலவில் காரைக்குடி நாக. சி. பொதுவில் அன்னசத்திரமும், ரூபாய் ஏழாயிரம் (7,000) செலவில் தேவகோட்டை வ. அழ. வ. சோலைமலைச் செட்டியாரால் பசுமடமும், தேவகோட்டை பி. ச. அரு. வால் திருநந்தனவனமும் தண்ணீர்ப் பந்தரும், தேவகோட்டை யாழ்ப்பாணம் இராமன் செட்டியார் மனைவியால் தேவார பாடசாலையும், நிறுவப் பெற்றுள்ளன.

## 25. திருஅன்பிலாலந்துறை

சுவாமி பெயர் ஆலந்துறைநாதர்
அம்மை பெயர் சவுந்தரநாயகி

இவ்வூர்ச் சிவாலயத் திருப்பணி, கோனுபட்டு ராம. சு. லெ. இலக்குமணன் செட்டியாரால் ரூபாய் இரண்டு லட்சம் (2,00,000) செலவில் செய்யப்பெற்று, சித்தார்த்தி சித்திரை 13-ம் நாள் (25-4-1919) கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

குறிப்பு :—கோனுபட்டு ராம. சு. லெ. சுப்பிரமணியன் செட்டியாரால் வேதபாடசாலை நிறுவப் பெற்றுளது.

## 26. திருஆனைக்கா

சுவாமி பெயர் ஜம்புகேசுவரர்
அம்மை பெயர் அகிலாண்டநாயகி

இத்தலத்திலுள்ள சிவாலயம், கானடுகாத்தான் சா. ராம. சித. சிதம்பரஞ் செட்டியாரின் பெருமுயற்சியால் ரூபாய் பத்து லட்சம் (10,00,000) செலவில் திருப்பணி

செம்மையாகச் செய்யப் பெற்று, பிலவங்க தை 24-ம் நாள் (6-2-1908) கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

குறிப்பு:—காரைக்குடி சி. மு. அரு. நாராயணன் செட்டியாரால் ரூபாய் நாற்பதாயிரம் (40,000) செலவில் பசுமடம் முதலியன நிறுவப் பெற்றுள்ளன. தேவகோட்டை முரு. லெ. முருகப்ப செட்டியாரால், திருநந்தனவனமும், காரைக்குடி அ. மு. க., கண்டனூர் வயி. அ. இவர்களால் வேத பாடசாலையும் அமைக்கப் பெற்றுள்ளன. கானாடுகாத்தான் சித. ராம. சித. வால் ரூபாய் ஐயாயிரம் (5,000) செலவில் திருநந்தனவனம் ஒன்று அமைக்கப் பெற்றுளது.

## 27. திருவரங்கம்

இத்தலத்தில், அரியக்குடி சித. சாத்தப்ப செட்டியார், சித. அண்ணாமலைச் செட்டியார் என்ற சகோதரர்களால் ரௌத்திரி தை 17-ம் நாள் (27-4-1860) முதல், பெரிய அன்னசத்திரம் நிறுவப் பெற்று நடைபெற்று வருகின்றது. கட்டிடங்கள் ரூபாய் ஐம்பதாயிரம் (50,000) மதிப்புள்ளன. இச் சத்திரத்துக்கு, விறகுக்கு எனத் தோட்டமும், ஏராளமான நன்செய் நிலங்களும் ரூபாய் மூன்று லட்சம் (3,00,000) மதிப்பில் விடப் பெற்றுள்ளன.

---

## காவிரித் தென்கரைத் தலங்கள்

---

## 28. திருக்கடம்பந்துறை (குளித்தலை)

சுவாமி பெயர் கடம்பவனநாதேசுவரர்
அம்மை பெயர் முற்றிலாமுலையம்மை

தேவகோட்டை பழ. அ. வெங்கடாசலம் செட்டியாரால், இத்தலக் கோவில் திருப்பணி செய்யப்பெற்று, சுவாமி கோவில் பிரகாரங்கள் மண்டபங்கள் முற்றுப் பெற்று, ஷையார் குமாரரால் பிரபவ ஆனி 27-ம் நாள் (11-6-1927) கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

அம்மன் கோவில் நன்றாய்க் கட்டி முடிந்திருக்கிறது.

குறிப்பு:—கீழச்சிவற்பட்டி க. தெ. இராமன் செட்டியாரால் நந்தனவனம் அமைக்கப் பெற்றுளது.

## 29. திருப்பராய்த்துறை

சுவாமி பெயர் பராய்த்துறைநாதர்
அம்மை பெயர் பொன்மயிலம்பிகை

இத்தலத்தில் மிகப் பழமையாயிருந்த சிவாலயத்தை முற்றும் பிரித்துப் புதிதாய் ரூபாய் எட்டு லட்சம் (8,00,000) செலவில் கானாடுகாத்தான் வெ. வீர. நாகப்ப செட்டியார் திருப்பணி செய்து, ரூபாய் பன்னீராயிரம் (12,000) செலவில் 26-6-10ல் முதற் கும்பாபிடேகம் செய்வித்தனர்.

அப்பால் ஷை நாகப்ப செட்டியார் குமாரர்களான வீரப்ப செட்டியார், முத்தையா செட்டியார், அருணசலம் செட்டியார் என்ற மூன்று சகோதரர்களாலும், அவர்கள் குமாரர்களாலும் இராசகோபுரம், வெளிமண்டபம், உற்சவமண்டபம், துவசத்தம்பம், நந்திமண்டபம், விநாயகர், தண்டாயுதபாணி கோவில்கள் முதலியன கல் திருப்பணியாகவும் விமானங்கள், கோபுரங்கள், நூற்றுக் கால் மண்டபம், திருமதில் முதலியன புதுப்பிக்கப் பெற்

றும் ரூபாய் இரண்டு லட்சம் (2,00,000) செலவில் முற்றுப் பெற்று விக்கிரம வைகாசி 13-ம் நாள் (26-5-1940) ரூபாய் ஏழாயிரம் (7,000) செலவில் 2-ம் கும்பாபிடேகம் நிறைவெய்தியது.

குறிப்பு :—ஆத்தன்குடி ப. சுப. ப. வால் ஒரு வேதபாட சாலையும், பள்ளத்தூர் வீ. முரு. குடும்பத்தாரால் ஒரு பாடசாலையும், கோனபட்டு கா. சா. நா. வால் திருநந்தனவனமும், ஆத்தன்குடி சு. ராம. சு. வால் பசு மடமும் நிறுவப் பெற்றுள்ளன.

## 30. திருமூக்கீச்சுரம்

(உறையூர்)

சுவாமி பெயர் பஞ்சவர்ணேசுரர்
அம்மை பெயர் காந்திமதியம்மை

இத்தலத்தில் உள்ள சிவாலயம், தேவகோட்டை வீர. ராம. சித. முரு. முருகப்ப செட்டியாரின் பெரு முயற்சியால், ரூபாய் நான்கு லட்சம் (4,00,000) செலவில் திருப்பணி செய்யப் பெற்று, துந்துபி சித்திரை 21-ம் நாள் (3-5-22) கும்பாபிடேகம் நிறைவெய்தியது.

## 31. திருச்சிராப்பள்ளி

(மலைக்கோட்டை)

சுவாமி பெயர் தாயுமானேசுவரர்
அம்மை பெயர் மட்டுவார்குழலம்மை

இத்தலச் சிவாலயத்தில், தேவகோட்டை வீர. லெ. சின்னையாச் செட்டியாரால் பல திருப்பணிகள் செய்யப் பெற்று. சருவதாரி தை (1889 ஜனவரி) முதற் கும்பாபி

டேகமும், நாட்டரசன்கோட்டை அரு. சு. வெ. காசி விசுவநாதன் செட்டியாரால், இராசகோபுரம் செம்மை செய்யப் பெற்று, பிரபவ வைகாசி 31-ம் நாள் (13-6-1927) இரண்டாம் கும்பாபிடேகமும், சித. முரு. பெரு முயற்சி யால் பல திருப்பணிகளும் செய்யப் பெற்றுள்ளன.

## 32. திருவெறும்பியூர்

சுவாமி பெயர் எறும்பீசுவரர்
அம்மை பெயர் நறுங்குழல்நாயகி

இவ்வூர்ச் சிவாலயம், காரைக்குடி ராம. வீர. மு. வீரப்ப செட்டியாரால் ரூபாய் ஐயாயிரம் (5,000) செல வில் திருத்தப் பெற்றுள்ளது.

குறிப்பு:—ரூபாய் முப்பதாயிரம் (30,000) செலவில் ஷை யாரால் திருநந்தனவனமும் திருக்குளமும் நிறுவப் பெற்றுள்ளன.

## 33. திருத்தென்குடித்திட்டை

சுவாமி பெயர் பசுபதீசுரர்
அம்மை பெயர் உலகநாயகியம்மை

பலவான்குடி ராம. கு. ராம. இராமசாமிச் செட்டி யாரால், ரூபாய் மூன்று லட்சம் (3,00,000) செலவில், "மெய் தேறினர் வழிபடும் தென்குடித் திட்டை''யாம் இத் தலத்திலுள்ள சிவாலயத் திருப்பணியும், ரூபாய் ஒரு லட்சம் (1,00,000) செலவில் திருக்குளங்கள், திருநந்தன வனம், பசுமடம் முதலியனவும் அமைக்கப் பெற்று, கர சித்திரை 7-ம் நாள் (20-4-1951) கும்பாபிடேகம் ரூபாய் இருபத்தையாயிரம் (25,000) செலவில் செய்யப் பெற்றது.

## 34. திருக்குடந்தைக் காரோணம்

(கும்பகோணம் மகாமகத் திருக்குளக் கரையிலுள்ள கோவில்)

சுவாமி பெயர் காசி விசுவநாதர், சோமநாதர்
அம்மை பெயர் காசி விசாலாட்சி,
தேனார்மொழி யம்மை

இக் கோவில் கும்பகோணம் நாட்டுக்கோட்டை நகரத்தார் மகமைப் பணங்கொண்டு, வயிநாகரம் வெ. இராமநாதன் செட்டியார் முயற்சியால், ரூபாய் எண்பத்தையாயிரம் (85,000) செலவில் திருப்பணி செய்யப்பெற்றுக் கீலக தை 22-ம் நாள் (3-2-1909) கும்பாபிடேகம் நிறைவெய்தியது.

## 35. திருநாகேச்சுரம்

சுவாமி பெயர் நாகநாதேசுவரர்
அம்மை பெயர் குன்றமுலை நாயகி

இவ்வூர்ச் சிவாலயத்தில் அரிமளம் அ. அரு. அண்ணமலைச் செட்டியாரால் ரூபாய் ஐம்பதினாயிரம் (50,000) செலவில் பல சீர்திருத்தங்கள் செய்யப்பெற்று, விபவ தை மாதம் (1929 ஜனவரி) கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

## 36. திருவிடைமருதூர்

சுவாமி பெயர் மகாலிங்கேசுவரர்
அம்மை பெயர் பெருநலமாமுலை நாயகி

இத்தலச் சிவாலயம் தேவகோட்டை மெ. லெ. மெ. நா. இராமநாதன் செட்டியாரால் ரூபாய் எட்டு லட்சம் (8,00,000) செலவில் சிறந்த முறையில் திருப்பணி செய்யப் பெற்று, விசுவாவசு ஐப்பசி 23-ம் நாள் (8-11-1905) முதற் கும்பாபிடேகமும், நள ஆனி 27-ம் நாள் (8-7-1916) இரண்டாங் கும்பாபிடேகமும் செய்யப் பெற்றன.

குறிப்பு:— ரூபாய் முப்பத்தையாயிரம் (35,000) செலவில் கண. க. லெ. வால் தேவார பாடசாலையும், தேவகோட்டை ராம. மெ. வகையினரால் வேத பாடசாலையும், ரூபாய் முப்பதினாயிரம் (30,000) செலவில் கரு. மெ. கதி. நாராயணன் செட்டியாரால் குருபூசை மடமும், ரூபாய் நான்காயிரம் (4,000) செலவில் மெ. லெ. மெ. வால் பசுமடமும், ரூபாய் பதினாயிரம் (10,000) செலவில் மெ. அரு. நா. வால் திருநந்தன வனமும், ரூபாய் முப்பத்தையாயிரம் (35,000) செலவில் மெ. வகையினரால் பாடசாலையும் நிறுவப் பெற்றுள்ளன.

## 37. திருவியலூர்

| | |
|---|---|
| சுவாமி பெயர் | யோகானந்தேசுரர், புராதனேசுரர் |
| அம்மை பெயர் | சவுந்தர நாயகி |

இவ்வூர்ச் சிவாலயம், தேவகோட்டை அ. ராம. அ. லெ. அ. வால் ரூபாய் ஒரு லட்சம் (1,00,000) செலவில் திருப்பணி செய்யப்பெற்று ஸ்ரீமுக ஆனி 19-ம் நாள் (2-7-1933) கும்பாபிடேகம் நிறைவேறிற்று.

## 38. திருவைகன் மாடக்கோவில்

| | |
|---|---|
| சுவாமி பெயர் | வைகனுதேசுரர் |
| அம்மை பெயர் | வைகலாம்பிகை |

இக் கோவில், தேவகோட்டை ராம. மெ. லெ. ராம. இராமநாதன் செட்டியாரால் திருப்பணி செய்யப் பெற்று, பிலவங்க ஆனி 13-ம் நாள் (27-6-1907) கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

## 39. திருத்துருத்தி
(குத்தாலம்)

சுவாமி பெயர் வேதேசுவரர்
அம்மை பெயர் முகிழாம்பிகை

இத்தலச் சிவாலயம் தேவகோட்டை ராம. அரு. ராம. வெ. வால் ரூபாய் இருபத்தையாயிரம் (25,000) செலவில் சீர்திருத்தப் பெற்றுக் கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

## 40. குத்தாலம்
(இராசகோபாலபுரம்)

இக் கோவில் தேவகோட்டை ராம. அரு. அரு. ராம. அருணசலம் செட்டியாரால் ரூபாய் பன்னிரண்டாயிரம் (12,000) செலவில் திருப்பணி செய்யப் பெற்று ஈசுவர வைகாசி 22-ம் நாள் (4-6-1937) கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

## 41. திருமயிலாடுதுறை
(மாயூரம்)

சுவாமி பெயர் மாயூரநாதேசுவரர்
அம்மை பெயர் அபயாம்பிகை

திருஞானசம்பந்தரால் "மௌவலொடு மாதவி மயங்கி மணம் நாறு மயிலாடுதுறையே" என்று புகழப் பெற்ற இத்தலத்திலமர் சிவாலயம், தேவகோட்டை அழ. வீர. பெ. வீர. வெங்கடாசலம் செட்டியாரால் ரூபாய் இருபது லட்சம் (20,00,000) செலவில் திருப்பணி செய்யப் பெற்று ரூபாய் இருபத்திரண்டாயிரம் (22,000) செலவில் ரௌத்திரி சித்திரை 13-ம் நாள் (25-4-20) அம்மை கோவிற் கும்பாபிடேகமும், ஷியார் குமாரர் பெத்த பெருமாள்

செட்டியார், வீரப்ப செட்டியார் இருவராலும், ரூபாய் இரண்டு லட்சம் (2,00,000) செலவில் சில திருப்பணிகள் செய்யப் பெற்று ரூபாய் லட்சத்துப் பத்தாயிரம் (1,10,000) செலவில் விபவ ஆவணி 18-ம் நாள் (2-9-1928) இரண்டாங் கும்பாபிடேகமும் செய்யப் பெற்றன.

குறிப்பு :— ரூபாய் இரண்டாயிரம் (2,000) செலவில் அழ. வீர. பெ. வால் ஸ்ரீ வல்லப கணபதி கோவிலும், ரூபாய் எழாயிரம் (7,000) செலவில் தேவகோட்டை ராம. அரு. அரு. ராம. வால் சிவாகம பாடசாலையும், ரூபாய் இருபத்தையாயிரம் (25,000) செலவில் வீரப்ப சுவாமிகள் சமாதியும் நிறுவப் பெற்றுள்ளன. நகரத்தார் சிலரால் வேத பாடசாலைகள், பசுமடம், திருநந்தன வனங்கள், அன்ன சத்திரம் முதலியவை ஏற்படுத்தப் பெற்றுள்ளன.

## 42. திருக்கடவூர் வீரட்டம்

சுவாமி பெயர் அமிர்தகடேசுவரர்
அம்மை பெயர் அபிராமியம்மை

இவ்வூரில் ரூபாய் பதினாயிரம் (10,000) செலவில் கோனாபட்டு சு. ப. கு. சொக்கலிங்கம் செட்டியாரால், திருநந்தனவனம் நிறுவப் பெற்றுள்ளது.

## 43. திருவேட்டக்குடி

சுவாமி பெயர் திருமேனியழகேசுரர்
அம்மை பெயர் சாந்த நாயகி

இவ்வூர்ச் சிவாலயம் தேவகோட்டை ராம. மெ. இலக்குமணன் செட்டியாரால் ரூபாய் இரண்டு லட்சம் (2,00,000) செலவில் திருப்பணி செய்யப் பெற்று, நந்தன

ஆனி 22-ம் நாள் (4-7-1892) முதற் கும்பாபிடேகமும், பிரமோதூத ஆனி 23-ம் நாள் (7-7-1930) இரண்டாம் கும்பாபிடேகமும் செய்யப் பெற்றன.

குறிப்பு :— ரூபாய் இருபத்தையாயிரத் தைந்நூறு (25,500) செலவில் திருநந்தனவனம், பசுமடம், விடுதி, அந்தணர் உறையுள் முதலியன அமைக்கப் பெற்றுள்ளன.

## 44. கோயிற்பத்து

(திருத்தெளிச்சேரி)

சுவாமி பெயர் பார்வதீசுரர்
அம்மை பெயர் சத்தியம்மை

இக் கோவில் தேவகோட்டை சேவு. ராம. சேவுகன் செட்டியார், அருணசலம் செட்டியார், அ. வயி. அ. நா. சோமசுந்தரம் செட்டியார் இவர்களால் ரூபாய் இரண்டு லட்சம் (2,00,000) செலவில் புதிதாய்த் திருப்பணி செய்யப் பெற்று, பிங்கள வைகாசி 21-ம் நாள் (3-6-1917) முதற் கும்பாபிடேகமும், தாரண ஆனி 20-ம் நாள் (3-7-1944) இரண்டாங் கும்பாபிடேகமும் செய்யப் பெற்றன.

குறிப்பு :— ரூபாய் ஏழாயிரம் (7,000) செலவில், திருநந்தனவனம், திருக்குளம், முதலியன நிறுவப் பெற்றுள்ளன.

## 45. திருத்தருமபுரம்

சுவாமி பெயர் யாழ்மூரிநாதேசுரர்
அம்மை பெயர் தேனமிர்தவல்லி

சுவாமி, அம்மை திருக் கோவில்கள், சுற்றுக் கோவில்கள் எல்லாம், ரூபாய் எழுபத்தையாயிரம் (75,000) செலவில், தேவகோட்டை அரு. அரு. சோம. வரல் திருப்பணி

செய்யப்பெற்று,சாதாரண ஆவணி 31-ம் நாள்(15-9-1910) கும்பாபிடேகம் நிறைவெய்தியது.

## 46. திருத்தக்களூர்

இக் கோவில் தேவகோட்டை மெ. ராம. அ. இராமநாதன் செட்டியாரால், ரூபாய் எழுபத்தையாயிரம் (75,000) செலவில் புதிதாய்த் திருப்பணி செய்யப்பெற்று ஈசுவர ஆவணி 5-ம் நாள் (19-8-1877) முதற் கும்பாபிடேகமும், ஆனந்த வருடம் (1915) இரண்டாங் கும்பாபிடேகமும் செய்யப் பெற்றன.

## 47. திரு அம்பர்மாகாளம்

| | |
|---|---|
| சுவாமி பெயர் | காளகண்டேசுரர் |
| | மாகாளநாதர் |
| அம்மை பெயர் | பட்சி நாயகி |
| | பயட்சய நாயகி |

இத் தலத்தில், அம்மை கோவில் பள்ளத்தூர் க. ப. குமரப்ப செட்டியாரால் ரூபாய் ஐம்பதினுயிரம் (50,000) செலவில் திருப்பணி செய்யப் பெற்று, பிங்கள வைகாசி 21-ம் நாள் (3-6-1917) கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

## 48. திருத்திலதைப்பதி

(மதிமுத்தம்)

| | |
|---|---|
| சுவாமி பெயர் | முத்தீசுரர் |
| அம்மை பெயர் | பொற்கொடியம்மை |

இத்தலத்தமர் கோவில் தேவகோட்டை ராம. மெ. லெ. இராமநாதச் செட்டியாரால் ரூபாய் ஒரு லட்சம் (1,00,000) செலவில் திருப்பணி செய்யப் பெற்று, விரோதிகிருது ஆனி மீ கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

## 49. திருவீழிமிழலை

சுவாமி பெயர் வீழியழகேசர்
அம்மை பெயர் சுந்தரகுசாம்பிகை

இத்தலத் திருக்கோவில் பெரும்பாகமும், தேவகோட்டை ராம. அரு. அரு. சத்திரம் அருணசலம் செட்டியாரால் சீர்ப்படுத்தப் பெற்றுக் கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

## 50. திருஅரிசிற்கரைப்புத்தூர்

சுவாமி பெயர் படிக்காசளித்த ஈசர்
அம்மை பெயர் அழகாம்பிகை

இவ்வூர்ச் சிவாலயம் தேவகோட்டை ராம. மெ. லெ. இராமநாதன் செட்டியார், நேமுத்துப்பட்டி மெ. மு. பழ. பழநியப்ப செட்டியார் இவர்களால் ரூபாய் ஒரு லட்சம் (1,00,000) செலவில் திருப்பணி செய்யப் பெற்று, குரோதன ஆனி 25-ம் நாள் (8-7-1925) கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

குறிப்பு :—நேமுத்துப்பட்டி மெ. மு. பழ. வால் பசுமடமும் திருநந்தனவனமும் நிறுவப் பெற்றுள்ளன.

## 51. திருக்கலயநல்லூர்

இவ்வூர்ச் சிவாலயம் காரைக்குடி முத்த. வெ. வெள்ளையன் செட்டியாரால் ரூபாய் பதினையாயிரம் (15,000) செலவில் சீர்திருத்தப்பெற்றுக் குரோதன ஆவணி 20-ம் நாள் (4-9-1925) கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

குறிப்பு :—ஷை யாரால் திருநந்தனவனமும், பசுமடமும் நிறுவப் பெற்றுள்ளன.

## 52. திருப்புகலூர்

சுவாமி பெயர் அக்கினீசுவரர்
அம்மை பெயர் கருந்தாள்குழலி

இத்தலத்தில் காரைக்குடி பெரி. ஆ. அருணசலம் செட்டியாரால் பசுமடம் நிறுவப் பெற்றுளது.

## 53. திருவிற்குடி

சுவாமி பெயர் வீரட்டானேசுரர்
அம்மை பெயர் மைவார்குழலியம்மை
ஏலவார்குழலி

இத்தலச்சிவாலயம் பள்ளத்தூர் சொ. மு. அ. மெ. அருணசலம் செட்டியாரால் ரூபாய் ஆறு லட்சம் (6,00,000) செலவில் திருப்பணி செய்யப் பெற்று, பிரசோற்பத்தி சித்திரை 17-ம் நாள் (30-4-1931) கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

குறிப்பு :—ஷை யாரால் திருக்குளங்கள், திருநந்தனவனம் பசுமடம் முதலியன நிறுவப் பெற்றுள்ளன.

## 54. திருச்செங்காட்டங்குடி

சுவாமி பெயர் கணபதீசுவரர்
அம்மை பெயர் திருக்குழல் நாயகி

காரைக்குடி மெ. செ. குடும்பத்தினர் ரூபாய் இருபத்தையாயிரம் (25,000) செலவில் இக் கோவிலில் பல சீர்திருத்தங்கள் செய்து 1897-ம் வருடம் கும்பாபிடேகம் செய்துள்ளனர்.

## 55. திருமருகல்

சுவாமி பெயர் மாணிக்கவண்ணேசுவரர்
அம்மை பெயர் வண்டுவார்குழலம்மை

இத்தலத்தமர் சிவாலயம் தேவகோட்டை ராம. மெ. சித. வயி. இராமநாதன் செட்டியாரால் ரூபாய் ஒரு லட்சத்து இருபதினாயிரம் (1,20,000) செலவில் புதிதாய்த் திருப்பணி செய்யப்பெற்று, மன்மத சித்திரை மாதம் (1895 ஏப்ரல்) முதற் கும்பாபிடேகமும், ஷையார் குமாரர் வைரவன் செட்டியாரால் ரூபாய் பதினாயிரம் (10,000) செலவில் சில திருத்தங்கள் செய்யப்பெற்று, குரோதன ஆவணி 21-ம் நாள் (5-9-1925) இரண்டாம் கும்பாபிடேகமும், குமட. கரு. கரு. வகையினரால், திருக்குளமும், விடந்தீர்த்த விநாயகர் கோவிலும், ரூபாய் பதினையாயிரம் (15,000) செலவில் அமைக்கப் பெற்று, சுபானு வைகாசி 30-ம் நாள் (13-6-43) மூன்றும் கும்பாபிடேகமும் செய்யப் பெற்றன.

குறிப்பு :—ரூபாய் பதினாயிரம் (10,000) செலவில் தேவகோட்டை ராம. மெ. சித. வயி. இராமநாதன் செட்டியாரால் வரதராஜப் பெருமாள் கோவில் திருத்தம் செய்யப் பெற்றுச் சுபகிருது ஆவணி மாதம் (1902 செப்டம்பர்) கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

## 56. திருச்சாத்தமங்கை

சுவாமி பெயர் அயவந்தீசுரர்

அம்மை பெயர் மலர்க்கண்ணம்மை

இத்தலத்தமர் சிவாலயம் கடியாபட்டி பி. கு. நா. நாகப்ப செட்டியாரால் ரூபாய் ஏழு லட்சம் (7,00,000) செலவில் புதிதாய்த் திருப்பணி செய்யப் பெற்று, விபவ ஆவணி 3-ம் நாள் (26-8-1928) கும்பாபிடேகம் இனிது செய்யப் பெற்றது.

## 57. திருநாகைக்காரோணம்

(நாகபட்டணம்)

சுவாமி பெயர் காயாரோகணேசுவரர்
அம்மை பெயர் நீலாயதாட்சி

இத் தலத்திலுள்ள சிவாலயம் நாகபட்டணம் நாட்டுக் கோட்டை நகரத்தார்களால், மிகுந்த பொருட் செலவில் புதுத் திருப்பணிகள் செய்யப்பெற்று, தேவகோட்டை சி. பெரி. சி. மாயாண்டிச் செட்டியாரால் ஜய வருடம் (1894) கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

## 58. திருச்சிக்கல்

சுவாமி பெயர் வெண்ணெயிலிங்கேசுரர்
அம்மை பெயர் வேனெடுங்கண்ணி யம்மை

சிங்கார வடிவேலர் கோவில், ஆ. தெற்கூர் கரு. முத்து. அழகப்ப செட்டியார் குடும்பத்தினர் பொது நிதியிலிருந்து, விருத்தி செய்த லட்சக்கணக்கான பொருள்களைக் கொண்டு, ஷை பாகத்தினரில் ஒருவராகிய அழகப்ப செட்டியாரால் பல திருப்பணிகள் செய்யப் பெற்றும், பல திருவாபரணங்கள், வாகனங்கள் அமைக்கப் பெற்றும், ஸ்ரீமுக வைகாசி 23-ம் நாள் (5-6-1933) கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

குறிப்பு:—ஆ. தெற்கூர் ஆறு. நா. ஆறுமுகம் செட்டியார், அவர் சகோதரர்கள் ஆகிய இவர்களால் ரூபாய் ஏழாயிரம் (7,000) செலவில் பசுமடமும், பூலாங்குறிச்சி ராம. ப. வ. இராமநாதன் செட்டியாரால், 1928-ம் ஆண்டில் ரூபாய் பதினாயிரம் (10,000) செலவில் நந்தனவனமும், ரூபாய் பதினெனன்றாயிரம்

(11,000) செலவில் விடுதியும், ரூபாய் பதினாயிரம் (10,000) செலவில் வள்ளியம்மை வடிவேலர்க்குச் சுவர்ணகவசமும் அமைக்கப் பெற்றுள்ளன.

## பொருள் வைத்த சேரி
(சிக்கல்)

இவ்வூரில் உள்ள சிவாலயம் காரைக்குடி நா. வ. மெய்யப்ப செட்டியார், சா. நா. சொக்கலிங்கம் செட்டியார், ஆகிய இருவர் முயற்சியாலும், நகரத்தார் பொருளுதவியாலும் ரூபாய் ஒரு லட்சத்து இருபத்தையாயிரம் (1,25,000) செலவில் திருப்பணி செய்யப் பெற்று, சுக்கில வைகாசி 6-ம் நாள் (19-5-1929) கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

## திருக் கண்ணங்குடி
(சிக்கலுக்கு அடுத்தது)

சுவாமி பெயர் காளத்தீசுரர்
அம்மை பெயர் ஞானம்பிகை

இவ்வூர்ச் சிவாலயம் கடியாபட்டி அழ. அ. அழகப்ப செட்டியாராலும், மலாக்கா நாட்டுக்கோட்டை நகரத்தாராலும், ராயவரம் ப. வ. குடும்பத்தினராலும் ரூபாய் இருபத்தையாயிரம் (25,000) செலவில் திருப்பணி செய்யப் பெற்று, சுக்கில ஆவணி 2-ம் நாள் (16-8-1929) கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

## 59. திருப்பள்ளியின் முக்கூடல்

சுவாமி பெயர் முக்கோண நாதர்
அம்மை பெயர் மைமேவு கண்ணியம்மை

இத்தலத்தில் உள்ள சிவாலயம் தேவகோட்டை அழ. சுப. சு. சுப்பையா செட்டியாரால் ரூபாய் அறுபதினுயிரம் (60,000) செலவில் திருப்பணி செய்யப் பெற்று 1903-ம் வருடம் கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

## 60. திருவாரூர்

சுவாமி பெயர் வன்மீகநாதர்
அம்மை பெயர் அல்லியங் கோதை யம்மை

இத் தலத்தில் உள்ள கோவில் தெவகோட்டை ராம. அரு. அரு. சத்திரம் அருணுசலம் செட்டியார், அவர் குமாரர் இராமநாதன் செட்டியார் ஆகிய இவர்களால் சில சீர் திருத்தங்கள் செய்யப்பெற்று விஜய ஆனி (1893 ஜூன்) யில் கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

பின்னர் தேவகோட்டை ராம. அரு. அரு. ராம. அருணுசலம் செட்டியாரால், மூன்றும் பிரகாரமும், இரண்டு முதல் பிரகாரங்களும், மதில்களும் சீரணோத்தாரணம் செய்யப் பெற்றன.

குறிப்பு :— ரூபாய் இரண்டு லட்சம் (2,00,000) செலவில் தேவகோட்டை மெ. அரு. அரு., மெ. அரு. நா., அரு. அரு. சோம., ராம. அரு. அரு. ராம., ராம. மெ. சித. வயி., இவர்களால் அறுபத்து மூவர் குருபூசை மடம் நிறுவப் பெற்றுக் குரு பூசைகள் நடைபெற்று வருகின்றன.

## 61. திருவிளமர்

சுவாமி பெயர் பதஞ்சலி மனோகரேசுரர்
வியாக்கிரபாதேசுரர்
அம்மை பெயர் யாழினுமென்மொழியம்மை

இத்தலத்தமர் கோவில் தேவகோட்டை வீர. லெ. சின்னையா செட்டியாரால், திருமதில் உள்பட எல்லாக் கோவில் திருப்பணிகளும் புதிதாகச் செய்யப்பெற்று, கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

## 62. திருக்கரவீரம்

சுவாமி பெயர் கரவீரேசுரர்
அம்மை பெயர் பிரத்தியட்சமின்னம்மை

இத்தலத்தில் உள்ள சிவாலயம் தேவகோட்டை ராம. அரு. அரு. ராம. அருணசலம் செட்டியாரால் ரூபாய் இருபதினயிரம் (20,000) செலவில் பழுது பார்க்கப்பெற்று ஸ்ரீமுக ஆவணி 17-ம் நாள் (1-9-1938) கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

## 63. திருச்சேறை

சுவாமி பெயர் செந்நெறியப்பர்
அம்மை பெயர் ஞானவல்லி

இத்தலத்தமர் கோவில் தேவகோட்டை மெ. வ. விசுவநாதன் செட்டியார், தியாகராசன் செட்டியார், மாணிக்கம் செட்டியார் ஆகிய இவர்களால், திருப்பணி செய்யப் பெற்றுளது.

## 64. திருப்பெருவேளூர்

சுவாமி பெயர் பிரியாயீசுவரர்
அம்மை பெயர் மின்னனையாளம்மை

இவ்வூர்ச் சிவாலயம் தேவகோட்டை ராம. அரு. அரு. ராம. அருணசலஞ் செட்டியாரால் ரூபாய் இருபதினயிரம் (20,000) செலவில் திருப்பணி செய்யப் பெற்று,

பிரசோற்பத்தி ஆனி 17-ம் நாள் (1-7-1931) கும்பாபி டேகம் செய்யப் பெற்றது.

## 65. திருஇராப்பட்டீச்சரம்

இவ்வூர்ச் சிவாலயம் தேவகோட்டை ராம. அரு. அரு. ராம. அருணாசலம் செட்டியாரால் ரூபாய் இருபத்தை யாயிரம் (25,000) செலவில் திருத்தப் பெற்று, தாது சித்திரை 18-ம் நாள் (30-4-1936) கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

## 66. மணற்கால்

இவ்வூர்ச் சிவாலயம் தேவகோட்டை ராம. அரு. அரு. ராம. அருணாசலம் செட்டியாரால் ரூபாய் முப்பத்தை யாயிரம் (35,000) செலவில் புதுப்பிக்கப் பெற்று, தாது ஐப்பசி 12-ம் நாள் (28-10-1936) கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

## 67. தனிச்சாத்தங்குடி

இத்தலத்தமர் கோவிலில் கும்பகோணம் கடை சேவு. லெ. லெ. தொகையைக் கொண்டு, ராம. அரு. அரு. ராம. வால் சீர்திருத்தம் செய்யப்பெற்று அட்சய ஆண்டு தை மாதம் (1927 ஜனவரி) சுவாமி அம்மை கோவிற் கும்பாபி டேகங்கள் செய்யப் பெற்றன.

விநாயகர், முருகேசர் இவர்களுக்குத் தனித்தனிக் கோவில்கள் கட்டி, பிரபவ தை 28-ம் நாள் (10-2-1928) கும்பாபிடேகங்கள் செய்யப் பெற்றன.

## 68. திருக்கடுவாய்க்கரைப்புத்தூர்

சுவாமி பெயர் சொர்னபுரீசுவரர்
அம்மை பெயர் சிவாம்பிகை

இவ்வூர்ச் சிவாலயம் தேவகோட்டை பழ. செ. குடும்பத்தாரால் ரூபாய் மூன்று லட்சம் (3,00,000) செலவில் புதிதாய்த் திருப்பணி செய்யப் பெற்று, ஆனந்த ஆனி 27-ம் நாள் (10-7-1914) முதற் கும்பாபிடேகமும், தாரண ஆனி 20-ம் நாள் (3-7-44) ரூபாய் பதினேழாயிரம் (17,000) செலவில் இரண்டாங் கும்பாபிடேகமும் செய்யப் பெற்றன.

குறிப்பு :—ரூபாய் நாற்பத்தையாயிரம் (45,000) செலவில் தேவகோட்டை அ. ராம. அ. லெ. குடும்பத்தாரால் பசுமடமும், ரூபாய் பதினேழாயிரம் (17,000) செலவில் ஷியாரால் திருக்குளமும், ரூபாய் எழாயிரம் (7,000) செலவில் தேவகோட்டை மு. ப. ராம. வெ. குடும்பத்தினரால் திருநந்தனவனமும், ரூபாய் எழாயிரத்து ஐந்நூறு (7,500) செலவில் இளையாத்தன்குடி ஒக்கூர் நகரத்தாரால் காலசந்திக் கட்டளையும், ரூபாய் ஒன்பதாயிரத்து ஐந்நூறு (9,500) செலவில் நாட்டரசன் கோட்டை அரு. ஆ. ஆறுமுகம் செட்டியாரால் சாயரட்சைக் கட்டளையும், ரூபாய் எழாயிரத்து ஐந்நூறு (7,500) செலவில் தேவகோட்டை ஆறு. மொ. வ. இராமநாதன் செட்டியாரால், இராசகோபுரமும் நிறுவப் பெற்றுள்ளன.

## 69. திருஇரும்பூளை (ஆலங்குடி)

சுவாமி பெயர் காசி ஆரணியேசுரர்
அம்மை பெயர் ஏலவார் குழலியம்மை

இத்தலத்தில் உள்ள சிவாலயம் தேவகோட்டை பழ. செ. இலக்குமணன் செட்டியார், பழநியப்ப செட்டியார், அ. கண. வீரப்ப செட்டியார், நாட்டரசன்கோட்டை

அரு. ஆ. ஆறுமுகம் செட்டியார், தேவகோட்டை ஆ. வி. க. மெய்யப்ப செட்டியார், பெரி. லெ. வெ. குடும்பத்தார், மகிபாலன்பட்டி அழ. கரு. கருப்பன் செட்டியார், தேவகோட்டை நகரத்தார் சிலர், வேகுப்பட்டி நகரத்தார், பிள்ளையார்பட்டி நகரத்தார், கல்லல் நகரத்தார், கானடுகாத்தான் ராஜா ஸர். அண்ணாமலைச் செட்டியார், ஆகிய இவர்களால் ரூபாய் நான்கு லட்சத்து எழுபத்தையாயிரம் (4,75,000) செலவில் திருப்பணி செய்யப்பெற்று, பிரமோதூத வைகாசி 19-ம் நாள் (1-6-1930) கும்பாபிடேகம் சிறப்புறச் செய்யப் பெற்றது.

குறிப்பு:—ரூபாய் ஐயாயிரம் (5,000) செலவில் தேவகோட்டை பெரி. சோம. சோமசுந்தரம் செட்டியாரால் திருநந்தனவனமும், ரூபாய் பதினாயிரம் (10,000) செலவில் தேவகோட்டை மு. ப. ராம. வெ. வால் பசுமடமும், ரூபாய் பதினாயிரம் (10,000) செலவில் நாட்டரசன் கோட்டை அரு. சு. கண்ணப்ப செட்டியாரால் திருக்குளமும், ரூபாய் எழாயிரத்து ஐந்நூறு (7,500) செலவில் தேவகோட்டை ஆறு. மொ. வ. இராமநாதன் செட்டியாரால் தெற்கு ராச கோபுரமும் நிறுவப் பெற்றுள்ளன.

## 70. திருஅவளிவணல்லூர்

சுவாமி பெயர் சாட்சிநாயகேசுரர்
அம்மை பெயர் சவுந்தரநாயகி

இத்தலத்தமர் கோவில் காரைக்குடி மெ. மெ. மெய்யப்ப செட்டியார், நேமத்தான்பட்டி மு. பெ. காசிச் செட்டியார், கோட்டையூர் க. வீ. சொ. அழகப்ப ஐயா ஆகிய இவர்களால் திருப்பணி செய்யப் பெற்றுளது.

## 71. திருவெண்ணியூர்

சுவாமி பெயர் வெண்ணிக்கரும்பர்
அம்மை பெயர் அழகியநாயகி

இவ்வூர்க் கோவில் தேவகோட்டை மெ. சித. வயி. இராமநாதன் செட்டியாரால் ரூபாய் எழுபதினுயிரம் (70,000) செலவில் புதிதாகத் திருப்பணி செய்யப் பெற்று, விளம்பி தை மாதம் (1899-ஜனவரி) முதற் கும்பாபிடேக மும், பின்னர் ஷையார் குமாரர் வைரவன் செட்டியாரால் திருப்பணி திருத்தப் பெற்று ருதிரோத்காரி ஆவணி 8-ம் நாள் (24-8-1923) இரண்டாங் கும்பாபிடேகமும் செய் யப் பெற்றன.

## 72. திருப்பூவனூர்

சுவாமி பெயர் புஷ்பவனநாதர்
அம்மை பெயர் கற்பகவல்லி

இவ்வூரில் காரைக்குடி பனை. மெ. மெ. பழநியப்ப செட்டியாரால் ரூபாய் இருபதாயிரம் (20,000) செலவில் திருநந்தனவனம், பசுமடம், விடுதி, அந்தணர் உறையுள் முதலியன நிறுவப் பெற்றுள்ளன.

## 73. திருப்பாதாளேச்சுரம்

சுவாமி பெயர் நாகநாதர்
அம்மை பெயர் அமிர்தநாயகி

இத்தலத்தில் உள்ள சிவாலயம் ஒக்கூர் சி. கரு. சி. லெ. இலக்குமணன் செட்டியாரால் ரூபாய் மூன்று லட்சம் (3,00,000) செலவில் சிறப்புறத் திருப்பணி செய்யப் பெற்று, யுவ ஆவணி 30-ம் நாள் (15-9-1935) கும்பாபி டேகம் செய்யப் பெற்றது.

## 74. திருக்களர்

சுவாமி பெயர் களர்முளைநாதேசுரர்
அம்மை பெயர் அழகேசுரியம்மை

இத்தலத்தில் உள்ள சிவாலயம் கோவிலூர் வீர சேகரஞான தேசிகர் பெருமுயற்சியால், நகரத்தார் பொருளுதவி கொண்டு ரூபாய் மூன்றரை லட்சம் (3,50,000) செலவில் திருத்தமுறத் திருப்பணி செய்யப் பெற்று, விரோதிகிருது சித்திரை 22-ம் நாள் (4-5-1911) முதற் கும்பாபிடேகமும், ஸ்ரீ மகாதேவ ஞானதேசிகர், கோட்டையூர் க. வீ. சொ. அழகப்ப செட்டியார் இவர்கள் முயற்சியால் ஸ்ரீமுக வைகாசி 30-ம் நாள் (12-6-1933) இரண்டாங் கும்பாபிடேகமும் செய்யப் பெற்றன.

குறிப்பு:—ரூபாய் முப்பதாயிரம் (30,000) செலவில் நகரத்தார்களால் திருக்களர்ஆண்டவர் சமாதிக் கோவிலும், ரூபாய் பதினையாயிரம் (15,000) செலவில் காரைக்குடி சா. நா. அ. அழ. குடும்பத்தினரால் 16 கால் மண்டபமும், ரூபாய் அறுபதாயிரம் (60,000) செலவில் காரைக்குடி பழ. வெ. ராம. வால் இருக்கு வேத பாடசாலையும், ரூபாய் ஆறுயிரம் (6,000) செலவில் ஷியூர் ஆத. பழ. பழநியப்ப செட்டியாரால் எசுர்வேத பாடசாலையும், ரூபாய் ஆறுயிரம் (6,000) செலவில் ஆத்தன்குடி சா. நா. நாச்சியப்ப செட்டியாரால் சாமவேத பாடசாலையும், ரூபாய் எழுபதினுயிரம் (70,000) செலவில் காரைக்குடி முத்து. அரு. மு. அருணசலம் செட்டியார், பாகனேரி பெரி. அழ. மு. முத்துக்கருப்பன் செட்டியார் இவர்களால் தேவார பாடசாலையும், குருபூசை மடமும், ரூபாய் எட்டாயிரம் (8,000) செலவில் காரைக்குடி ஆத. மெ., ஆத.

லெ. ஆத., இவர்களால் பசுமடமும், ரூபாய் பன்னீராயிரம் (12,000) செலவில் காரைக்குடி சா. நா. அ. சொ. வகையினரால் திருக்குளமும், ரூபாய் இருபதினுயிரம் (20,000) செலவில் நகரத்தார்களால் வேதாந்த மடமும், ரூபாய் ஆறுயிரம் (6,000) செலவில் காரைக்குடி ஆத. மெ., ஆத. லெ. ஆத., இவர்களால் திருநந்தனவனமும், ரூபாய் பதினுயிரம் (10,000) செலவில் அழகாபுரி சி. சு. சுப்பிரமணியன் செட்டியாரால் வெள்ளிக் கேடகமும், ரூபாய் பன்னீராயிரம் (12,000) செலவில் பழ. வெ. ராம., ஆத. மெ. வகையினரால் அம்மைக்குத் தங்க அங்கியும் அமைக்கப் பெற்றுள்ளன.

## 75. திருவுசாத்தானம்

சுவாமி பெயர் மந்திரபுரீசுரர்
அம்மை பெயர் பெரியநாயகியம்மை

இத்தலத்தில் உள்ள அம்மை கோவில் கொத்தமங்கலம் அழ. அரு. காசிச் செட்டியாரால் திருப்பணி செய்யப் பெற்றுளது.

## 76. திருத்தண்டலைநீணெறி

சுவாமி பெயர் நீணெறிநாதேசுரர்
அம்மை பெயர் ஞானம்பிகை

இத்தலத்தில் உள்ள சிவாலயம், தேவகோட்டை ராம. அரு. அரு. அருணசலம் செட்டியாரால் ரூபாய் ஒரு லட்சம் (1,00,000) செலவில் திருப்பணி செய்யப் பெற்று, விகாரி தை 23-ம் நாள் (4-2-1900) கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

## 77. திருவெண்டுறை

(திருவண்டுதுறை)

சுவாமி பெயர் வெண்டுறைநாதேசுரர்
அம்மை பெயர் வேனெடுங்கண்ணியம்மை

இத்தலத்தில் உள்ள சிவாலயம், தேவகோட்டை மெ. வகையினராலும், ராம. அரு. அரு. சோமசுந்தரம் செட்டியாராலும், ரூபாய் ஒரு லட்சம் (1,00,000) செலவில் திருப்பணி செய்யப்பெற்று ஆனந்த ஆனி 23-ம் நாள் (6-7-1914) கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

## 78. திருக்கொள்ளம்புதூர்

சுவாமி பெயர் வில்வவனேசுரர்
அம்மை பெயர் சவுந்தராம்பிகை

இத்தலத்தில் உள்ள சிவாலயம், நாற்சாந்துபட்டி பெ. ராம. இராமன் செட்டியாரால் ரூபாய் ஆறு லட்சம் (6,00,000) செலவில் மிக அழகான முறையில் திருப்பணி செய்யப் பெற்று, ஷையார் குமாரர்கள் இராமநாதன் செட்டியார், இலக்குமணன் செட்டியார், சிதம்பரம் செட்டியார், ஆகிய இவர்களால் ஈசுவர ஆனி 14-ம் நாள் (27-6-1937) ரூபாய் நாற்பதாயிரம் (40,000) செலவில் கும்பாபிடேகம் மிகச் சிறப்புறச் செய்யப் பெற்றது.

குறிப்பு:—ரூபாய் நாற்பத்தெட்டாயிரம் (48,000) செலவில் கெ. இலக்குமிபுரம் லெ. அ. வயி. வயிரவன் செட்டியாரால் பசுமடமும், பெ. ராம. வால் திருநந்தனவனமும் நிறுவப் பெற்றுள்ளன.

## 79. திருப்பேரெயில்

சுவாமி பெயர் சகதீசுவரர்
அம்மை பெயர் சகந்நாயகி

இத்தலத்தமர் கோவில், காரைக்குடி அ. ராம. கதி. இராமசாமிச் செட்டியாரால் திருப்பணி செய்யப்பெற்று, ஈசுவர பங்குனி 24-ம் நாள் (6-4-38) கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

## 80. திருக்கொள்ளிக்காடு

சுவாமி பெயர் அக்கினீசுரர்
அம்மை பெயர் பஞ்சினுமெல்லடியம்மை

இவ்வூர்ச் சிவாலயம் தேவகோட்டை மெ. வகையினரால் ரூபாய் ஐம்பதினயிரம் (50,000) செலவில் திருப்பணி செய்யப் பெற்று விகுருதி (1890) வருடத்தில் கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

## 81. திருத்தெங்கூர்

சுவாமி பெயர் வெள்ளிமலை நாதேசுரர்
அம்மைபெயர் பெரியநாயகி யம்மை

இத்தலத்தில் உள்ள சிவாலயம் கண்டனூர் பெ. அழ. வீரப்ப செட்டியாரால் ரூபாய் இரண்டு லட்சத்து ஐம்பதாயிரம் (2,50,000) செலவில் புதிதாய்த் திருப்பணி செய்யப் பெற்று, விரோதிகிருது வைகாசி 19-ம் நாள் (1-6-1911) கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

## 82. திருநெல்லிக்கா

சுவாமி பெயர் நெல்லிவனநாதேசுரர்
அம்மை பெயர் மங்களநாயகி யம்மை

இத்தலத்தில் உள்ள சிவாலயம் தேவகோட்டை வீர. ராம. சு. சொக்கலிங்கம் செட்டியாரால் ரூபாய் எழுபதினுயிரம் (70,000) செலவிலும், அழகாபுரி சு. பெரி. சு. சுப்பிரமணியன் செட்டியாரால் ரூபாய் எண்ணுயிரம் (8,000) செலவிலும், அரிமளம் பழ. வ. முத்தடைக்கப்ப செட்டியாரால் ரூபாய் பதினுருயிரம் (16,000) செலவிலும், திருப்பணி செய்யப் பெற்றுச் சார்வரி (1900) வருடம் கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

குறிப்பு:—கானுடுகாத்தான் கா. அ. மு. கா. வால் திரு நந்தனவனமும், புதுவயல் வீ. அ. குழந்தையன் செட்டியாரால் திருக்குளமும் நிறுவப்பெற்றுள்ளன.

## 83. திருநாட்டியத்தான்குடி

இத்தலத்தில் உள்ள சிவாலயம் தேவகோட்டை வெ. தெ. அண்ணுமலைச் செட்டியார், முத்தையாச் செட்டியார், இலக்குமணச் செட்டியார் ஆகிய இவர்களால் திருப்பணி செய்யப் பெற்றுப் பிலவங்க வைகாசி 10-ம் நாள் (23-5-1907) கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

## 84. திருக்காருயில்

(திருக்காரை வாசல்)

சுவாமி பெயர் கண்ணுயிர நாதேசுரர்
அம்மை பெயர் கைலாய நாயகி

இத்தலத்தில் உள்ள சிவாலயம் தேவகோட்டை முத்து. கரு. அரு., முத்து. க. மா., முத்து க. அ. லெ, குடும்பத்தினரால் திருப்பணி செய்யப் பெற்றுப் பிங்கள தை 10-ம் நாள் (23-1-1918) முதற் கும்பாபிடேகமும், விகுருதி தை 29-ம் நாள் (11-2-51) இரண்டாங் கும்பாபிடேகமும் செய்யப்பெற்றன.

குறிப்பு :—ரூபாய் அறுபத்தையாயிரம் (65,000) செலவில் ஒக்கூர் சி. கரு. சி. லெ. வால் பாடசாலைகளும், விடுதியும், அந்தணர் உறையுளும், ரூபாய் ஐயாயிரம் (5,000) செலவில் தேவகோட்டை எ. பெரி. லெ. அழகப்ப செட்டியாரால் குருபூசை மடமும், ரூபாய் பதினாயிரம் (10,000) செலவில் ஷை ஊர் தி. சு. பழ. வால் திருநந்தனவனமும், ரூபாய் ஐம்பதினாயிரம் (50,000) செலவில் ஷை ஊர் அழ. வீர. சித. வால் திருக்குளமும் நிறுவப் பெற்றுள்ளன.

## 85. திருக்குண்டையூர்

இத்தலத்தில் உள்ள சிவாலயம் தேவகோட்டை பெரி. செ. குப்பான் செட்டியார், கரு. கி. சொர்ன நாதன் செட்டியார் இவர்களால், ரூபாய் ஒரு லட்சம் (1,00,000) செலவில் திருப்பணி செய்யப் பெற்று, குரோதன ஆவணி 20-ம் நாள் (4-9-1925) கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

## 86. திருமறைக்காடு

(வேதாரண்யம்)

சுவாமி பெயர் மறைக்காட்டீசுவரர்

அம்மை பெயர் யாழைப்பழித்த மொழியம்மை

இத்தலத்தில் உள்ள சிவாலயம், ஒக்கூர் வீர. ராம. நா. ராம. இராமநாதன் செட்டியாரால் ரூபாய் எழுபதினாயிரம் (70,000) செலவில் திருப்பணி செய்யப் பெற்றுளது.

குறிப்பு :—ரூபாய் ஒன்றரை லட்சம் (1,50,000) செலவில் பாகனேரி பெரி. அழ. மு. வால் அன்னசத்திரமும்,

ஒக்கூர் சி. கரு. சித. சிந்தாமணி செட்டியாரால் தேவாரப் பாடசாலையும், பள்ளத்தூர் அழ. முரு. அழ. சொ., அழ. ராம. சொ. அ., காரைக்குடி ந. ப. ராம. க. இராமசாமிச் செட்டியார் இவர்களால் பசுமடங்களும், ஒக்கூர் சி. கரு. சித. சி., கோட்டையூர் நா. ராம. நா. நாகப்ப செட்டியார், காரைக்குடி செ. அ. ராம. அழ. அருணசலம் செட்டியார், ஒக்கூர் வீர. ராம. நா. ராம., இவர்களால் திருநந்தன வனங்களும், பள்ளத்தூர் ராம. அரு. ராம. அருணசலம் செட்டியாரால் குருபூசை மடமும், பலவான்குடி வெ. சு. முத்துவள்ளியப்ப செட்டியார், காரைக்குடி லெ. வீர. வீரப்ப செட்டியார், நேமுத்துப்பட்டி சி. வீ. நா. பழநியப்ப செட்டியார் இவர்களால் தண்ணீர்ப் பந்தர்களும் நிறுவப் பெற்றுள்ளன.

## 87. திரு அகத்தியான்பள்ளி

சுவாமி பெயர் அகத்தீசுரர்
அம்மை பெயர் பாகம் பிரியாநாயகி

இத்தலத்தில் உள்ள சிவாலயத்தில் தேவகோட்டை மெ. அரு. நா. இராமநாதன் செட்டியார், மெ. அரு. அரு. அருணசலம் செட்டியார் இவர்களால் ரூபாய் இரண்டு லட்சம் (2,00,000) செலவில் திருப்பணியும், ராம. அரு. அரு. வால் கொடுக்கப்பெற்ற ரூபாய் ஏழாயிரம் உள்பட ரூபாய் முப்பத்தேழாயிரம் (37,000) செலவில் பழ. சோம. வால் திருப்பணியும் செய்யப் பெற்றுள்ளன.

பழ. சோம. வால் ஸ்ரீமுக ஆனி 23-ம் நாள் (6-7-1933) முதற் கும்பாபிடேகமும், ரூபாய் பதினையாயிரம் (15,000)

செலவில் பவ ஆனி 24-ம் நாள் (8-7-34) இரண்டாங் கும்பாபிடேகமும் செய்யப் பெற்றன.

## 88. பொய்கைநல்லூர்

இவ்வூர்ச் சிவாலயம் தேவகோட்டை மெ. வ. விசுவ நாதன் செட்டியார், தியாகராசச் செட்டியார், மாணிக்கம் செட்டியார் இவர்களால் புதுக்கித் திருப்பணி செய்யப் பெற்றுக் குரோதன தை 12-ம் நாள் (25-1-1926) கும்பா பிடேகம் செய்யப் பெற்றது.

## 89. கிள்ளுகுடி

இவ்வூர்ச் சிவாலயம் கொத்தமங்கலம் நகரத்தார் களால் திருப்பணி செய்யப்பெற்றுச் சோபகிருது ஆனி 25-ம் நாள் (9-7-1903) கும்பாபிடேகம் செய்யப்பெற்றது.

குறிப்பு:—கொத்தமங்கலம் நகரத்தார்களால் பசுமடம், திருநந்தனவனம், திருக்குளம், விடுதி முதலியன நிறுவப் பெற்றுள்ளன.

## 90. திருத்துறைப்பூண்டி

இத்தலத்தில் உள்ள சிவாலயம், கண்டனூர் பெ. அழ. வீரப்ப செட்டியாரால் ரூபாய் நான்கு லட்சத்து ஐம்பதா யிரம் (4,50,000) செலவில் திருப்பணி செய்யப் பெற்றுப் பிரசோற்பத்தி சித்திரை 30-ம் நாள் (13-5-1931) கும்பாபி டேகம் செய்யப் பெற்றது.

## 91. சுவாமிமலை

இம்மலைக் கீழ்க் கோவில், கானாடுகாத்தான் வெ. அரு. அருணாசலம் செட்டியார், அவர் குமாரர் வெள்ளையப்ப செட்டியார் இருவராலும் புதிதாய்த் திருப்பணி செய்யப்

பெற்றுப் பிலவங்க சித்திரை 16-ம் நாள் (28-4-1907) முதற் கும்பாபிடேகமும், பிரபவ ஆனி 5-ம் நாள் (19-6-1927) இரண்டாங் கும்பாபிடேகமும் செய்யப் பெற்றன.

## 92. விராலிமலை

மிகப் புராதனமான இவ்வூர்க் கோவிலில், நேமுத்துப் பட்டி மெ. மு. பழ. பழநியப்ப செட்டியார், ஷையார் குமாரர்கள் சொக்கலிங்கம் செட்டியார், காசிச் செட்டியார், பழநியப்ப செட்டியார் இவர்களால், பல சீர்திருத்தங்கள் செய்யப் பெற்றுள்ளன.

## 93. மட்டையாந்திடல்

இவ்வூர்ச் சிவாலயம், காரைக்குடி அ. மு. க. குடும்பத்தினரால் புதிதாய்த் திருப்பணி செய்யப் பெற்றுப் பிரமோதூத ஆனி 23-ம் நாள் (7-7-1930) கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

## 94. நாகை வெளிப்பாளையம்

ஆனந்தவல்லி உடனுய அகத்தீசர் கோவில், தேவகோட்டை கும. கரு. கரு. முத்தையா செட்டியாரால் ரூபாய் ஒரு லட்சம் (1,00,000) செலவில் திருப்பணி செய்யப்பெற்று, சித்தார்த்தி தை 13-ம் நாள் (26-1-1920) கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

குறிப்பு:—ரூபாய் பதின்மூன்றுயிரத்து ஐந்நூறு (13,500) செலவில் கும. கரு. கும. வால் பசுமடம் சிறுவப் பெற்றுள்ளது.

## 95. முத்துப்பேட்டை

இவ்வூர்ச் சிவாலயம், தேவகோட்டை சத்திரம் சோமசுந்தரம் செட்டியாரால் ரூபாய் மூன்று லட்சத்து ஐம்

பதினயிரம் (3,50,000) செலவில் திருப்பணி செய்யப் பெற்று, ரௌத்திரி சித்திரை 13-ம் நாள் கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

## 96. தில்லைவிளாகம்

### (நடராஜப் பெருமான்)

பூமியுள் இருந்து கிடைக்கப் பெற்றதும் ஒப்புயர் வற்றதுமான இந் நடராசப் பெருமான் எழுந்தருளியிருக்கும் சிவாலயம், காரைக்குடி முத்துப்பட்டினம் பெரி. கா. நா. குடும்பத்தினரால் ரூபாய் இரண்டு லட்சம் (2,00,000) செலவில் திருப்பணி செய்யப் பெற்றுக் கும்பாபிடேகம் செய்யப் பெற்றுள்ளது.

குறிப்பு :—ரூபாய் ஆறுயிரம் (6,000) செலவில் காரைக்குடி மு. சிவ. மெ. மெய்யப்ப செட்டியார், ஷையார் குமாரர் வினைதீர்த்தான் செட்டியார், லெட்சுமணன் செட்டியார் இவர்களால் பசுமடமும், ரூபாய் மூவாயிரம் (3,000) செலவில் காரைக்குடி ராம. மு. ராம. இராமன் செட்டியார் ஷையார் குமாரர் காசிச் செட்டியார் இவர்களால் திருநந்தனவனமும் நிறுவப் பெற்றுள்ளன.

# பாண்டி நாட்டுத் தலங்கள்

## 97. திருஆலவாய்

(மதுரை)

சுவாமி பெயர் சொக்கநாதர்
அம்மை பெயர் மீனாட்சியம்மை

உலகெலாம் ஈன்ற உமையம்மை, "செழியர்பிரான் திருமகளாய்க் கலை பயின்று முடி புனைந்து செங்கோலோச்சி"யதும், எல்லாம் வல்ல இறைவன் எண்ணெண் திருவிளையாடல் இனிதியற்றியதுமான இம் மாபெருந் தலத்துச் சிவாலயத்தில், அமராவதிபுதூர் வயிநாகரம் நாகப்பையா, வேங்கடாசல ஐயா, அண்ணாமலைச் செட்டியார், முத்தையா செட்டியார் என்ற சுப்பிரமணியன் செட்டியார் இவர்களால், சுவாமி கோவில் முதற் பிரகாரம், இரண்டாம் பிரகாரம் தளவரிசைகள், ஆடி வீதித் தளவரிசை, சுவாமி அம்மை தங்க விமானம், தங்கம் வெள்ளி, வாகனங்கள், திருவாபரணங்கள், பல மண்டபங்கள், அம்மன் தேர் முதலியன அமைக்கப் பெற்றும், மொட்டைக் கோபுரம் முழுக்கோபுரமாக அமைக்கப் பெற்றுமுள்ளன.

ஈசுவர தை 26-ம் நாள் (6-2-1878), ருதிரோத்காரி ஆனி 17-ம் நாள் (1-7-1923) இந்த நாட்களில் கும்பாபிடேகங்கள் நிகழ்ந்தன.

இக் கோவிலுக்கு வயிநாகரம் குடும்பத்தார் ரூபாய் இருபத்தைந்து லட்சம் (25,00,000) செலவிட்டிருக்கின்றனர்.

ரூபாய் இருபதாயிரம் (20,000) செலவில் ஒக்கூர் சி. கரு. சி. லெ. வால் தேவார பாடசாலையும், வேங்கடாசல ஐயா அவர்களால் குருபூசை மடமும், கானாடுகாத்தான் க. வெ. வால் வேதபாடசாலையும், பூங்குடி கூ. க. சித. வால் பசுமடமும், நகரத்தார் பொதுவில் ரூபாய் நாற்பதாயிரம் (40,000) செலவில் நகரமடமும் அமைக்கப் பெற்றுள்ளன.

ஆ. தெற்கூர் கரு. முத்து. தியாகராசச் செட்டியாரால், ரூபாய் ஐந்து லட்சம் (5,00,000) மூலதனம் வைத்தும், ரூபாய் எழு லட்சம் (7,00,000) செலவிட்டு நிலம் வாங்கிக் கட்டிட முதலியன கட்டியும் (12-10-49) முதல் "தியாகராசா கல்லூரி" நடத்தப்பெற்று வருகின்றது.

## 98. இம்மையே நன்மை தருவார் கோவில்

(மதுரை)

சுவாமி கோவில், விநாயகர் கோவில், சுப்பிரமணியர் கோவில் முதலியன ரூபாய் ஒரு லட்சம் (1,00,000) செலவில் தேவகோட்டை மெ. ராம. அ. முத்தையா செட்டியார் என்ற இராமநாதன் செட்டியார் ஷையார் குமாரர் சுப்பிரமணியன் செட்டியார் இவர்களாலும், ரூபாய் அறுபதினாயிரம் (60,000) செலவில் அம்மை கோவில் தேவகோட்டை பழ. சு. அரு. அருணாசலம் செட்டியாராலும் அவர் குமாரர்களாலும் செம்மையாய்த் திருப்பணி செய்யப் பெற்று, மன்மத ஆவணி 8-ம் நாள் (23-8-1895) கும்பாபிடேகம் நிறைவேறிற்று.

## 99. திரு ஆப்பனூர்

சுவாமி பெயர் ஆப்பனூரீசுரர்
அம்மை பெயர் குரவங்கமழ்குழலம்மை



மதுரை தியாகராய கல்லூரி—கட்டிடம்.

இத்தலத்தில் உள்ள சிவாலயம், அமராவதிபுதூர் வயிநாகரம் நாகப்ப ஐயா, வேங்கடாசல ஐயா இவர்களால் ரூபாய் முப்பத்தேழாயிரம் (37,000) செலவில் திருப்பணி செய்யப் பெற்று, விசு ஆவணி 5-ம் நாள் (19-8-1881) முதற் கும்பாபிடேகமும், ஷை குடும்பத்தினரால் திருப்பணிகள் சில செய்யப்பெற்றுக் காளயுக்தி ஆனி 14-ம் நாள் (27-6-1918) இரண்டாங் கும்பாபிடேகமும் செய்யப் பெற்றன.

குறிப்பு:—ரூபாய் பன்னீராயிரம் (12,000) செலவில் அரிமளம் பரி. முரு. ராம. முருகப்ப செட்டியாரால் பசுமடமும், ரூபாய் ஒன்பதாயிரம் (9,000) செலவில் ஒக்கூர் வீர. ராம. அ. ராம. இராமநாதன் செட்டியாரால் வேத பாடசாலையும், ரூபாய் பன்னீராயிரம் (12,000) செலவில் பூலாங்குறிச்சி ராம. ப. வ., தேவகோட்டை ராம. அரு. அரு. இவர்களால் திருநந்தனவனங்களும் நிறுவப் பெற்றுள்ளன.

## 100. திருப்பரங்குன்றம்

இத்தலத்தில் உள்ள சிவாலயம் வயிநாகரம் நாகப்ப ஐயா, வேங்கடாசல ஐயா, ஷை குடும்பத்தினர் இவர்களால் திருப்பணி செய்யப் பெற்று, நந்தன தை 19-ம் நாள் (30-1-1893) கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

குறிப்பு:—ரூபாய் நாற்பதினாயிரம் (40,000) செலவில் மதுரை நாட்டுக்கோட்டை நகரத்தார்களால், அன்னதான மடமும், விடுதியும், தெப்பக் குளமும், ரூபாய் முப்பதினாயிரம் (30,000) செலவில் சக்கந்தி சுப. க. சுப்பிரமணியன் செட்டியாரால் சரவணப் பொய்கைத் திருக்குளமும், புதுவயல் அ. சு. பழ.

16

வால் பசுமடமும், நாகப்ப செட்டியாரால் திருநந்தன வனமும் நிறுவப் பெற்றுள்ளன.

## 101. திரு ஏடகம்

| | |
|---|---|
| சுவாமி பெயர் | ஏடகநாதேசுரர் |
| அம்மை பெயர் | நறுங்குழல்நாயகி |
| | ஏலவார்குழலி |

இத்தலத்தில் உள்ள சிவாலயம், தேவகோட்டை உ. ராம. மெ. சு. பெரிய சேவுகன் செட்டியார், சின்னச் சேவுகன் செட்டியார், மெய்யப்ப செட்டியார் இவர்களால் ரூபாய் ஏழு லட்சம் (7,00,000) செலவில் மிக அழகுறத் திருப்பணி செய்யப் பெற்று, பிரமோதூத வைகாசி 26-ம் நாள் (8-6-1930) கும்பாபிடேகம் செய்யப் பெற்றுளது.

குறிப்பு:—ரூபாய் ஐம்பத்து மூன்ருயிரம் (53,000) செலவில் தேவகோட்டை மு. பெரி. மலையாண்டி செட்டியார், உ. ராம. மெ. சுப. சேவு. மெய்யப்ப செட்டியார், சி. க. கரு. சாமிநாதன் செட்டியார் இவர்களால் வேத பாடசாலைகளும், ரூபாய் ஏழாயிரம் (7,000) செலவில் உ. ராம. மெ. சுப. சேவு. பொதுவில் பசுமடமும், ரூபாய் பதிமூவாயிரம் (13,000) செலவில் உ. ராம. மெ. சுப. சேவு. மெ. மெய்யப்ப செட்டியாரால் திருநந்தனவனமும், ரூபாய் ஆருயிரம் (6,000) செலவில் நகரத்தாரிடமிருந்து மு. ப. முத்தையா செட்டியார் வசூலித்த நிதியிலிருந்து குருபூசை மடமும், மு. ப. முத்தையா செட்டியாரால் ரூபாய் இருபத்தையாயிரம் (25,000) செலவில் அந்தணர் உறையுளும், ஷையாரால் ரூபாய் பதினையாயிரம்

(15,000) செலவில் ஆற்றுப் படித்துறையும், ரூபாய் ஏழாயிரம் (7,000) செலவில் நகர விடுதியும், ரூபாய் இரண்டாயிரம் (2,000) செலவில் சி. க. கரு. சாமி நாதன் செட்டியாரால் தண்ணீர்ப் பந்தரும் அமைக்கப் பெற்றுள்ளன.

## 102. தென்கரை

இவ்வூர்க் கோவில், அமராவதிபுதூர் வயிநாகரம் அ. இராமநாதச் செட்டியார் முயற்சியால், தேவகோட்டை நகரத்தார் பொருளுதவி கொண்டு ரூபாய் ஐயாயிரத்து ஐந்நூறு (5,500) செலவில் பல சீர்திருத்தங்கள் செய்யப் பெற்று, நந்தன கார்த்திகை 29-ம் நாள் (12-12-1892) கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

## 103. திருப்புத்தூர்

சுவாமி பெயர் புத்தூரீசுவரர்
அம்மை பெயர் சிவகாமியம்மை

இத்தலத்தில் உள்ள அம்மை கோவில், அமராவதி புதூர் வயிநாகரம் குடும்பத்தினர், பள்ளத்தூர் க. ப. குமரப்ப செட்டியார், கண்டவராயன்பட்டி பழ. கரு. குடும்பத்தினர் ஆகிய இவர்களால் ரூபாய் ஒரு லட்சம் (1,00,000) செலவில் திருப்பணி செய்யப் பெற்று, சார்வரி தை 27-ம் நாள் (8-2-1901) கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

குறிப்பு:—ரூபாய் ஐம்பதாயிரம் (50,000) செலவில் அமராவதிபுதூர் வயிநாகரம் சுப்பிரமணியன் செட்டியாராகிய முத்தையா செட்டியாரால் திருக்குளமும், ரூபாய் இருபத்தையாயிரம் (25,000) செலவில் பட்டமங்கலம் அழ. மெ. சு. சி. வால் வேத பாடசாலையும்,

ரூபாய் இருபத்தையாயிரம் (25,000) செலவில் கீழச் சிவற்பட்டி வெ. கரு. க. கருப்பன் செட்டியாரால் குருபூசை மடமும் நிறுவப் பெற்றுள்ளன.

## 104. திருப்புனவாயில்

சுவாமி பெயர் பழம்பதிநாதேசுரர்
அம்மை பெயர் கருணைநாயகியம்மை

இத்தலத்தில் உள்ள சிவாலயம், தேவகோட்டை அழ. சுப. பழ. குடும்பத்தினரால் திருப்பணி செய்யப் பெற்று, சோபகிருது வைகாசி 18-ம் நாள் (31-5-1903) கும்பாபிடேகம் செய்யப் பெற்றது. திருப்பணி, கும்பாபி டேகச் செலவு ரூபாய் ஒரு லட்சத்து அறுபதினாயிரம் (1,60,000) ஆகும்.

குறிப்பு:—ரூபாய் பதினையாயிரம் (15,000) செலவில் தேவகோட்டை சேவு. ராம. அரு. வால் பசு மடமும், ரூபாய் இருபத்தையாயிரம் (25,000) மூலதனம் வைத் துத் தேவகோட்டை அழ. சுப. பழ. வால் தேவார பாடசாலையும் திருநந்தனவனமும், ரூபாய் பதினாயிரம் (10,000) செலவில் காரைக்குடி அரு. அ. அரு. இராம சாமிச் செட்டியாரால் திருக்குளமும் நிறுவப் பெற்றுள்ளன.

## 105. திருஇராமேச்சுவரம்

சுவாமி பெயர் இராமநாதேசுவரர்
அம்மை பெயர் பருவதவர்த்தனி

இத்தலத்தில் உள்ள சிவாலயம், தேவகோட்டை அழ. அரு. குடும்பத்தினரால் திருப்பணி செய்யப் பெற்றுக் கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

குறிப்பு :—ரூபாய் பதினேழாயிரம் (17,000) செலவில் கண்டனூர் சி. ராம. சொ. சொக்கலிங்கம் செட்டியாரால் இந்துஸ்தானி சதாவிருத்தி மடமும், தேவகோட்டை வீர. ராம., வீர. லெ. குடும்பத்தினரால் தனுஷ்கோடி அன்ன சத்திரமும் நிறுவப் பெற்றுள்ளன. சத்திரத்துக்கு எனப் பாவாலி ஜமீனும் காயாங்குளம் என்னும் கிராமமும் வாங்கிவிடப்பட்டுள்ளன.

## 106. திருவாடானை

சுவாமி பெயர் ஆதிரத்தினேசுரர்
அம்மை பெயர் சினேகவல்லி

இத்தலத்தில் உள்ள சிவாலயம், தேவகோட்டை ராம. அரு. அரு. அருணசலம் செட்டியாரால் ரூபாய் இரண்டு லட்சத்து முப்பதாயிரம் (2,30,000) செலவில் திருப்பணி செய்யப் பெற்று, சார்வரி வைகாசி 8-ம் நாள் (20-5-1900) கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

பின்னர் ராம. அரு. அரு. ராம. அருணசலம் செட்டியாரால் ரூபாய் எட்டு லட்சம் (8,00,000) செலவில் மிகத் திருத்தமாகத் திருப்பணி செய்யப் பெற்றுக் கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

குறிப்பு :—ரூபாய் ஒரு லட்சத்து இருபதாயிரம் (1,20,000) செலவில் தேவகோட்டை கும. குடும்பத்தினரால் பிள்ளையார் கோவிலும் திருக்குளமும், ரூபாய் பதினையாயிரம் (15,000) செலவில் கும. கரு., கும. லெ., கும. சு. ராம. இவர்களால் பாடசாலையும், ரூபாய் பதினாயிரம் (10,000) செலவில் தேவகோட்டை பெரி. எ. திருநாவுக்கரசு செட்டியார், கோனபட்டு பெ. சித. இவர்களால் திருநந்தனவனமும் பசுமடமும்,

ரூபாய் ஐம்பத்தேழாயிரம் (57,000) செலவில் தேவ கோட்டை பெரி. லெ. வெ. பொதுவினரால் மங்க நாதன்குளம் பிள்ளையார் கோவில் விடுதி முதலியன வும், ரூபாய் இருபதினுயிரம் (20,000) செலவில் தேவ கோட்டை ராம. அரு. அரு. ராம. வால் மண்டபமும் அமைக்கப் பெற்றுள்ளன.

## 107. திருக்கானப்பேர்

(காளையார் கோவில்)

சுவாமி பெயர் காளையீசுரர், சுந்தரேசுரர், சோமேசுரர்

அம்மை பெயர் சொர்னவல்லி, மீனுட்சி, சவுந்தரநாயகி.

இத்தலத்தில் உள்ள சோமேசர் கோவில் அமராவதி புதூர் வயிநாகரம் வேங்கடாசலம் செட்டியாரால் ரூபாய் ஒரு லட்சம் (1,00,000) செலவில் திருப்பணி செய்யப் பெற்று, பார்த்திப தை 13-ம் நாள் (24-1-1886) கும்பாபி டேகம் செய்யப் பெற்றது.

காளையீசுரர் கோவில் தேவகோட்டை ஜமீந்தார் அழ. அரு. இராமசாமிச் செட்டியாரால் ரூபாய் இரண்டு லட் சத்து ஐம்பதினுயிரம் (2,50,000) செலவில் திருப்பணி செய் யப்பெற்றும், சொர்னவல்லியம்மை கோவில் தேவ கோட்டை தி. ராம. தி., ஷ சு. குடும்பத்தினரால் ரூபாய் எழுபத்தையாயிரம் (75,000) செலவில் திருப்பணி செய்யப் பெற்றும் விகாரி தை 23-ம் நாள் (22-1-1900) கும்பாபி டேகம் செய்யப் பெற்றுமுள்ளன.

சவுந்தரநாயகியம்மை கோவில் ஒக்கூர் சி. கரு. ஆ. கண்ணப்ப செட்டியாரால் ரூபாய் ஐம்பதாயிரம் (50,000)

செலவில் திருப்பணி செய்யப் பெற்றுச் சாதாரண ஆனி 14-ம் நாள் (27-6-1910) கும்பாபிடேகம் செய்யப்பெற்றது.

தேவகோட்டை அழ. அரு. ராம. அருணுசலம் செட்டியாரால் ரூபாய் ஒரு லட்சத்து ஐம்பதாயிரம் (1,50,000) செலவில் தெப்போற்சவ மண்டபம், சொக்கட்டான் காய்ச்சாரிமண்டபம், முதலியன நிறுவப் பெற்றுள்ளன.

குறிப்பு:—ரூபாய் இருபத்தொன்பதாயிரம் (29,000) செலவில் கொ. அழகாபுரி உ. தெ. மெ. சோம., சோழபுரம் சுப. க. அ. சித. ராம., கொ. அழகாபுரி உ. நா. ராம., க. மெ., கரு. கண. இவர்களால் வேதாகம பாடசாலைகளும், கானுடுகாத்தான் க. வெ. வால் தேவார பாடசாலையும், நகரத்தார்களால் ரூபாய் ஒரு லட்சம் (1,00,000) செலவில் வேதாந்த மடமும், ரூபாய் ஆருயிரம் (6,000) செலவில் நடராசபுரம் முரு. ராம. முரு. வால் குருபூஜை மடமும், ரூபாய் இரண்டாயிரம் (2,000) செலவில் வெற்றியூர் ஈரோடு முத்தையா செட்டியார், ஷை மு. அரு. மு. சோமசுந்தரம் செட்டியார் இவர்களால் திருநீறு மடமும், ரூபாய் பதினுயிரம் (10,000) செலவில் பனங்குடி முரு. உ. பழ. முரு. வால் குங்கிலியக்கலய நாயனர் மடமும், ரூபாய் முப்பதாயிரம் (30,000) செலவில் தேவகோட்டை அழ. அரு. கீழைவீட்டார், கொ. அழகாபுரி. க. மெ., தி. ராம. தி. இவர்களால் திருநந்தனவனமும், ரூபாய் முப்பத்தையாயிரம் (35,000) செலவில் தேவகோட்டை சொ. மெ. பழ., அழ. வீர. சித., பழ. ப. பழ. இவர்களால் பசுமடங்களும், ரூபாய் இருபத்தையாயிரம் (25,000) செலவில் நற்சாந்துபட்டி கும. பெரி. வால் அன்னசத்திரமும்

ரூபாய் ஐம்பத்தேழாயிரம் (57,000) செலவில் தேவ கோட்டை பெரி. லெ. வெ. பொதுவினரால் மங்க நாதன்குளம் பிள்ளையார் கோவில் விடுதி முதலியன வும், ரூபாய் இருபதினாயிரம் (20,000) செலவில் தேவ கோட்டை ராம. அரு. அரு. ராம. வால் மண்டபமும் அமைக்கப் பெற்றுள்ளன.

## 107. திருக்கானப்பேர்

(காளையார் கோவில்)

| | |
|---|---|
| சுவாமி பெயர் | காளையீசுரர், சுந்தரேசுரர், சோமேசுரர் |
| அம்மை பெயர் | சொர்னவல்லி, மீனாட்சி, சவுந்தரநாயகி . |

இத்தலத்தில் உள்ள சோமேசர் கோவில் அமராவதி புதூர் வயிநாகரம் வேங்கடாசலம் செட்டியாரால் ரூபாய் ஒரு லட்சம் (1,00,000) செலவில் திருப்பணி செய்யப் பெற்று, பார்த்திப தை 13-ம் நாள் (24-1-1886) கும்பாபி டேகம் செய்யப் பெற்றது.

காளையீசுரர் கோவில் தேவகோட்டை ஜமீந்தார் அழ. அரு. இராமசாமிச் செட்டியாரால் ரூபாய் இரண்டு லட் சத்து ஐம்பதினாயிரம் (2,50,000) செலவில் திருப்பணி செய் யப்பெற்றும், சொர்னவல்லியம்மை கோவில் தேவ கோட்டை தி. ராம. தி., ஷி சு. குடும்பத்தினரால் ரூபாய் எழுபத்தையாயிரம் (75,000) செலவில் திருப்பணி செய்யப் பெற்றும் விகாரி தை 23-ம் நாள் (22-1-1900) கும்பாபி டேகம் செய்யப் பெற்றுமுள்ளன.

சவுந்தரநாயகியம்மை கோவில் ஒக்கூர் சி. கரு. ஆ. கண்ணப்ப செட்டியாரால் ரூபாய் ஐம்பதாயிரம் (50,000)

